மலர் 16 இதழ் 25

# கல்கி

துன்முகி ௵ தை 7

## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.





# சிமெண்டுக்கும் அவனுக்கும் என்ன சம்பந்தம்?

அவன் இருக்கும் வீடு சிமெண்டினால் ஆனது. அவன் நடக்கும் பாதை, அவன் படிக்கும் பள்ளிக்கூடம், அவனுக்கு தேவையா யிருக்கும் ஆஸ்பத்திரி, நீர்ப் பாசனம், விளையாட்டு மைதானம், எல்லாம் சிமெண்டினால் ஆனவையே. அணைக்கட்டுகள், மின்சார நிலையங்கள், தொழிற்சாலைகள், தானியக் கிடங்குகள் எல்லாம் சிமெண்டினாலானவையே.

எதிர்கால முன்னேற்றத்திற்கு சிமெண்டின் தேவை அதிகரித்துக்கொண்டே இருக்கிறது. 1948ல் இருந்த தங்கள் உற்பத்தியை 1953க்குள் இரு மடங்காக்கிய அஸோஸியேட்டட் சிமெண்ட் கம்பெனிகள் அடுத்த ஐந்தாண்டுகளில் தங்களது உற்பத்தியை இன்னும் இரட்டிப்பாக்குவார்கள். இரண்டாவது ஐந்தாண்டு திட்டத்தின் வெற்றியும் இந்திய மக்களின் எதிர்காலமும் சுதந்திர முயற்சியின் போக்கையே பொறுத்து இருக்கும்.

எதிர் கால இந்தி யாவின் நிர்மாணத்தில் ஏசிசி உதவி செய்து வருகிறது.

வெளியிடுபவர்

அஸோஸியேடட் சிமெண்ட் கம்பெனிஸ் லிமிடெட்,

சிமெண்ட் மார்க்கெட்டிங் கம்பெனி ஆப் இந்தியா பிரைவேட் லிமிடெட்.



மலர் 16 | இதழ் 25

தமிழ்த்திரு நாடு தன்னைப் – பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

துன்முகி ௵ தை ௴ 7௳

# ஈடன் விலகினார்

பிரிட்டிஷ் பிரதமர் ஈடனுடைய நிலைமையைக் குறித்து வருந்துகிறோம். இப்பொழுது அவர் தம்முடைய பதவியிலிருந்து விலகியதற்குக் காரணம் அவருடைய தேக அசௌக்கியம் என்று சொல்லப்படுகிறது!

எகிப்தின்மீது எதிர்பாராத விதமாகப் போர் தொடுத்து ஒரு பைத்தியக்காரத்தனமான காரியம் செய்தாரல்லவா? இது அவரது வியாதியின் விளைவால் ஏற்பட்டதா? அல்லது மடமையின் காரணத்தால் வியாதி ஏற்பட்டதா? அல்லது அவரது தேகமும் மூளையும் ஒரே சமயத்தில் சீர்கெட்டனவா என்பவை யொன்றும் நமக்கு விளங்கவில்லை.

எனினும் ஈடனின் ராஜிநாமாவுடன் எகிப்து அநியாயம் முடிந்து மங்களம் பாடியாகிவிடும் என்று நினைத்தோம். அமெரிக்க ஜனாதிபதியின 'திடீர்ப் போக்கு' சமாதானத்தை விரும்பும் உலக மக்களுக்குக் கவலை தருவதாக இருக்கிறது. அமெரிக்க ஜனாதிபதி மத்திய கேந்திரத்தில் ராணுவத் துருப்புகளை அனுப்பி வைப்பதற்கு அமெரிக்க காங்கிரஸிடம் அனுமதி கோருகிறார். இது ஈடன் செய்தது சரி என்று பிரிட்டிஷ் மக்கள் எண்ணுவதற்கல்லவா இடம் தருகிறது. ஆனால் இதே தவறைப் பிரிட்டிஷ் பிரதமர் ஈடன் செய்தபோது, அமெரிக்க சர்க்கார் கண்டித்தார்கள்; அநியாயம் என்றார்கள். ஆனால் இன்றோ பிரிட்டிஷ் மக்கள், "நாங்கள் செய்தது தவறானால் இதை அமெரிக்க ஜனாதிபதி மட்டும் எப்படிச் செய்யலாம்? எங்கள்பேரில் அமெரிக்காவுக்குப் பொறாமையா? இது ஒரு சூழ்ச்சியல்லவா?" என்று எண்ணுகிறார்கள். ஏன், மேதாவிகளும்கூட மேற்கூறிய விதத்தில்தான் எண்ணுகிறார்கள்.

ஈடன் எகிப்துமீது போர் தொடுத்தபோது, அமெரிக்கா எடுத்துக் கொண்ட நிலையை இந்தியாவில் எல்லோரும் குதூகலமாகப் பாராட்டினார்கள். அமெரிக்க சர்க்காரின் தார்மிக முறையை வியந்து பேசி மகிழ்ந்தார்கள். இப்பொழுது அமெரிக்காவின் தார்மிகக் கொள்கை அத்தியாயம் முடிந்துவிட்டது. ஆக்கிரமிப்பு முறையை அமெரிக்காவும் மேற்கொண்டுவிட்டது. இதை இந்தியாவாவது வன்மையாக எடுத்துச் சொல்ல முடிகிறதா? இல்லை. ஏனெனில் பாரதம் அமெரிக்காவினிடமிருந்து இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்துக்கு ஏராளமாக நிதி உதவி பெறப் போகிறது. அந்த அமெரிக்க டாலருக்குப் பயந்து பாரதமும் வாய்மூடி மௌனியாக இருக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டிருக்கிறது.

ஈடன் கட்சியைச் சேர்ந்த கன்சர்வடிவ்கள், இப்பொழுது அமெரிக்காவின் செய்கையைப் பார்த்துத் தைரியமடைந்து விட்டார்கள். தங்கள் கட்சி நியாயம் தவறி நடந்து விடவில்லை; கட்சியும் பலஹீனமாகி விடவில்லை என்று எண்ணத் தலைப்பட்டு விட்டார்கள். அதனால் ஈடனின் கொள்கையை அனுசரிக்கும் மாக்மில்லன் அவர்களைத் தங்கள் பிரதமராகவும் நியமித்துக்கொண்டு விட்டார்கள்.

ஆனால் தொழிற் கட்சியினரோ, 'இது அக்கிரமம், மீண்டும் பொதுத் தேர்தல் நடத்தியாக வேண்டும்' என்று கூக்குர லிடுகிறார்கள். இந்தக் கூக்குரலில் முன்பிருந்த வன்மையில்லை. காரணம் தொழிற்கட்சித் தலைவர் கேட்ஸ்கில் "அமெரிக்கா செய்தது சரி" என்று ததாஸ்து பாடிவிட்டதுதான். தொழிற் கட்சியின் மற்றொரு முக்கிய தலைவரான பேவன் மட்டும்தான் அமெரிக்காவின் செய்கை தவறு என்று கண்டிக்கிறார். இதனால் இப்பொழுது தொழிற்கட்சியும் பிளவுபட்டு நிற்கிறது.

எதிர்க்கட்சி பிளவுபட்டு விட்டால் அது ஆளும் அக்கிரம கன்சர்வேடிவ் கட்சிக்குப் பலம்தானே! மொத்தத்தில் அமெரிக்க ஜனாதிபதி ஐஸன்ஹோவரின் திடீர்ப் பிரவேசச் செய்கை, பிரிட்டிஷ் மக்களின் தார்மிக உணர்ச்சியையும் நியாய மனப்பான்மையையும் மழுங்கடித்து விட்டது. தொழிற்கட்சிக்குள் பிளவு உண்டாக்கி விட்டது. இதையெல்லாம் பார்க்கும்போது ''அரபு மக்களே! உங்களுக்குக் கதிமோட்சம் இல்லையா? விடிவு காலமே இன்னும் வரவில்லையா?'' என்றுதான் அனுதாபப்பட வேண்டியிருக்கிறது.

# குழந்தைகளைக் கொல்லாதீர்கள்!

உலக சமாதானத்தை வளர்க்கும் தாய்க் குலத்தின் வெளியீடு ஒன்று வரப்பெற்றோம். பல தேசத்துத் தாய்மார்கள் சேர்ந்து தங்கள் பச்சிளங் குழந்தைகளின் சார்பில் உலக வல்லரசுகளுக்கு ஒரு வேண்டுகோள் விடுத்திருக்கின்றனர். அதில் பயங்கர அணுகுண்டுகளை நிறுத்தி விடும்படி மன்றாடிக் கேட்டுக் கொண்டிருக்கின்றனர். அந்த வெளியீட்டின் அட்டைச் சித்திரமே உள்ளத்தை உருக்கும் பான்மையில் இருக்கிறது. அது ஒரு வெண் சலவைச் சிற்பத்தின் புகைப்படம். அதை இந்தப் பாகத்திலேயே காணலாம்.

யுத்தம் என்பது நீண்ட நெடுங்காலமாக இருந்து வருகிறது. சரித்திரம் தோன்றிய காலத்துக்கு முன்பிருந்தே உலகில் யுத்தம் என்பது இருந்து வந்திருக்கிறது. அந்த யுத்தங்களில் எல்லாம் ராணுவத்தைச் சேர்ந்



தவர்கள் மட்டுமே பாதிக்கப்பட்டு வந்தனர். பெண்களோ, குழந்தைகளோ, வயது முதிர்ந்தவர்களோ அந்த யுத்தங்களில் பாதிக்கப்படவில்லை; கொலையுண்டதில்லை.

ஆனால் சென்ற நாற்பதாண்டுகளாக யுத்தத்தின் சரித்திரமே வேறு விதமாக இருக்கிறது. ஆகாய விமானங்களிலிருந்தும், நீர் மூழ்கிக் கப்பல்களிலிருந்தும் பயங்கரக் குண்டுகளை வீசி ஒரு பாவமும் அறியாத பாமர ஜனங்களையும் பச்சிளம் குழந்தைகளையும் பெண்களையும் கொல்வது வழக்கமாகி விட்டது. குழந்தைகளும் பெண்களுமே பாதிக்கப்படுவார்கள், உயிர் துறப்பார்கள் என்று நன்றாகத் தெரிந்து கொண்டே குண்டுகளை வீசி வருகிறார்கள். இதுதான் இன்றைய யுத்த முறையாகி விட்டது! அதிலும் செல்வமும் படைபலமும் பெற்ற மக்கள், நாகரிகம் நிறைந்தவர்களாகக் காட்சி தரும் மக்கள் அரக்கர்களாக மாறி விட்டார்களோ என்று எண்ண வேண்டியிருக்கிறது.

அது மட்டுமல்ல, இப்படிக் குழந்தைகளையும், நிராயுதபாணிகளையும் பெண்களையும் கொன்று குவிக்காமல் யுத்தமே நடத்த முடியாது என்கிற கொள்கை வேறு ஊர்ஜிதமாகி விட்டது!

இந்தக் கேவல நிலையை எடுத்துக் காட்டினால், செல்வமும் படைபலமும் பெற்ற 'நாகரிக' நாடுகளின் தலைவர்கள் என்ன சொல்கிறார்கள், தெரியுமா? ''நாங்கள் யுத்தத்தை அறவே நிறுத்திவிட முயற்சித்து வருகிறோம். அது கைகூடும் வரையில் இப்படித்தான் யுத்தம் நடத்தியாக வேண்டும்'' என்று சமாதானம் சொல்கிறார்கள்.

இதை ரொம்பவும் மேலான உண்மை என்று சில மேதாவிகளும் ஒப்புக் கொண்டு, 'ஆமாம்' பாட்டுப்பாடி வருகிறார்கள்.

''ஐயா! குறைந்த பட்சம் அணுகுண்டுகளையாகிலும் ஒழித்து விடுங்கள்; அவற்றை உற்பத்தி செய்வதை நிறுத்தி விடுங்கள். சோதனைகளை நிறுத்தி விடுங்கள்!'' என்று கூறினால், அதற்கும் ''நாங்கள்தான் யுத்தத்தையே நிறுத்திவிடப் போகிறோமே. யுத்தம் நின்று விட்டால் பிறகு இந்த அணுகுண்டுச் சோதனைகள், உற்பத்திகள் எல்லாமே நின்று போய்விடும்'' என்கிறார்கள்.

அப்படியாகிலும் யுத்தத்தை அறவே நிறுத்துவதற்கான முயற்சிகளைச் செய்து வருகிறார்களா என்றால் அதுவும் இல்லை. பேச்சில் மட்டும் ''யுத்தத்தை நிறுத்திவிட வேண்டும்'' என்று மந்திரம் சொல்வது போல் சொல்லிக் கொண்டு மற்றொருபுறம் மத்திய கிழக்கு நாடுகளுக்கு ராணுவத்துருப்புகளையும் ஆயுதங்களையும் அனுப்ப அனுமதி கோருகிறார் அமெரிக்க ஜனாதிபதி ஐஸன்ஹோவர்.

* * *

அணுகுண்டு சோதனைகளால் மட்டும் உலகத்தின் நீரும் காற்றும் கெடுவதில்லை. அணுசக்தியை ஆக்க வகையில் உபயோகப்படுத்தத் தொடங்கினாலும் உலகில் விளையக் கூடிய தீங்குகளுக்குக் கணக்கில்லை என்று ராஜாஜி ஓராண்டுக்கு முன்பே எச்சரிக்கை செய்தார். ராஜாஜி கூறியது உண்மை என்பதை உள்ளங்கை நெல்லிக்கனி போல டச்சு சர்க்காரின் நடவடிக்கை நிரூபித்து விட்டது.

ஜனவரி ஏழாம் தேதி டச்சு சர்க்கார் தங்கள் மக்கள் சபையில் பின்கண்டவாறு கூறியிருக்கிறார்கள்.

''அணுகுண்டு சோதனைகள் இன்று நடக்கும் வேகத்தில் இனியும் நடைபெற்று வந்தால்

## நல்ல செடி




திரு பி. டி. ராஜன் அவர்களைத் தலைவராகக் கொண்டு ஆரம்பமாகியுள்ள தேசிய நல்வாழ்வுச் சங்கத்துக்குப் பொதுமக்களின் ஆதரவு கிடைக்கலாம் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

---

உணவுப் பொருள்கள் விஷமயமாகாமல் தடுக்க நடவடிக்கை எடுக்கவேண்டியிருக்கும்.

ஒவ்வொரு அணுகுண்டு சோதனைக்குப் பிறகு, காற்றும், கடல் நீரும், மழை நீரும் ஆராய்ந்து பார்க்கப்பட்டன. அப்படிப் பார்த்ததில் ஒவ்வொரு முறையும் காற்றிலும், கடல் நீரிலும், மழையிலும் விஷம் ஏறிக்கொண்டு போயிருப்பதை நன்றாகத் தெரிந்து கொள்ள முடிந்தது. அணுகுண்டு சோதனைகளால் மட்டும் இப்படிக் காற்றும் நீரும் விஷமாகவில்லை. ஆக்க வேலைகளுக்காக நிர்மாணிக்கப்பட்டுள்ள அணுச் சாலைகளிலிருந்து வரும் அணுசக்திப் பொருள்களினாலும் காற்றிலும் நீரிலும் விஷம் கலந்து விடுகிறது.''

விஞ்ஞான அறிவும் ஆராய்ச்சிப் புலமையும் நிரம்பிய டச்சு சர்க்கார் இப்படிக் கூறுகிறது!

ஆகவே, இன்று நடுநிலைமை வகிக்கும் நாடுகள், சமாதானத்தை விரும்பும் நாடுகள் ஒருமுகமாக ஒரு விஷயத்தை வல்லரசுகளுக்கு வற்புறுத்தி எடுத்துச் சொல்ல வேண்டும்.

'' நீங்கள் யுத்தத்தை நிறுத்தப் போவதில்லை. அந்தப் பேச்சு எல்லாம் வீண் பேச்சு. உடனே அணுகுண்டு சோதனையையாகிலும் நிறுத்துங்கள். கண்மூடித்தனமாகப் பிரயோகிக்கும் எரிகுண்டுகளை உற்பத்தி செய்யாதீர்கள்'' என்று சொல்லிவிட வேண்டும்.

ஆனால் இப்படிச் சொல்வதற்கு ஏன் உலகில் எந்த அரசாங்கமும் முன்வரவில்லை என்பது தெரியவில்லை. சென்ற நூற்றாண்டு வரையில் நடத்திய போர்முறைகள் மட்டும் வைத்துக்கொண்டு புதிய நாசகர அணு-ஹைட்ரஜன் குண்டுகளை ஒழித்து விடுவது என்ற முடிவுக்கு ஏன் வரக்கூடாது? 'எதிரியின் கையைவிட என் கை எப்பொழுதுமே மேலோங்கியிருக்க வேண்டும்' என்ற ஆசையை விட்டு விட்டால் தான் இது முடியும்.

# வெள்ளி விழா வேண்டுகோள்

இந்திய சினிமாப் படங்கள் பேசத் தொடங்கி இருபத்தைந்து ஆண்டுகள் ஆகின்றன. இன்னும் பேசிக்கொண்டே இருக்கின்றன. சிற்சில சமயங்களில் அவை மேடைப் பிரசங்கிகள் சிலரைப்போல் அடுக்கு மொழிகளில்கூடப் பேசி நம்மைத் திணற அடித்து வருகின்றன. போகட்டும்; எப்படியோ பேசிப் பாடிப் பிழைத்துக் கொள்ளட்டும். வாயுள்ள பிள்ளைதானே பிழைக்கும்?

ஊமைச் சலனங்களாயிருந்த சினிமாப் படங்கள் பேசவும் பாடவும் தொடங்கி இருபத்தைந்து ஆண்டுகள் ஆகின்றன என்பதை

அறிந்து மகிழ்ச்சி அடைகிறோம். தமிழ்ப் படங்களும், ஹிந்திப் படங்களும், தெலுங்குப் படங்களும், வங்காளிப் படங்களும் ஒன்றை ஒன்று போட்டி போட்டுக் கொண்டு வெகு வேகமாக முன்னேறி வருகின்றன.

சண்டிதாஸ், துக்காராம், தியானேசுவர், அமிருத மந்தனம், அச்சுதகன்யா, பாய்ஜு பாவ்ரா, ராம ராஜ்யா, ஜனக் ஜனக், பர்ஸாத் போன்ற படங்கள் ஒன்றுக்கு நாலு தடவைகள் பார்த்து மகிழக் கூடிய மிக உன்னதமான படங்களாகும். இவற்றைப் போலவே தமிழில் சிந்தாமணி, மிஸ் மாலினி, ஔவையார் சாவித்திரி, மீரா, திருநீலகண்டர், பக்தசேதா, வாழ்க்கை, அந்த நாள், ஏழை படும்பாடு, மனோஹரா போன்ற படங்களும், தெலுங்கில் வந்தே மாதரம், தேவதா, சுமங்கிலி, கிரகலட்சுமி, மாலபில்லா, சம்சாரம், பக்த போதனா போன்ற படங்களும் பார்க்கப் பார்க்கப் பரவசமளிக்கக் கூடியவையாகும்.

* * *

படாதிபதிகள் சிலர் தாங்கள் எடுக்கும் படங்களில் சிலவற்றை இருபத்தைந்து வாரங்கள் ஓட்டி அந்தப் படங்களுக்கு வெள்ளிவிழாக் கொண்டாடுவதும், பிறகு வெள்ளி விழாக் கொண்டாடிய படம் என்று விளம்பரப்படுத்தி மேலும் சில வாரங்கள் ஓட்டுவதும் உண்டு. படங்களுக்கு வெள்ளி விழாக் கொண்டாடுவதைப் போல் சென்ற வாரம் இந்திய டாக்கித் தொழிலுக்குப் பல நகரங்களில் விமரிசையாக வெள்ளி விழாக் கொண்டாடி யிருக்கிறார்கள்.

சென்னை நகரில் நடைபெற்ற மேற்படி வெள்ளி விழாக் கொண்டாட்டத்தைத் தொடங்கி வைத்த திருவனந்தபுரம் மகாராணி ஸ்ரீமதி சேது பார்வதிபாய் அவர்கள் பேசும் படங்களின் முன்னேற்றத்தைக் குறித்துப் பெருமைப்பட்டிருப்பதுடன் அவற்றின் தரம் உயர வேண்டியதின் அவசியத்தையும் வற்புறுத்தி யுள்ளார்.

உலகத்திலேயே அதிகப்படியான சினிமாப் படங்கள் எடுக்கும் நாடுகளில் இந்தியா மூன்றாவது ஸ்தானம் வகிக்கிறது. இந்த மாபெரும் தொழிலில் கோடி கோடியாகப் பணம் புரள்கிறது. தமாஷா வரி மூலமும், வருமான வரி மூலமும் சர்க்காருக்கும் ஏராளமான பணம் கிடைக்கிறது. படாதிபதிகள் இந்தத் தொழிலில் பெரும் மூலதனத்தை ஈடுபடுத்தி லட்சக்கணக்கில் சம்பாதிக்கிறார்கள். நூற்றுக்கணக்கான நடிக நட்சத்திரங்களும், ஆயிரக்கணக்கான தொழில் நிபுணர்களும், இதர சிப்பந்திகளும் தொழிலாளர்களும் இந்தத் தொழில் மூலம் பெரும் பலனை அடைந்து வருகிறார்கள். இந்தத் தொழிலை ஒட்டி 'போஸ்டர்' அச்சுக்கலையும் அபரிமிதமாக வளர்ந்து வருகிறது. அதன் மூலமாக ஆயிரக்கணக்கான பேர் பயனடைந்து வருகிறார்கள்.

கலைஞர்களும், சினிமாத் தொழிலில் ஈடுபடுபவர்களும் பொருளாதாரத் துறையில் பயனடைய வேண்டியது மிகவும் அவசியம்தான். ஆயினும், அதற்காகப் பண வருவாய் ஒன்றையே பிரதான லட்சியமாகக் கொண்டு படங்கள் எடுப்பதை நம் பட முதலாளிகள் தவிர்க்க வேண்டும். இந்திய நாட்டின் பண்பும், கலாசாரமும், கலைத்திறனும், புராதன பெருமைகளும் பிரதிபலிக்கக்கூடிய படங்களை எடுக்க முன்வர வேண்டும். அத்தகைய படங்களில் சிறந்த கருத்துக்களும் கதை யம்சமும் பொருந்தி யிருக்க வேண்டும்.

இவையெல்லாம் காட்டிலும் நம் குடும்பத்திலுள்ள அத்தனை பேரும் சென்று வெட்கப்படாமல் பார்க்கக்கூடிய முறையில் உயர்தரமா யிருக்கவேண்டும். இத்தகைய படங்களை எடுத்து இந்திய நாட்டின் பெருமையை உயர்த்தும் அரியபணியில் நமது படாதிபதிகள் ஈடுபடவேண்டுமென்று இந்த வெள்ளி விழா சந்தர்ப்பத்தில் வேண்டிக் கொள்கிறோம்.

# நகரசபையின் கோரிக்கை

சென்னை நகரசபை நிர்வாகிகள் சமீப காலத்தில் இரண்டு நல்ல காரியங்களைச் செய்தார்கள். ஏழைகளின் வாகனமான சைக்கிளுக்கு விதிக்கப்பட்டிருந்த வரியைச் சென்ற வருஷத்தில் ரத்து செய்தார்கள். இந்த வருஷத்தில் புதிய வரிகள் எதுவும் விதிக்காமல் சென்னை நகரப் பொதுமக்கள் மீது கருணை காட்டி யிருக்கிறார்கள்.

சென்ற வாரம் கார்ப்பொரேஷன் கமிஷனர் 1957—58-ம் வருஷத்திய வரவு செலவுத் திட்டத்தை வெளியிட்டுள்ளார். அதன்படி வருமானத்தைக் காட்டிலும் செலவு அதிக

## 'கல்கி' சர்வகலாசாலை இதழ்

பாரத நாட்டில் சர்வகலாசாலைகள் ஆரம்பித்து நூறு ஆண்டுகள் முடிந்து விட்டன என்பதை நினைக்கும்போது ஆச்சரியமாகத்தான் இருக்கிறது. சர்வகலாசாலையினர் இந்த நூற்றாண்டு வைபவத்தைக் கலைமகளின் திருவிழாவாகவே கொண்டாடப் போகிறார்கள். அதையொட்டி வரும் 27-1-57 'கல்கி' இதழ் சர்வகலாசாலை இதழாக வெளிவருகிறது.

மேற்படி இதழில் பல பேராசிரியர்களின் விசேஷக் கட்டுரைகளும் வெளியாகின்றன என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

மாகி ரூ 20,98,350 துண்டு விழுகிறது. அப்படியிருந்தும் புது வரிகள் விதிக்காதது போற்றுதற்குரிய விஷயம் அல்லவா?

இத்தகைய திருப்திகரமான நிலைமை அதிக காலம் நீடிக்குமா என்பது பற்றி இப்போது எதுவும் சொல்லுவதற்கில்லை. ஏனெனில், வருமானத்தைப் பெருக்குவதற்காகச் செய்யும் மற்ற முயற்சிகள் வெற்றி பெறாவிடில், புதிய வரிகள் விதிக்கும்படி நேரலாம் என்று கமிஷனர் பயமுறுத்தாமலும் விடவில்லை!

கார்ப்பொரேஷன் சிப்பந்திகளுக்குக் கொடுக்கப்படும் கிராக்கிப் படியை அதிகமாக்கியதால் கார்ப்பொரேஷனுக்கு 16 லட்சம் ரூபாய் அதிகச் செலவு ஏற்பட்டுள்ள தென்றும், வரவு செலவுத் திட்டத்தில் துண்டு விழுவதற்கு அது ஒரு முக்கிய காரணம் என்றும் கமிஷனர் கூறியுள்ளார். மேற்படி செலவினத்தில் பாதியைச் சர்க்கார் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று கமிஷனர் கேட்டுக்கொண்டிருப்பதுடன், கார்ப்பொரேஷன் நிதி நிலைமை சீர்ப்படுவதற்கான சில யோசனைகளையும் கூறியுள்ளார்.

அதாவது மோட்டார் வரி, பெட்ரோல் வரிகளின் மூலம் 1956-ல் சென்னை சர்க்காருக்கு 79 லட்சம் ரூபாய் வருமானம் கிடைத்திருக்கிறது. இந்தத் தொகையில் பாதியாவது கார்ப்பொரேஷனுக்குக் கிடைக்க வேண்டாமா என்று கமிஷனர் கேட்டிருக்கிறார். மேற்படி கோரிக்கை நியாயமற்றதென்று யாராவது கூற முடியுமா?

சென்னை நகருக்கு வெளியே ரஸ்தாக்களின் சீர்திருத்த விஷயமாகச் சர்க்கார் ஆறு கோடி ரூபாய் செலவு செய்கிறார்கள். சென்னை நகரின் சுமார் அறுநூறுமைல் நீளம் கொண்ட ரஸ்தாக்களின் பாதுகாப்புக்காகக் கார்ப்பொரேஷன் 55 லட்சம் ரூபாய் செலவு செய்கிறது. இந்தச் செலவில் பெரும் பகுதியை நியாயமாகச் சர்க்கார்தான் ஏற்றுக் கொள்ள வேண்டும். ஏனெனில், சர்க்கார் நடத்தும் பஸ் போக்கு வரத்தின் மூலம் சர்க்காருக்கு லட்சக் கணக்கில் வருமானம் கிடைத்து வருகிறது அல்லவா? தவிர சர்க்கார் பஸ் போக்குவரத்தால் சென்னை நகரச் சாலைகள் படும்பாடு கொஞ்ச நஞ்சமல்ல.

ஆனால், ரஸ்தா பராமரிப்புக்காக ஆகும் செலவில் பெரும் பகுதியைச் சர்க்கார் கொடுக்க வேண்டும் என்று கூடக் கமிஷனர் கூறவில்லை. அந்தச் செலவினத்தை ஒட்டி வருஷந்தோறும் முப்பது லட்சம் ரூபாய் கொடுத்தால் போதும் என்றும், ரஸ்தா பராமரிப்புக்காகச் சர்க்கார் அத்தொகை கொடுத்து வருவார்களாயின், தாற்காலிகமாகப் புது வரிகள் விதிக்க வேண்டிய அவசியம் இராதென்றும் கமிஷனர் குறிப்பிட்டிருக்கிறார். கமிஷனர் கோரும் அத் தொகையைக் கொடுத்து உதவுவது சர்க்காருக்கு ஒரு பெரிய காரியமல்ல.

சுமார் 15½ லட்சம் ஜனத்தொகையுள்ள சென்னை நகரில் 79,270 பேர்தான் சொத்து வரி செலுத்துகிறார்கள் என்றும், புது வரிகள் விதிக்காமல் மேற்கொண்டு மக்களுக்குப் பல வசதிகளும் செய்து கொடுப்பது அசாத்தியம் என்றும் கமிஷனர் கூறுகிறார்.

இந்த வாதம் ஒப்புக்கொள்ளத் தக்கதல்ல. அதற்கு மாறாகப் புது வரிகள் விதிக்கக்கூடாது என்பதையே மேற்படி புள்ளி விவரங்கள் வலியுறுத்துகின்றன. அதாவது இந்நகரில் எண்பதாயிரம் பேரைத் தவிர மற்றவர்கள் சொத்து இல்லாத ஏழைகளும் மத்தியதர வகுப்பினரும் ஆவர் என்பதையே அந்தப் புள்ளி விவரங்கள் பறைசாற்றுகின்றன. தவிர, ஒரு புறம் மக்களின் நல்வாழ்வுக்கான வசதிகளை அதிகப்படுத்துவதாகச் சொல்லிக் கொண்டு, மற்றொருபுறம் புதிய புதிய வரிகளை விதிப்பதால் மக்களுக்கு உண்மையான நலன் ஏற்பட முடியாது. எனவே, புதிய வரிப் பளுவுக்கு மக்கள் இலக்காகாமல் தவிர்க்க வேண்டுமாயின், கமிஷனரின் நியாயமான கோரிக்கைக்குச் சர்க்கார் இணங்குவதைத் தவிர வேறு வழியில்லை.

அட்டைப்பட விளக்கம்

# சிரஞ்சீவிக் காதலர்கள்

ஒரு நாட்டின் புராதன பெருமையைப் பற்றித் தெரிந்து கொள்ளவேண்டுமானால் அந்த நாட்டினர் சொல்லித்தான் தெரிந்துகொள்ள வேண்டும். அல்லது புத்தகங்களில் படித்துத்தான் புரிந்துகொள்ள வேண்டும். ஆனால் நமது தமிழ் நாட்டின் புராதன பெருமையைப் பற்றியோ, அதனுடன் தொடர்பு கொண்டிருந்த நாட்டின் பெருமையைப் பற்றியோ தெரிந்துகொள்ள அவ்விதமெல்லாம் சிரமப்பட வேண்டியதில்லை. கோவில்களில் செதுக்கி வைத்திருக்கும் அபூர்வ சிற்பங்களை நேருக்கு நேர் பார்த்தே தெரிந்துகொள்ளலாம். அத்தகைய அற்புதமான சிற்பத்தின் மூவர்ணச் சித்திரம் ஒன்று இவ்வார 'கல்கி' இதழ் அட்டையை அலங்கரிக்கிறது. ஓவியர் மணியம் ஈழ நாட்டுக்குச் சென்றிருந்தபோது நேரில் பார்த்து எழுதியது. தமிழ் நாட்டில் சோழப் பேரரசு மகோன்னதம் அடைந்திருந்த காலத்தில், சோழர்களின் ஆட்சியில் ஈழநாடு ஒன்றாக இணைந்திருந்தது. அந்தக் காலத்தில் தமிழ்நாட்டில் சிற்பக் கலை உச்சநிலை அடைந்திருந்தது. அப்பொழுது சோழ நாட்டிலும் ஈழ நாட்டிலும் பல கோயில்கள் கட்டப்பட்டன. அப்படிக் கட்டப்பட்ட கோயில் ஒன்றின் சுவர்களில் காணப்படும் சிரஞ்சீவிக் காதலர்களின் சிற்பம்தான் இவ்வார அட்டையில் திகழ்கிறது. ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் நமது மூன்னோர்கள் இத்தகைய தெய்விக சௌந்தர்யம் பொருந்திய சிலைகளை அமைத்தார்கள் என்பதை எண்ணியே தமிழ் கூறும் நல்லுலகத்தில் வாழும் தமிழ் மக்கள் எல்லாரும் பெருமை அடையலாம். இது போன்ற இன்னும் எத்தனை எத்தனையோ சிற்ப சித்திர அற்புதங்களையெல்லாம் பசிரதனின் ஈழ நாட்டுப் பிரயாணத் தொடர் கட்டுரையில் நேயர்கள் பார்த்து மகிழலாம்.

# சத்தியாக்கிரகப் போராட்டம்

கொழும்பு, ஜனவரி 9 உ

இந்த வாரம் யாழ்ப்பாணத்தில் இளைஞர்கள் முற்றிலும் எதிர்பாராத விதமாகச் சத்தியாக்கிரகப் போராட்டத்தைத் திடீரென்று ஆரம்பித்தார்கள். தமிழ் மொழியை ஒதுக்கிச் சிங்களத்தை மட்டும் ராஜாங்க மொழியாக்கும் தனிச் சிங்களச் சட்டத்தை அரசாங்கம் இயற்றியதைப் பின்பற்றி மோட்டார் வாகனங்களின் இலக்கத் தகடுகளில் ''ஸ்ரீ'' என்ற சிங்கள எழுத்தைப் பொறிக்கத் தலைப்பட்டனர். இதைக் கட்சி பேதமில்லாமல் சகல தமிழ்த் தலைவர்களும் கடுமையாக எதிர்த்தும்கூடப் புதிய கார்களுக்கெல்லாம் சிங்கள இலக்கத் தகடுகளே வழங்கப் படுகின்றன. இம்மாதிரி சிங்கள இலக்கத் தகடு உடைய ஒரு காரை யாழ்ப்பாணம் சிறைச்சாலை சூப்பிரண்டெண்ட் வாங்கினார். யாழ்ப்பாணத்துக்கு வந்த சிங்கள இலக்கத் தகடு உள்ள கார் இது ஒன்றேயாகும்.

இவ்வாரம் சிறை சூப்பிரண்டெண்ட் தமது புதிய காரில் சிறைச்சாலைக்குப் போகப் புறப்பட்டபொழுது சுமார் நூறு இளைஞர்கள் அந்தக் காரை ரஸ்தாவில் போகவிடாமல் வழிநெடுகப் படுத்துக் கொண்டு சத்தியாக்கிரகம் செய்தனர். காரை வீட்டுக்குள் திருப்பிக்கொண்டு போவதைத் தவிர சிறைச்சாலை சூப்பிரண்டெண்டுக்கு வேறு வழியில்லாமற் போயிற்று. அந்தக் காரை அரசாங்கம் தமக்குக் கடனுக்கு அனுப்பி வைத்திருப்பதினால் அதை விற்பனை செய்ய முடியாதென்று சூப்பிரண்டெண்ட் அறிவித்திருக்கிறார். இதற்கிடையில் சிங்கள ''ஸ்ரீ'' இலக்கத் தகட்டை எதிர்த்துச் சகல தமிழ்க் கட்சிகளும் கட்டுப்பாடாக ஒரு சத்தியாக்கிரக இயக்கத்தை ஆரம்பிக்கப் போவதாகத் தலைவர்கள் அறிவித்திருப்பதை முன்னிட்டு இளைஞர்கள் திடீரென்று ஆரம்பித்த போராட்டத்தைத் தாற்காலிகமாகநிறுத்தி வைத்திருக்கிறார்கள். இதற்கிடையில் 19ம் தேதி ஒரு பெரிய போராட்டத்தை ஆரம்பிக்கத் தமிழ்த் தலைவர்கள் கூடிப் பேசி வருகிறார்கள்.

* * *

இவ்வாரம் இலங்கை தொழிலாளர் காங்கிரஸ் தலைவர்களான திரு எஸ். தொண்டமானும், திரு வி. அண்ணாமலையும் ஒரு தோட்டக் கூட்டத்தில் பேசுவதற்குச் சென்ற பொழுது தொழிலாளர் அளவுகடந்த உற்சாகத்துடன் தலைவர்களை யானைகள் மீது அமர்த்தி,கோலாகலமாக அழைத்துச் சென்றனர். காங்கிரஸிடமும் அதன் தலைவர்களிடமும் மக்களுக்கு எவ்வளவு பக்தியும் விசுவாசமும் இருக்கின்றனவென்பதை இந்தச் சம்பவம் எடுத்துக் காட்டுவதா யிருந்தது.

* * *

ஜனாப் ஏ. அஸீஸ் தலைமையிலிருக்கும் காங்கிரஸின் மற்றொரு பிரிவினர் மார்ச்சு மாதம் 15, 16, 17ம் தேதிகளில் தங்களுடைய வருடாந்திர மகாநாட்டை நாவலப்பிட்டி என்னுமிடத்தில் நடத்துவதென்று தீர்மானித்திருக்கிறார்கள். தொழிலாளர் இயக்கத்துக்காகத் தனது உயிரையே அர்ப்பணித்த ஒரு தியாகியின் பெயரைக் காங்கிரஸ் மண்டபத்துக்கு வைப்பதென்றும் வெளிநாடுகளிலிருந்து பல தொழிலாளர் இயக்கத் தலைவர்களைத் தருவிப்பதென்றும், ஒரு பொருட்காட்சியை நடத்துவதென்றும் காரியக் கமிட்டி தீர்மானித்திருக்கிறது.

* * *

இந்திய லோக சபையின் சபாநாயகர் திரு எம். அனந்தசயனம் அய்யங்காரும் மேற்கு வங்காள சட்டசபை சபாநாயகர் திரு எஸ். கே. முகர்ஜியும் இவ்வாரம் இலங்கைக்கு விஜயம் செய்திருக்கிறார்கள். அவர்களுக்குத் திரு சிதம்பரமும் தாற்காலிக இந்திய ஹைகமிஷனரும் இந்தியன் கிளப்பைச்சேர்ந்தவர்களும் வரவேற்பு உபசாரங்கள்நடத்தினர். கிழக்கு ஆசியா யுவர்களின் பொறுப்புகளைப் பற்றி அகில இலங்கை முஸ்லிம் வாலிபர் சங்கத்தில் திரு அய்யங்கார் ஒரு அருமையான சொற்பொழிவு நிகழ்த்தினர்.

* * *

கொழும்பு ஜிந்துப்பிட்டி திரு சிவசுப்பிரமண்ய சுவாமி கோவிலில் திருவாவடுதுறை ஆதீன வித்வானும் மதுரை ஆதீன சித்தாந்த சைவப் புலவருமான குலசை திரு வீர சிவசுப்பிரமண்யம் சென்ற சில தினங்களாகப் பெரிய புராணத்தைப் பற்றி ஒரு தொடர்ப் பிரசங்கம் செய்து வருகிறார்.

— ரஜனி



உற்சாகம் செழித்திருக்க

புது சக்தியை அளிக்கும்

## பை-கோலேட்ஸ்

முறையாக உபயோகியுங்கள்

கெடுக்க முடியாத புது சீலுடன்



# நன்மதிப்பு வாய்ந்த தயாரிப்புகள்

ஒவ்வொரு பிரபாத் தயாரிப்பும்







* மிகுந்த திருப்தி அளிப்பது
* நீடித்து உழைக்கிறது
* மிகுந்த சிக்கனம் அளிப்பதென நிரூபித்துள்ளது

இந்தியா மற்றும் வெளிநாடு முழுவதும் அதிக விற்பனையாகிறது





காலம் மீதமாகிறது



பணம் மிச்சமாகிறது

## பிரபாத்

* ஸ்டவ்ஸ்
* லேண்டர்ண்ஸ்
* மேண்டில்ஸ்
* ப்ளோலேம்ப்ஸ்




தயாரிப்பவர்கள்:

GUJARAT

## பிரபாத் பிராடக்ட்ஸ் கோ.,

நோபின் சேம்பர்ஸ், பார்ஸி பஜார் தெரு, போர்ட், பம்பாய்-1.




தெருவில், நாலைந்து சிறுமியர் மண் வீடு கட்டி விளையாடிக் கொண்டிருந்தார்கள். திண்ணையிலே உட்கார்ந்து, விளையாட்டைப் பார்த்துக் கொண்டிருந்தேன்.

எதிரே இருந்த மூங்கில் முள்வேலிப் பொத்தலின் வழியாக, துடிக்கின்ற பாம்பைப் போல் சீறிக் கொண்டு வந்தது மேல் காற்று. புளியம்பழுப்பும், பூவரசத்தழையும் தெருவிலே சுழன்றன. மேலே, காற்றில் அலைப்புண்ட பெரிய, மிகப் பெரிய செம்பரத்தைப் பூவைப் போல், செவ்விதழ்களை உதிர்த்தது அந்திப்பொழுது.

இதையெல்லாம் அச்சிறு பெண்கள் கவனிக்கவில்லை. பொழுது சாய்வதற்குள், வீட்டைக் கட்டி முடிக்க வேண்டும். அந்த ஒரு கவலைதான் அவர்களுக்கு. பறந்து பறந்து மண்ணையும் மணலையும் குவித்தார்கள். காற்றிலே படபடவென்று ஆடிய பாவாடையையும், தாவணியையும் இழுத்துப் பிடித்துக் கொண்டார்கள். கலைந்து முகத்திலே விழுந்த கூந்தலை ஒதுக்கி விட்டுக் கொண்டார்கள். ஓடி ஓடிப் பாடுபட்டார்கள். குவித்த மணலை, கருள் கருளாகப் பனிபோல் எழுப்பி, அவர்கள் கண்ணிலே தூவியது காற்று. 'சனியன் பிடித்த காற்றே' என்று சிரித்தனர் சிறுமியர். 'என்னடி சிரிப்பு, நேரமாச்சு, வேலையைப்பார்' என்றாள் காரியத்திலே கண்ணுடைய 'நாற்றுக்கால'ச் சிறுமி ஒருத்தி. 'ஆமாம், ஆமாம்' என்று ஒப்புக் கொண்டவர்கள் போல, மலர்ந்த முகத்துடன், வேலையில் முனைந்தனர் மற்றவர்கள்.

செவ்வான நெருப்பு வெள்ளம் வற்றியது. அதிலிருந்து தெறித்து விழுந்த துளிகளைப் போல, மேலே நட்சத்திரங்கள் ஒன்றிரண்டு தோன்றின. வீட்டுத் திண்ணைகளில் அகல் விளக்குகள் கண் சிமிட்டின. சிறுமியர் வீடு கட்டி முடித்து விட்டார்கள். ஒரு பிடி உயரத்துக்குச் சுற்றிலும் மணற்சுவர், வாசலில் ஆளோடி, திண்ணை, உள்ளே கூடம், முற்றம், அங்கணம், சமையல் அறை, பின்புறம் கிணறு. ஆம், சமையல் அறையும் கிணறும் இல்லாமலா போகும், கொத்துவேலை செய்தது பெண்கள் அல்லவா? சமையல் அறையில் அடுப்பு வேறே. அடுப்பில் நாலைந்து சர்க்குச்சிகள், அடுப்புஎரிவதாகப் பாவனை. அடுப்பின்மேல், மரச் செப்பு, அதுதான் சோறு கொதிக்கும் வெண்கலப் பானை. ஒவ்வொரு அறையின் மத்தியிலும் ஒரு பூவரசம்பூ. கிணற்றுக்கு சர்க்குச்சியால் ராட்டினம். கட்டிய வீட்டில் பழுது ஒன்றுமே இல்லை. இனி, அதைச் சுற்றி நின்று, விளையாட வேண்டியதுதான் பாக்கி. ஆனால் அதற்குள் இரவு வந்து விட்டது. வீட்டை அழகாக அமைத்து முடித்தோம் என்ற பெருமை ஒரு புறம், இருட்டி விட்டதே என்ற கவலை மறுபுறம் சிறுமியர்களுக்கு.

'இப்படியே இருக்கட்டும். நாளைக்கு வந்து இங்கே விளையாடலாம்' என்றாள் ஒருத்தி. வீட்டைக் கண் கொட்டாமல் பார்த்து நின்ற சிறுமியர் தலை அசைத்தார்கள். 'இருட்டிப் போச்சே, அம்மா தேடுவாள்' என்றாள் இன்னொருத்தி. எல்லோருக்கும் அதே எண்ணந்தான். இருந்தாலும் ஒருவருக்காவது தாங்கள் கட்டிய மணல் வீட்டை விட்டுப் போக மனம் வரவேண்டுமே. அதுதான் இல்லை.

சற்று நேரம் தயங்கித் தயங்கி நின்றனர். பிறகு ஒவ்வொருவராக, தாங்கள் கட்டிய வீட்டைத் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டு கலைந்தனர். அவர்கள் போன சிறிது நேரத்துக்கெல்லாம், ஓவென்று இரைந்து தாவிவந்த மேல் காற்று, ஒரு நொடிப் பொழுதில் தன் பேய்க் கையால் அந்த மணல் வீட்டைக் கலைத்து, பூவரச மலர்களை உருட்டிக் கொண்டு சென்றது.

என் மனத்திலே விவரிக்க முடியாத ஒரு கலக்கம். நாமுந்தான் நாள்முழுதும் வீடு கட்டுகிறோம். எத்தனை திட்டங்கள் போடுகிறோம்—அரசியல், பொருளாதாரம், கலை, சமுதாய இயல், விஞ்ஞானம், எந்தத் துறையானால் என்ன, திட்டங்களுக்குக்குறைவுண்டா? பொழுது சாய்வதற்குள் அவற்றை நிறைவேற்றத்தான் எவ்வளவு பாடுபடுகிறோம்! ஒவ்வொருவரும் தத்தமது போக்குக்கு இசைந்த வீட்டை எழுப்புகிறோம். பணம், பதவி, அதிகாரம், அறிவு, அழகு, நமது வீடுகள்தாம் எத்தனை விதம். ஒவ்வொரு விதத்திலுந்தான் எத்தனை வகை! ஆனால் இரவு வருகிறது, வரும் என்பது நமக்குத் தெரியும். வரும்போது இவற்றை விட்டுப் போக மனம் மட்டும் வருவதில்லை.

நிறைந்த செல்வமும், சுகபோகங்களும் உடையவர்களுக்குத்தான் இப்படி என்று எண்ணுகிறீர்களோ என்னவோ? நான் அப்படி எண்ணவில்லை.

'சாவின் நடனம்' என்ற ஜர்மன் நாடகம் ஒன்று பல வருஷங்களுக்கு முன் நான் பார்த்தது. சிறிய நாடகம், அதில் ஒரு காட்சி. மாரிக்காலம், ஒரே பனி, வெடவெடவென்று நடுக்குகின்ற குளிரில், மாதாகோவில் வாசலில் பிச்சைக்காரன் ஒருவன் நிற்கிறான். அவனுடைய கந்தல் சட்டை ஏதோ மானத்தைக் காக்கிறது. வயிற்றில் பசி வாளாய் அறுக்கிறது. உடம்பைத் தொழுநோய் பிய்க்கிறது. 'கடவுளே, சாவு வராதா!' என்று புலம்புகிறான் அவன்.

சாவு வருகிறது, மனிதவடிவம் தாங்கி.

'ஐயா, பிச்சை' என்று கை நீட்டுகிறான் குளிரிலும் வேதனையிலும் நடுங்கும் ஏழைப் பிச்சைக்காரன். 'பசி காதை அடைக்கிறது. ஐயா! ஏழை முகம் பாருங்கள். வேலை செய்து பிழைக்க முடியாத நொண்டி, ஐயா!' என்று திணறித்திணறி நடுங்கும் குரலில் ஏதோ முனகுகிறான்.

சாவு—சாவும் இந்த நாடகத்தில் ஒரு பாத்திரம் — பேசுகிறது :

'வா, தம்பீ! பசியில்லாத ஊருக்கு அழைத்துப் போகிறேன். வருகிறாயா?'

'பசியில்லாத ஊரா?' பிச்சைக்காரனுடைய பஞ்சடைந்த கண்கள் ஆச்சரியத்தால் விரிந்தன.

'ஆமாம்! அங்கே பசி இல்லை, குளிர் இல்லை. இரவில்லை. பனியில்லை. ஏழை பணக்காரன் என்ற பேதம் கிடையாது. நீ மாத்திரம் வருவதானால்...'

'எனக்கு என்ன பைத்தியமா, மாட்டேன் என்று சொல்ல? வருகிறேன், வருகிறேன். ஆனால் அந்த ஊர் எங்கே இருக்கிறது? அதன் பெயர்?'

'பக்கத்திலேதான் இருக்கிறது. அருகில் வா, சொல்கிறேன்' என்று கனிவோடு பேசுகிறது சாவு; 'அந்த ஊரின் பெயர் மரணம்.'

'அடேயப்பா, எனக்கு வேண்டாம்... சாகவா....? ஐயோ....' என்று ஓட முயல்கிறான், சற்றுமுன் சாவை வரவேற்ற அந்தப் பிச்சைக்காரன். சாவு அவன் கையைப் பற்றி மெல்ல அழைத்துச் செல்கிறது.

தான் கட்டும் மணல் வீடான இந்த வாழ்க்கையில் உயிருக்கு எவ்வளவுபிடிப்பிருக்கிறது என்பது தெரிகிறதல்லவா?

ஆனால் இந்த மண்ணுலக வாழ்க்கை என்பது மணல் வீடுதானா? அப்படியும் சொல்லி விடுவதற்கில்லை. தன் வயிற்றைக் கழுவுவதற்கும், தன்னைப் பாதுகாத்துக் கொள்வதற்கும் மனிதன் படும்





சகிக்க முடியாத உபாதை: தூக்கமும் கிடையாது: சுகமான நித்திரைக்கும் உபாதை நிவர்த்திக்கும்

எப்ரிலைம்

# EPHRILIME




நீண்ட காள்பட்டதும், மிக்க உபாதை தரக்கூடியதுமான மார்ச்சளி, ஆஸ்த்மா முதலிய நோய்களுக்கு ஓர் சிறந்த ஹானியற்ற மருந்து.

**யூனியன் டிரக் கம்பெனி லிட்.**

மதராஸ் டிப்போ:

2, ஜோன்ஸ் லேன் :: மதராஸ்–1

# சுலேகா

ரிஜிஸ்டர்டு

**பேனுக்கள்**

**இருப்திகரமான சேவைக்கு**




*Sole Distributors :*

**PENMAN'S INDUSTRIAL SERVICES**

KANDIVLI. BOMBAY (S. D.)





**கூந்தல் மற்றும் மூளை அபிவிருத்திக்கான தைலம்**

செழுமையாகக் கூந்தல் வளர உதவுகிறது. வழுக்கையைத் தடுப்பதுடன் கேசம் உதிர்வதையும் நிறுத்துகிறது. ஞாபக சக்தியை அதிகரித்து ஆழ்ந்த நித்திரையை அளிக்கிறது. எல்லோருக்கும் எக்காலத்திலும் ஏற்றது.

பெரிய பாட்டில் ரூ. 3-8-0
சிறிய பாட்டில் ரூ. 2-0-0

எங்கும் கிடைக்கும்




**ராம்தீர்த யோகாஸ்ரமம்**

[illegible]-14. (C. Rly)

ஆரோக்கியமாகவும், திடமாகவும் இருக்க [illegible] அனைப் படத்திற்த எழுத்துக்கள், தபால்செலவு கூலிட ரூ. 1-14-0. மணியார்டர் மூலம் அனுப்பிப் பெற்றுக் கொள்ளவும். வீட்டிலேயே ஆசனங்கள் சுலபமாய் பழகலாம்.

சென்னை டெப்போ:

4/441, தங்கசாலைத் தெரு, சென்னை

# பிப்ரவரி 1 முதல்



அன்னபூர்ணாவின்

# எங்கள் வீட்டு மஹாலக்ஷ்மி

டைரக்ஷன் A. சுப்பாராவ் · வசனம் ஸ்ரீதர் · தயாரிப்பு D. மதுசூதன ராவ் B.A.

ஸ்டூடியோ வாஹினி

பாடல்கள்
உடுமலை நாராயண கவி · மருதகாசி · K.S. கோபாலகிருஷ்ணன்



விநியோகஸ்தர்கள்:
ஸ்ரீ வெங்கடேசா பிக்சர்ஸ்
28, பாலாஜி நகர், ராயப்பேட்டை.... மதராஸ், 14

பாட்டைப் பார்த்தால், அவனுடைய வாழ்க்கை மணல் வீட்டைவிட அற்பமாய்த்தான் தோன்றுகிறது. ஆனால், வாழ்க்கை இந்தச் சிறு முயற்சியோடு நின்றுவிடுகிறதா? இல்லை. மண்ணுலகந்தான், சிறிது நேரந்தான் இங்கே இருக்கப் போகிறோம், இருந்தாலும் இது எவ்வளவு அழகுடையதாய் இருக்கிறது! கந்தர்வ லோகத்தின் சாயல் இங்கே படாமலா இருக்கிறது! அதை வடிவாக்கக் கலைஞன் முயல்கிறான். அவனும் மனிதன்தானே! கவிதை பிறக்கிறது, இசை மலர்கிறது. சித்திரம் வண்ணமயமாய்ப் பொலிகிறது, சிற்பம் வடிவிலே தோய்கிறது. நடனம் சுழல்கிறது. எங்கும் உள்ள துன்பத்தையும், அதன் காரணமான தன்னலச் சிறுமையையும் போக்கத் துறவி ஒருவன் ஊரூராக நடந்து செல்கிறான், நமது வினோபாஜியைப்போல. உடைமையால் வறண்ட உள்ளத்தில் இரக்க ஊற்று அங்கங்கே சுரக்கிறது. வறுமையும், சிறுமையும் தன்னலமும், பகைமையும் மெல்ல மாய்கின்றன. மனிதனுடைய உன்னதம் மெல்லத் தலை தூக்குகிறது. இவ்வாறு எத்தனையோ இலட்சியங்களை, தெய்விக உறவுகளை, சோற்றுக்கும், துணிக்கும், கூரைக் குச்சுக்கும் அலைகின்ற நிலையிலும் மனிதன் வளர்த்து வந்திருக்கிறான். இப்படி வளர்ந்த அருமைப்பாடுகளும் வாழ்க்கையில் ஒரு பகுதிதானே!

ஆகவேதான் 'இறந்தவர்' என்ற பாடல் ஒன்றில் ஆங்கிலக் கவிஞன் ரூபர்ட் புரூக்* என்பவன் சொன்னான்: இறந்தவர் என்று பேசுகிறோம். ஆனால் இறப்பதற்கு முன் இங்கே வாழ்ந்தவர்கள் அல்லவா? அவர்கள் உள்ளங்கள் களிப்பினாலும் கவலையினாலும் நெய்தவை; துயரிலே முழுகி முழுகிக் குறைகளைக் கழுவியவை; இன்பத்தில் துள்ளியவை; காலப் போக்கிலே கனிவு பெற்று, உதயம் அஸ்தமனம் இவற்றின் அழகிலே தோய்ந்து, மண்ணின் ஆயிரம் ஆயிரம் வண்ணங்களைத் தமதெனப் பெற்றவை.

மனித வாழ்வின் களிப்பும் கவலையும்
மாறி மாறிப் பின்னிய உளம் இவை;
நனைந்து துயரிலே நகையொளி கமழ்வின;
நாளும் இன்ப மதுஉண்டு துய்த்தன;

கனிவு பெற்றன கால கதியிலே;
காலைப் பொழுதும், கதிர்படும் அந்தியும்
நிலமும் மண்ணிலே திரண்டிடும் வண்ணமும்
தன்மையாகவே தமதெனக் கொண்டன.

இது மட்டுமா?

பாடல் கேட்டன, ஆடல் பார்த்தன;
படுத்து உறங்கின பின்னர் எழுந்தன;
நாடிக் காதல் புனைந்தன நட்பெனும்
நலத்திலே தலை நிமிர்ந்து நடந்தன

சூடு மலரினைக் கூந்தலை முகத்தினைத்
தோட்டு மென்மையைத் தொட்டு
மகிழ்ந்தன;
ஓடும் உயிரிலே வியப்பு மலர்வதை
உணர்ந்தன தனித்தங் குட்கார்ந்திருந்தன.

உட்கார்ந்திருந்த இந்த உயிர், இரவு வந்ததும், புறப்பட நேர்கிறது. அப்போது, தன்னையே கொண்டு இங்கே கட்டிய வீட்டை விடுவதற்கு அதற்கு மனம் வரவில்லை. இது மணல் வீடா? அப்படித் தள்ளி விட முடியுமா? வேறு வீடு இந்த உயிருக்கு என்ன தெரியும்?

வேறு வீடு ஒன்று இருக்கிறது. அது தான் பெறுவதற்கு அரியது. உண்மையில் அது தான் வீடு. அதை எண்ணும் போது, இங்கே இந்த உலகில், மனிதனுடைய சாதனையெல்லாம் குழந்தைகள் கட்டும் பொம்மை வீடு போன்றதுதான் என்று மெய்ஞானத்தை நாடிச் செல்கின்றவர்கள் பேசுகிறார்கள். ஆனால் அவர்களுக்கும் இந்த மண்ணின் பிடிப்பு விட முடியும் என்று தோன்றவில்லை. விடாமல் இருக்க முடியாதா என்று அவர்களும் ஏங்குகிறார்கள். அதைப் பார்ப்போம். (தொடரும்)

* Rupert Brooke: 'The Dead.'

## சுவாமிநாதப் பெருமானுக்குக் கனகாபிஷேகம்

ஆறுமுகப் பெருமான் அன்பர்களுக்கு அருள் வடிவமாக எழுந்தருளி விருந்து திவ்ய தரிசனம் தரும் ஆறு படை வீடுகளுக்குள் ஒன்று, திருவேரகம் என்னும் சுவாமிமலை. அங்கு அப்பெருமான் குழந்தையுருவில் நிற்கிறார். பிதாவாகிய, பிறை சூடிய பெருமானுக்குப் பிரணவப் பொருள் உரைத்த பிள்ளையாகிய சுவாமிநாத சுவாமிக்கு ஒரு மண்டலமாகத் தொடர்ந்து ஷண்முக லட்சார்ச்சனை நடைபெற்று வருகிறது; இவ்வர்ச்சனை தை மாதக் கடைசியில் பூர்த்தியாகும். அதற்குமுன் தினம் ஏழைகளுக்கு அன்னதானமும், ஆடைதானமும் அளிக்கப் போகிறார்கள். ஷண்முக லட்சார்ச்சனை பூர்த்தி தினத்தன்று சுவாமிநாதப் பெருமானுக்குக் கனகாபிஷேகம் நடைபெறும்.

கனகாபிஷேகத்துக்கு இருபதினாயிரம் ரூபாய்க்குக் குறையாமல் வைரமே வாங்க வேண்டியிருக்கிறது. இவ்வரிய பணிக்கு வைரமாகவும், தங்கமாகவும், வெள்ளியாகவும் வழங்கி ஆண்டவன் அருள் பெற்று வாழவேண்டுமாய் ஆஸ்திக அன்பர்கள் அனைவரையும் கனகாபிஷேக கைங்கர்ய நிர்வாகிகள் கேட்டுக் கொள்கிறார்கள். இந்தப் புண்ணிய கைங்கர்யத்துக்கு நிதி அளிக்க விரும்புவோர் கீழ்க்கண்ட விலாசத்துக்கு அனுப்பி வைக்கலாம்: தேவஸ்தான ஆபீஸ், சுவாமிமலை, தஞ்சை ஜில்லா.

# வட்ட மேஜை

## நெசவாளியின் கண்ணீர்

சாயர்புரம் செந்தியம்பலம் கைத்தறிச் சேலைக்குத் தமிழ் மக்களிடத்தில் நல்ல மதிப்பு உண்டு. ஆனால் அதை உற்பத்தி செய்யும் ஐந்நூறு குடும்பத்தைச் சேர்ந்த நெசவாளர்கள் வறுமையால் படும் கஷ்டத்துக்கு அளவே கிடையாது. இன்றைக்கு ஒரு குடும்பம் வாழச் சாப்பாட்டுக்கு மட்டும் தினசரி 1–4–0 ரூபாய் வேண்டும். ஆனால் கிடைக்கும் கூலியோ 0–10–0 அணாதான். இதைக் கொண்டு நெசவாளி வாழமுடியுமா? இதனால் கூட்டுறவு சங்க நிர்வாகம் மூலம் பாவுக்கு 4–0–0 ரூபாய் கூலியைக் கூட்டினோம். கூலியைக் கூட்டினால் சர்க்கார் கொடுக்கும் ரிபேட் கிடையாது என்று பயமுறுத்துகிறார்கள்.

நெசவாளிக்கு நானூறு ரூபாய் சம்பளம் கிடைக்க வேண்டுமென்கிறார் மந்திரி டி. டி. கே. இங்கு நான்கு ரூபாய் கூலி கூட்டினால் ரிபேட் கிடையாது என்கிறார் உதவி ரிஜிஸ்டிரார். இதுதான் நெசவாளியை வாழ வைக்கும் திட்டமா? இது விஷயத்தில் சர்க்கார் தலையிட்டு நெசவாளியின் கண்ணீரைத் துடைக்க வேண்டும்.

சாயர்புரம்
10—12—56 எஸ். நயினார்குலசேகரன்

## மாவட்டக்கழக ஆசிரியர்களின் துயரம்

நான் மதுரை மாவட்டக் கழக உயர் நிலைப் பள்ளியில் இரண்டு வருஷங்கள் 'பயிற்சி பெறாத ஆசிரியனாக'ப் பணியாற்றி வந்தேன். பின்பு அவர்கள் செலவிலேயே பயிற்சியை முடித்துக் கொண்டு இவ்வருடமும் அவர்களின் கீழேயே பணியாற்றி வருகிறேன். ஐந்நூறு ரூபாயை, அவர்களுக்கு ஐந்து வருஷங்கள் பணியாற்றி வருவேன் என்ற ஒப்பந்தத்தின் பேரில் பெற்றுக் கொண்டேன்.

என்னுடைய பி. டி. பரீட்சையில் 1956-ம் வருஷத்திலேயே தேறிவிட்டேன். என்னுடன் பயிற்சி பெற்ற ஆசிரியத் தோழர்கள் எல்லாம் அரசினர் பள்ளியிலோ அல்லது மானேஜ்மெண்டார் பள்ளியிலோ ஆறுமாதகாலமாகச் சம்பளம் பெற ஆரம்பித்துவிட்டனர். மாவட்டக் கழகத்தில் பணியாற்ற வந்தது ஒரு பெருங் குற்றமா? ஏன் இன்னும் பி. டி. ஸ்கேல்படி சம்பளம் கொடுக்காமல் இருக்கிறார்கள்?

எரியும் நெருப்பில் எண்ணெய் ஊற்றுவது போல் எங்கள் கழகப் பள்ளிகளில் வேலை செய்யும் நான்கு ஆசிரியர்களுக்கு மாத்திரம் அதிகபட்சச் சம்பளம் நிர்ணயித்து விட்டார்கள். (ரூபாய் நூறு ஆரம்பம்) இந் நான்கு ஆசிரியர்களில் ஒருவர் என்னுடனே பயிற்சி பெற்று என்னைப்போல் தேறியவர்தான். மற்றவர்கள் ஒன்று அல்லது இரண்டு வருஷம் சர்வீஸில் முதிர்ந்தவர்கள்.

இந் நால்வரைத் தவிர மற்ற பி. டி. ஆசிரியர்களின் சம்பள விகிதமும் 75–5–145 ஆகவே இருக்கிறது. எனவே மூன்றுவருஷங்கள் அனுபவம் உள்ள ஆசிரியர் தொண்ணூறு ரூபாய் வாங்கும்போது, இவ்வருஷம் சேர்ந்தவர்களில் குறிப்பிட்ட சிலர் நூறு ரூபாய் வாங்குகிறார்கள் என்றால் அது ஆசிரியர்களின் அனுபவத்துக்குத் தண்டனையா?

மேல் மங்கலம்
13—12—56 எம். ஆர். விஸ்வேஸ்வரன்

## அரசாங்கத்தின் தாமதம்

தர்மபுரி தாலூகா விவசாயிகளுக்கு எரு உரம் வாங்க ஏக்கர் ஒன்றுக்கு முப்பத்தைந்து ரூபாய் வீதம், ரூபாய் ஐந்நூறு ரூபாய் வரை வீதும், மாட்டுத் தீவனம் வாங்க நூற்றைம்பது ரூபாய் வரைவீதும் கடன் கொடுக்கப்படுமென்றும், அதற்கான விண்ணப்பங்கள் தர்மபுரி தாசில்தாருக்கு அனுப்பவேண்டுமென்றும் கிராமங்களில் விளம்பரப்படுத்தப் பட்டது. இங்குள்ள விவசாயிகளாகிய நாங்கள் விண்ணப்பங்கள் அனுப்பிச் சுமார் ஒரு மாதத்துக்கு மேல் ஆகியும் நாளதுவரை யாதொரு நடவடிக்கையும் எடுக்கக் காணோம்.

கடன் வருகிறதென்றும் நம்பிக் கொண்டிருக்கும் விவசாயிகளின் நிலை என்ன ஆவது? வெளி இடங்களிலோ சில்லறைக் கடன்கள் பிறப்பதில்லை. வயல்களில் விதையும் விதைத்தாயிற்று. இந்தக் கடைசிக் கட்டத்திலாவது சர்க்கார் காருண்யம் காட்டினால் அம்மோனியம் சல்பேட், கடலை அல்லது முத்துப் பிண்ணாக்கு முதலிய உரங்களை வாங்கிக் களையெடுப்பதற்கு முன்பாவது உபயோகித்துப் பயனடையலாம். கொடுக்கும் கடனை உரிய தருணத்தில் கொடுக்காமல் காலம் கடந்து கொடுத்தால் அதிகப்படி உற்பத்தியை எப்படி எதிர்பார்க்க முடியும்?

தளுமங்கபுரம்
12—12—56 டி. வாசுதேவராவ்

## மாறுதல் செய்யுமா?

ரயில்வே இலாகா செய்துள்ள சிறிய மாறுதல் மாணவர்களுக்குச் சிரமத்தை அளிப்பதாக உள்ளது. மாணவர்கள் ரயில்வே பிரயாணத்துக்கான சலுகைத் தாள்களை இரண்டும்,—இதுவரை மாணவர்கள் தங்கள் ஊருக்குப் போவதற்கும், ஊரிலிருந்து திரும்புவதற்கும்—சென்டிரல் நிலையத்திலேயே தரப்பட்டன. ஆனால் இப்பொழுது மாணவர்கள் ஊருக்குப் போவதற்கு மட்டும் தருகிறது. மற்றொரு சலுகைத் தாளை (ஊரிலிருந்து கல்லூரி வருவதற்கு) திருச்சிக்கோ, போத்தனூருக்கோ அனுப்பி, சலுகைத்தாள் வரும் வரை காத்திருக்க நேரிடுகிறது; அவசியமானபோது. இந்த முறையினால் தொல்லை ஏற்படுகிறது ஆகையால் முன்மாதிரியே, இரு சலுகைத்தாள்களையும் சென்னையில் உள்ள சென்டிரல் நிலையத்திலேயே தந்துவிடுமாறு, தென்னிந்திய ரயில்வே தலைமையாளரைக் கேட்டுக் கொள்கிறோம்.

மயிலாப்பூர்
15—12—56

பி. செ. சுப்பிரமணியன்,
ச. நஞ்சன், ச. சிவராமன்,
வி. எஸ். பத்மநாபன்,
வி. வி. பாலசுப்பிரமணியன்
(விவேகானந்தா கல்லூரி மாணவர்கள்)

# ஈழநாட்டுப் பிரயாணம் ②

தமிழ்த் தாயின் மணிக்கொடி வானளாவப் பறக்கிறது. இலங்கைத் தீவில் உள்ள உயரமான மலைக்கு மேலே, மேக மண்டலத்துக்கும் மேலே பட்டொளி வீசிப் பறக்கிறது.

யாழ்ப்பாணத்தின் இளந்தென்றலில் ஆடிப் பறக்கிறது. ஈழத்தின் பட்டி தொட்டிகளில் எல்லாம் பாடிப் பறக்கிறது. அந்தத் தமிழ்க் கொடியின் கீழே ஆயிரமாயிரம் தமிழ்ப் பெருமக்கள் அணிவகுத்து நிற்கிறார்கள். ஆடவரும் பெண்டிரும் நிற்கிறார்கள்; முதியோரும் வாலிபரும் நிற்கிறார்கள்; இந்துக்களும் முஸ்லிம்களும் நிற்கிறார்கள்; கிறிஸ்தவர்களும் பௌத்தர்களும் நிற்கிறார்கள்.

''வாழ்க, தமிழ் மொழி!'' என்று கோஷிக்கிறார்கள். ''வாழிய செந்தமிழ்!'' என்று முழங்குகிறார்கள். ''வாழிய ஈழத் திருநாடு!'' என்று வாழ்த்துகிறார்கள்.

தமிழ்த்தாய் ஈழநாட்டின் சுதந்திரச் சிம்மாசனத்தில் மணி முடிதரித்து வீற்றிருக்கிறாள். தமிழ்த் தாய்க்கு அருகிலேயே சரிநிகர் சமானமாகச் சிங்கள அன்னையும் சேர்ந்து அமர்ந்திருக்கிறாள். ஈழநாட்டில் உள்ள தமிழ் பேசும் மக்களின் பிரதிநிதிகளும் சிங்களம் பேசும் மக்களின் பிரதிநிதிகளும் ஆட்சி பீடத்தில் அமர்ந்து ஈழநாட்டுத் தமிழ், சிங்கள மக்களின் நலத்துக்காகப் பாடுபடுகிறார்கள்.

ஈழ நாட்டைச் சிங்கள வீரர்களுடன் வீரத் தமிழ்ப் புதல்வர்களின் கரங்களும் காத்து நிற்கின்றன. தமிழ் அன்னையின் தர்ம ஆட்சியில் தமிழ் பேசும் மக்களும், சிங்களம் பேசும் மக்களும் மகிழ்ச்சியுடன் வாழ்கிறார்கள்.

எங்கும் செல்வத்தின் வளம்; எங்கும் கலைகளின் மணம்; மகிழ்ச்சி நிறைந்த மக்கள்.

மேலே கூறியது தமிழ்த் திருநாளைப் பற்றி ஈழ நாட்டுத் தமிழ் மக்கள் காணும் கனவு. இன்றைய தினம் ஈழநாட்டில் நூற்றுக் கணக்கான தமிழ்த் தலைவர்கள் இந்தக் கனவைக் கண்டு வருகிறார்கள். இரவில் தூக்கத்திலும் காண்கிறார்கள். விழித்துக் கொண்டிருக்கும் போது பகற்கனவாகவும் காணுகிறார்கள். ஆனால் கனவு உலகத்திலிருந்து நனவு உலகத்துக்கு வந்து பார்க்கும்போது நிலைமை முற்றிலும் வேறு விதமாக இருப்பதைக் கண்டு நெஞ்சம் துடிதுடிக்கிறார்கள்.

தங்களைப் போலவே இலங்கையில் உள்ள எல்லாத் தமிழ் மக்களின் இதயத்திலும் தமிழ் உணர்ச்சித் துடிதுடிப்பு ஏற்பட வேண்டும் என்பதற்காக ஈழநாட்டின் பல பகுதிகளிலும் தமிழ்ப் பெரியார்களின் திருநாளைக் கொண்டாடி வருகிறார்கள். அதுபோன்ற திருநாளில் ஒன்றுதான் பாரதி ஜயந்தித் திருநாள். பாரதி இளைஞர் சங்கத்தார் கொண்டாடும் பாரதியின் எழுபத்தைந்தாவது பிறந்த தினத் திருநாள்.

பாரதியார் தமிழ் மக்களுக்கு அளித்து விட்டுப் போன தாரக மந்திரம் ''சேமமுறத் தமிழ் ஓசை உலகமெலாம் பரவும் வகை செய்தல் வேண்டும்'' என்பதுதான். அதையே தங்களது மூலமந்திரமாகக் கொண்டு ஈழ நாட்டுத் தமிழ்ப் பெரு மக்கள் உணர்ச்சியுடன் பாடுபட்டு வருகிறார்கள்.

மகாகவி பாரதியார் தமிழைப் பாடினார்; தமிழ்ப் பெரு மக்களைப் பாடினார்; தமிழ் மக்கள் வாழ்க்கையில் ஒவ்வொரு அம்சமும் மேன்மையுறப் பாடினார்.

பாரதியார் தெய்வத்தைப் பாடினார்; தேசத்தைப் பாடினார்; தேசத்தின் மகா புருஷர்களைப் பாடினார். இன்னும் சமூக விடுதலைக்காகப் பாடினார்; பெண் விடுதலைக்காகப் பாடினார். ''பறையருக்கும் தீயருக்கும் புலையருக்கும் விடுதலை'' என்று பறையறைந்து பாடினார். மனித சமூகத்துக்காகப் பாடினார்; மனிதர்கள் சுகவாழ்வு அடையுமாறு பாடினார்.

கம்பனுக்குப் பிறகு தமிழ் நாட்டில் உதித்த மகாகவி சுப்பிரமணிய பாரதியார். அவருடைய திருநாளைத்தான் கொழும்பு நகரில் கோலாகலமாகக் கொண்டாடினார்கள்.

## பாரதி ஜயந்தி விழா

மகாகவி பாரதியின் எழுபத்தைந்தாவது ஜயந்தி விழா சென்ற டிசம்பர் மாதம் 8, 9 தேதிகளில் ஈழ நாட்டின் தலைநகரமான கொழும்பு நகரில் உள்ள பிரசித்தி பெற்ற வெள்ளவத்தை சைவ மங்கையர் கழக மண்டபத்தில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. ஈழ நாட்டின் பல பகுதிகளில் இருந்தும் தமிழ்ப் பெருமக்களும், தமிழ் எழுத்தாளர்களும், பத்திரிகை ஆசிரியர்களும் திரளாக வந்து விழாவில் கலந்து கொண்டு சிறப்பித்தார்கள். தமிழ் ரசிகர்களும் பெருந் திரளாக வந்திருந்து சொற்பொழிவுகளை நன்கு அநுபவித்து விழாவைச் சிறக்கும்படி செய்தார்கள். ஆண்களைப் போலவே பெண்களும் வந்திருந்து ஒவ்வொரு நாளும் நாலு மணிநேரம் அமைதியாக இருந்து பிரசங்கமாரியில் நனைந்து விட்டுப் போனார்கள்.

'உலக மகா கவியே! பாட்டுக்கு ஒரு புலவரே!

# தமிழ்த் திருநாள் கொண்டாடுவோம்

ஏழைகளின் கண்ணீரைத் துடைக்க வந்த கவிஞரே! பெண்களைப் போற்ற வந்த புனிதரே! தமிழுக்கும் தமிழ்கூறும் நல்லுலகத்துக்கும் புதிய உயிர் ஊட்டிய சுடப்பிரமணிய பாரதியே! தங்கள் பிறந்தநாளைக் கொண்டாடுகிறோம். சென்ற பல ஆண்டுகளாகக் கொண்டாடியது போலவே இந்த ஆண்டும் கொண்டாடுகிறோம். ஆனால் தாங்கள் இதையெல்லாம் பார்த்துக் களிக்கிறீர்களா? இல்லை, பரமபதத்தில் வள்ளுவரும் கம்பரும், ராமலிங்க வள்ளலாரும் ஆறுமுக நாவலரும், வ. உ. சியும், திரு வி. க. வும், கவிமணியும் ரஸிகமணியும், கல்கியும் விபுலானந்தரும் வீற்றிருக்கும் தெய்வத் தமிழ்ச் சபையிலே தமிழின் புதிய உயிரைப் பற்றிப் பாடிக் கொண்டிருக்கிறீர்களா? அல்லது தமிழ் பேசும் புனித நாடுகளைவிட்டுப் போக மனமின்றி இங்கேயே வட்டமிட்டுக் கொண்டிருக்கிறீர்களா? ''தமிழ்! தமிழ்!'' என்று தாங்கள் இந்த உலகில் வாழ்ந்த நாட்களெல்லாம் சொல்லிக் கொண்டு வந்தீர்கள். தமிழ் நாட்டில் தமிழ் அன்னை அரியாசனத்தில் அமர்ந்து விட்டாள். ஈழநாடாகிய இலங்கைத் தீவில் நம் தமிழ் அன்னையை அரியாசனத்திலிருந்து இறக்கி விட்டார்களே! இதற்கெல்லாம் ஈழ நாட்டுத் தமிழ் மக்களாகிய நாங்கள் தான் காரணம். தற்கொலைக்கு ஒப்பான சகோதரச்சண்டை போட்டுக்கொண்டு சுயநலம் கருதி வாழ்ந்து வந்தோம். எங்கள் சுயநலத்தின் ஆசையினால் தமிழ் அன்னையின் அரியாசனமே பறி போய் விட்டது. இன்று விழித்துக் கொண்டோம். தமிழ் அன்னையை மீண்டும் ஈழ நாட்டின் அரியாசனத்தில் ஏற்றுவதற்காக எங்கள் உயிரையே கொடுக்க முன் வந்து விட்டோம். தங்கள் தியாக வாழ்க்கையும், தீர்க்கதரிசனமுமான அமுத வாக்குகளும் வீண் போக வில்லை. இலங்கை நாட்டுத் தமிழ்ப் பெருமக்கள், எங்கள் தமிழ்த் தலைவர்கள் தங்களுக்குள் இருந்த வேற்றுமையை மறந்து விட்டுத் தமிழின் அரசியல் மதிப்பைக் காப்பாற்ற ஒன்று திரண்டு விட்டார்கள். இந்த ஒற்றுமை கடைசி வரையில் நிலைத்து நிற்பதற்கு மகா கவியாகிய தாங்கள்தான் துணைபுரிய வேண்டும். ஈழநாட்டில் தமிழ் அன்னை மீண்டும் மணிமுடி தரித்துப் பவனி வருவதற்கு நல் ஆசி கூறுங்கள்!'' என்று உணர்ச்சியும் உற்சாகமும் நிறைந்த குரலில் கூறி விட்டு விழாவுக்கு வந்தவர்களை யெல்லாம் கைகூப்பி வரவேற்றார் பாரதி இளைஞர் சங்கத் தலைவர்.

விழா, களை கட்டி விட்டது. தமிழ் மறைக் கழகத்தின் தலைவர் திரு கா. பொ. இரத்தினம் அவர்கள் இவ் விழாவுக்குத் தலைமை வகித்து ஒரு அருமையான சொற்பொழிவு



பகீரதன்

நிகழ்த்தினர். ஈழத் திருநாட்டின் மேன்மைக்கும் தமிழ் மக்களின் உயர்வுக்கும் தடைக்கல்லாக இருக்கும் சாதிவித்திய 'சம்தொலைய வேண்டும் என்பதை வற்புறுத்திக் கூறினர். ''சாதிகள் இல்லையடி பாப்பா; குலத் தாழ்ச்சி உயர்ச்சி சொல்லல் பாவம்'' என்று பாரதி கூறியிருப்பதை நெஞ்சு நெகிழும்படி எடுத்துக் கூறினர். கொழும்பு ராயல் கல்லூரி தமிழ்த் துறைத் தலைவர் திரு கி. லக்ஷ்மணன் எம்.ஏ. அவர்கள் ''பாரதி காட்டிய வழி''யைப் பற்றி நின்று நிதானமாக மக்கள் மனத்தில் பதியும்படி பேசினர். தற்காலத்தில் இருக்கும் கல்வி முறையில் உள்ள குறையை வன்மையாகக் கண்டித்தார். இந்தக் கல்வி முறையில் இருக்கும் குறைபாட்டைப் பற்றிக் கவியரசர் பாரதியார் கூறியிருப்பதைத் தமக்கே உரிய பாணியில் எடுத்துக் காட்டினர்.

''செலவு தந்தைக் கோராயிரஞ் சென்றது:
தீதெனக்குப் பல்லாயிரம் சேர்ந்தன:
நலமொரெட்டுணையுங் கண்டிலேன் இதை
நாற்பதாயிரம் கோயிலிற்சொல்லுவேன்''

என்ற பாரதியின் வாக்கை எடுத்துக் கூறிய போது சபையோர் காட்டிய ஆதரவு தற்காலத்துக் கல்வி முறையை அப்படியே குழி தோண்டிப் புதைத்துவிடத் துடிக்கிறார்கள் என்பதை நன்ருக உணர்ந்து கொள்ள முடிந்தது. வவுனியாவில் இருந்து வந்திருந்த வித்வான் திரு பொன். கனகசபை அவர்கள் ''பாரதியின் சிந்தனை''ச் சிறப்பை அழகான முறையில் எடுத்துரைத்தார். ''பாரதி கண்ட அரசியலை''க் கொழும்பு மோகன் குமார் கம்பெனி அதிபர் திரு எம். பி. பாரதி அவர்கள் காட்டிய போது சபையில் எல்லாருக்கும் ஆவேசமே வந்துவிட்டது. பாரதி பொதுஉடைமைக் கவிஞர், பாட்டாளி மக்களின் விடுதலைக்காகப் பாடுபட்டுப் பாடிய கவிஞர் என்பதை நன்கு எடுத்துரைத்தார். கொழும்பு விவேகானந்தா வித்தியாலயம் தலைமை ஆசிரியர் திரு கே. வி. செல்லத்துரை அவர்கள் பாரதி கண்ட சமுதாயத்தைத் தம்முடைய ஜாலக் கண்ணாடியைக் கொண்டு சபையோருக்குக் காட்டி மகிழ்வித்தார். பாரதி சங்கக் கௌரவ அங்கத்தினர் திரு வி. நம்பிராஜன் அவர்கள 'கணீர்' என்ற குரலில் தமிழ் மொழி வாழ்த்துப் பாடிய பிறகு அன்றையக் கூட்டம் முடிந்தது.



*** *** ***

மறுநாள். கொழும்பு உணவு விநியோகக் கமிஷனர் திரு கோ. ஆழ்வாப் பிள்ளை அவர்களுடைய தலைமையில் விழா ஆரம்பமாயிற்று. ஐந்து மணிக்கு ஆரம்பிக்க வேண்டிய விழாவுக்கு மக்கள் நாலு மணிக்கே வந்து கூடி விட்டார்கள். விழாத் தலைவர் திரு ஆழ்வாப் பிள்ளை குதூகலத்துடன் பாரதியின் பெருமையை எடுத்துப் பறைசாற்ற ஆரம்பித்துவிட்டார். பாரதி ஜயந்தியையும் பாரதி அமரரான தினத்தையும் கொண்டாடினால் மட்டும் போதாது. இன்று ஈழ நாடு உள்ள நிலைமையில் பாரதியார் திருநாளை வருஷம் முந்நூற்று அறுபத்தைந்து நாட்களுமே கொண்டாடலாம். தெருவெல்லாம், தேயிலைத் தோட்டமெல்லாம், ரப்பர் தோட்டமெல்லாம் தமிழ் முழக்கம் செழிக்கச் செய்ய வேண்டும் என்று அவர் சொன்ன போது சபையில் ஒரே ஆரவாரம்.

விழாத் தலைவரைப் போலவே சபையோரும் குதூகலம் கொண்டிருந்தார்கள். அன்று நடந்த விழாவைப் போல அத்தனை அழகாகவும், விமரிசையாகவும் வேறு எந்த விழாவும் நடந்ததில்லை என்று அங்கு வந்திருந்த எல்லாரும், அதாவது மேடைமீது நெருக்கி அடித்துக்கொண்டு வீற்றிருந்தவர்களும், விழா மண்டபத்தில் ஒருவரை ஒருவர் முண்டியடித்துக்கொண்டு அமர்ந்திருந்தவர்களும், மண்டபத்துக்கு வெளியே தலையோடு தலை மோதிக்கொண்டு கால்கடுக்க நின்றவர்களும் ஒரேமுகமாய்ச் சொன்னர்கள்.

வேறு எத்தனையோ காரியங்களில் ஈழ நாட்டுத் தமிழ் மக்களிடையே அநேக வித்தியாசங்கள் இருக்கலாம். ஆனல் தமிழ்த் திருநாளைக் கொண்டாடுவதிலும், தமிழ் வளர்த்த கவிஞர் விழாக்களை நடத்துவதிலும் மட்டும் கட்சி வேற்றுமை கிடையாது என்பது அன்றைய விழாவில் தெளிவாகத் தெரிய வந்தது. மேடைமீது பலதரப்பட்ட கட்சித் தலைவர்களும் வந்து அமர்ந்திருந்தார்கள். இந்த ஒற்றுமை எப்பொழுதும் எல்லாக் காரியத்திலும் இருந்தால் ஈழ நாட்டுத் தமிழ் மக்களின் பிரச்னை வெகு எளிதில் முடிந்து விடும் என்று எல்லாரும் மனம் விட்டுப் பேசிக் கொண்டார்கள்.

இதே கருத்தை, 'சுதந்திரத்துக்குப் பின் பாரதி' என்னும் பொருள் பற்றிப் பேசிய கொழும்பு பொதுநூல் நிலைய அதிகாரி திரு எஸ். எம். கமால்தீன் அவர்கள் வலியுறுத்திக் கூறினர். பாரதியின் பாடலின் சிறப்பை, பாரதியை எவ்வாறு பார்த்து அனுபவிக்க வேணும் என்ற முறையை, பாணிப்பாய் இந்துக் கல்லூரி ஆசிரியர் வித்வான் திரு க. ந. வேலன் அவர்கள் மிக அருமையாக எடுத்துக் காட்டினர். ''நாம் காணாத பாரதி'' என்று பேசவந்த திரு வேலன் எல்லாருடைய கண் முன்னிலையிலும் பாரதியைக் கொண்டு வந்து நிறுத்தி விட்டார். பாரதியின் கவி இதயத்தைக் காண்பிப்பதற்காக அவர் பாரதியின் பாட்டு ஒன்றை உதாரணத்துக்காக எடுத்துப் பாவத்தோடு பாடி விளக்க ஆரம்பித்தார்.

திக்குத் தெரியாத காட்டில் திகைத்து நிற்கிறாள் அழகு நிறைந்த இளம் மங்கை ஒருத்தி. கையிலே வில்லேந்தி மிருகங்களை வேட்டையாடி வரும் கொலை வேடன் ஒருவன் அந்த அழகு சுந்தரியைப் பார்த்து விடுகிறான்,

# Firestone

பயர்ஸ்டோன்

புதிய டிலக்ஸ் சாம்பியன்

ட்யூப்லெஸ்

டயர்





இந்த டயர் தயாரித்தது-மன நிம்மதியுடன் பிரயாணம் செய்வதற்காகவே



இந்தப் புதிய டிலக்ஸ் சாம்பியன் ட்யூப்லெஸ் டயர் இதற்கு முன் எந்த டயரும் எந்த விலையிலும், அளிக்க இயலாத பாதுகாப்பை உங்களுக்கும் உங்கள் குடும்பத்தினருக்கும் அளிக்கிறது. வெடிப்பு பஞ்சரைப் பற்றிப் பயம் வேண்டாம். இது நீடித்த காலம் உழைக்கவும் அபாயமின்றி அதிக மைல்கள் ஓடவும் செய்கிறது. ரஸ்தாக்களில் இதற்குச் சறுக்காமல் செல்லும் தன்மை ஆச்சரியப்படத்தக்கது. மன நிம்மதியுடன் பிரயாணம் செய்வதற்கென்று தயாரிக்கப்பட்ட டயர் இது ஒன்றே.

**பயர்ஸ்டோன்** இன்று சிறந்தது - நாளை இன்னும் சிறந்தோங்குவது

அவளைப் பார்த்ததும் அவள் அழகில் சொக்கிப் போய் விடுகிறான். வெட்கத்தை விட்டு அவளைத் திறந்த கண் மூடாமல் வெறிக்க வெறிக்கப் பார்க்கிறான். அந்த வெறி உணர்ச்சியில் அவளிடம் பேசுகிறான்.

" பெண்ணே! உனதழகைக்கண்டு – மனம்
பித்தங் கொள்ளு" தென்று நகைத்தான் –
"அடி
கண்ணே! எனதிருகண்மணியே – உனைக்
கட்டித்தழுவ மனங் கொண்டேன்."

இந்தப் பாட்டை மிக அழகாகப் பாடிக் காண்பித்துவிட்டு வேடனின் இதய தாபத்தைத் திரு வேலன் அவர்கள் விளக்கிய போதுமக்கள் இடையில் உண்டான உற்சாகம் அளவிட்டுச் சொல்லி முடியாது.

கொடிய வேடன் இவ்வாறு சொன்னவுடன் அவனைப் பார்த்துத் தன் இரு கரங்களையும் குவித்து வணங்கி அந்த அழகி சொல்லுவாள்:

" அண்ணா! உனசடியில் வீழ்வேன் – எனை
அஞ்சக் கொடுமைசொல்லவேண்டா பிறன்
கண்ணாலஞ் செய்துவிட்ட பெண்ணை –
உன்றன்
கண்ணாற் பார்த்திடவும் தகுமோ?"

என்று திரு வேலன் பாட்டை முடித்ததும் அங்கு நடுக் காட்டில் நாகரிகமில்லாத நீசக்குணம் படைத்த வேடனின் முன்னிலையில் அநாதரவாக நிற்கும் பெண்மணியே மேடைமீது வந்து நின்று கைகூப்பி வணங்கிக் கதறுவது போல இருந்தது. அவள் அபயக் குரலைக் கேட்டுச் சபையோரெல்லாம் அவளுக்கு வாழ்வளிக்க வந்து விட்டது போலிருந்தது. அப்பொழுது சபையிலே ஏற்பட்ட சலசலப்பு.



பாரதி ஜயந்தி விழாவில் பாரதியாரை மட்டும் நினைக்கவில்லை, பாரதி இளைஞர் சங்கத்தார். பாரதியைப் போலவே தமிழ் வளர்த்த பெரியோர்களையும் நினைத்துப் போற்றினார்கள். ராயப்பேட்டை முனிவர் என்று போற்றப்பட்ட திரு வி. க. வையும் விழாவில் கொண்டு வந்து நிறுத்தி மகிழ்ந்தார்கள். வீரகேசரி ஆசிரியர் திரு கே. பி. ஹரன் அவர்கள் திரு வி. க. அவர்களின் திரு உருவப் படத்தைத் திரை நீக்கம் செய்து வைத்தது பாரதி விழாவுக்கே பெருமையைக் கொடுப்பதாயிருந்தது. மட்டக்களப்பு கஸ்தூரி ஆசிரியை திருமதி நேசமலர் வேலாயுதம் பிள்ளை அவர்கள் பாரதியின் புதுமைப் பெண்ணைக் கொண்டு வந்து காட்டினார். முடிவாக அடியேனும் பேசினேன்.

மற்ற மொழிகளில் உள்ள சொற்கள் சில நூறு வருஷங்களுக்குள்ளே வழக்கொழிந்து போவதுபோல் தமிழில் இல்லை. ஆயிரம் வருஷங்களுக்கு முன்னால் இருந்த சொற்களே இன்றும் வழக்கத்தில் இருக்கின்றன. இதற்கு வள்ளுவர், கம்பர் போன்ற மகா கவிகளின் இலக்கியங்களே சாட்சி கூறுகின்றன. இதனால் தான் தமிழ் மொழியைக் "கன்னித் தமிழ்" என்கிறோம். அத்தகைய அழியா இளமை கொண்ட கன்னித் தமிழிலேதான் கம்பரும் வள்ளுவரும் பாடினார்கள். அதே இன்பத் தமிழிலேதான் பாரதியாரும் பாடினார். பாரதி ஜயந்தி விழாவைக் கொண்டாடுவது கம்பர், வள்ளுவர் முதலான கவிஞர் பரம்பரையையே பாராட்டுவதாகும்.

பாரதி வளர்த்த தமிழ் மொழி எல்லாத் துறைகளிலும் முன்னேறி வருகிறது. ஆங்கிலத்தில் வழங்கி வரும் கலைச் சொற்களை எல்லாம் தமிழாக்கி வருகின்றனர். தமிழ் நாட்டில் தமிழே அரசியல் மொழியாகி விட்டது. ஈழ நாட்டில் தமிழுக்கு உரிய இடத்தைத் தராமல் சிங்களம் ஆக்கிரமித்திருக்கும் நிலை இன்று ஏற்பட்டிருக்கிறது. இந்த நிலை மாற வேண்டும். ஈழநாட்டில் தமிழ் தன்னுடைய அரசியல் அந்தஸ்தை மீண்டும் பெறும்படி ஈழத் தமிழ் மக்கள் செய்ய வேண்டும்.

"காட்டிலே மறைக் கதவம் திறந்தது எங்கள் கன்னித் தமிழ்; எலும்பைப் பெண் உருவாக்கியது எங்கள் இன்பத் தமிழ்; முதலை யுண்ட பாலனை அழைத்தது எங்கள் முத் தமிழ்!" என்றெல்லாம் கன்னித் தமிழுக்குக் கடவுள் தன்மை கூறாத புலவர் இல்லை. முருகனைத் தமிழ்த் தெய்வம் என்றனர் முன்னோர். 'முத்தமிழால் வைதாரையும் வாழ வைப்பான் முருகன்' என்றார் அருணகிரியார். அந்தச் சக்தியுள்ள தெய்வம் முருகன் திருக் கோயில் கொண்டிருக்கும் இடம் ஈழம். கதிர்காமக் கடவுளின் கருணையினால் ஈழத் தமிழ் மக்களின் ஒற்றுமையான உழைப்பினால், கவியரசர் பாரதியின் சக்தியினால் மீண்டும் தமிழ் அன்னை ஈழநாட்டில் அரியாசனம் ஏறுவாள் என்று கூறியதைக் கேட்ட சபையோர் பெருத்த உற்சாகத்துடன் கரகோஷ ஆரவாரம் செய்து ஆமோதித்தார்கள்.

கடைசியாக, பாரதி இளைஞர் சங்கத் தலைவர் நயமணி திரு கல்கிதாசன் அவர்கள் தமிழ்மொழி வாழ்த்துப் பாடலைப் பாடினார்.

" வாழ்க நிரந்தரம், வாழ்க தமிழ்மொழி!
வாழிய வாழியவே!
வானமளந்த தனைத்து மளந்திடு
வண்மொழி வாழியவே!
ஏழ்கடல் வைப்பினும் தன்மணம் வீசி
யிசைகொண்டு வாழியவே!
எங்கள் தமிழ்மொழி! எங்கள் தமிழ்மொழி!
என்றென்றும் வாழியவே!"

என்ற பாரதியாரின்பாடலைக் குறைந்தபட்சம் பதினாயிரம் தடவையாவது கேட்டிருக்கிறேன். எனினும் கொழும்பு பாரதி ஜயந்தி விழா முடிவில் திரு கல்கிதாசனும், பாரதி இளைஞர் சங்க அங்கத்தினர்களும் சேர்ந்து பாடியதைக் கேட்டபோது அங்கு ஒரு புதிய சக்தியும்

எக்களிப்பும் பொங்கித் ததும்புவதாகவே தோன்றியது. "எங்கள் தமிழ் மொழி!" என்னும் இடத்தில் விசேஷ அழுத்தத்துடன் பாடியபோது சபையில் பூரிப்புடன் கூடிய கலகலப்பே ஏற்பட்டு விட்டது.

ஈழ நாட்டுத் தமிழ் மக்களின் பூரிப்புக்கும் காரணம் இல்லாமற் போகவில்லை. "வான மளந்த தனைத்தும் அளந்திடும் வண் மொழி" என்று சொல்லும்போதெல்லாம் தமிழின் சிறப்பும் அது ஒரு காலத்தில் இந்த உலகையே ஆட்சி செய்ததையும் நினைக்கத் தோன்றும். சீரும் சிறப்பும் வாய்ந்த பழந்தமிழ் நாடும், தமிழ்ச் சங்கமும், அந்தச் சங்கத்தின் பெருமையும், ஈசுவரனே எதிரே வந்து நின்றாலும், நெற்றிக் கண்ணையே காட்டினாலும் "குற்றம் குற்றமே!" என்று கூறிய புலவர்களும் நமது எண்ணத்திலே அலை மோதிக் கொண்டு தோன்றுகிறார்கள். சண்பகம், புட்பகம், சாவகம், சிங்களம் ஆகிய தீவுகளில் எல்லாம் தமிழ்க் கொடி ஓங்கிப் பறந்த கோலம் கண் முன்னே காட்சி அளிக்கிறது. அந்தப் பழைய காலத்தில் ஈழத் தீவு தமிழ்த் தாயின் சிலம்பில் கொஞ்சும் மரகதம் போல் விளங்கிற்று. கல்விக்கும் கலைக்கும் உறைவிடமாக விளங்கி நின்றது. ஈழநாட்டில் கலைவாணி கம்பீரமாகக் கொலு வீற்றிருந்தாள்.

ஆனால் இப்பொழுது ஈழநாடு எப்படி இருக்கிறது? இந்தக் காலத்து ஈழத்துக்கு வேறு பல சிறப்புகள் இருக்கலாம். ஆனால் தமிழ் மொழியைப் பொறுத்தமட்டில் அதன் மதிப்பு அவ்வளவு மகிமை வாய்ந்திருப்பதாகச் சொல்ல முடியாது.

இது காரணமாகத்தான் தமிழ் மொழி வாழ்த்துப் பாடலைப் பாடியபோது அந்த மாபெரும் சபையில் இருந்த அத்தனை பேரும் தமிழ்த் தெய்வத்துக்கே தங்களை அர்ப்பணம் செய்து கொள்ள விரதம் எடுத்துக் கொண்டது போல மௌனமாக எழுந்து நின்றார்கள். தமிழுக்கு ஏற்பட்டிருக்கும் இழுக்கைக் களைந் தெறிவோம் என்று சபதம் செய்வது போல அவர்களின் முகங்கள் உறுதியும் கம்பீரமும் கொண்டு ஒளி பெற்று விளங்கின.

விழா முடிந்து கூட்டம் கலைந்த பிறகும் "எங்கள் தமிழ் மொழி! எங்கள் தமிழ் மொழி! என்றென்றும் வாழியவே!" என்ற அமுதினும் இனிய பாட்டு எல்லாருடைய இதயத்திலும் எதிரொலித்துக் கொண்டே இருந்தது.



திரு கல்கி தாஸன்

*** ***

ஈழ நாட்டுக்கு வந்த காரியத்தை முடித்துக் கொண்டோம். பாரதி ஜயந்தி விழா சிறப்பாக முடிவடைந்து விட்டது. இனிமேல் சும்மா உட்கார்ந்து கொண்டிருப்பதில் பயனில்லை. புறப்படுங்கள். "சென்றிடுவீர் எட்டுத் திக்கும். கலைச் செல்வங்கள் யாவையும் கொணர்ந்திங்கு சேர்ப்பீர்" என்றார் அல்லவா பாரதியார். அவர் வாக்குப்படி ஈழநாடு முழுவதையும் சுற்றிப் பார்த்து விட்டு வருவோம். ஈழத் தீவு முழுவதையும் சுற்றிப் பார்ப்பதற்கு முன்னால் ஈழ நாட்டின் தலை நகரமான கொழும்பு நகரையும், அதில் இருக்கும் உயிர்க் காலேஜ் என்று கூறும் மிருகக் காட்சிச்சாலையையும், செத்த காலேஜ் என வழங்கும் 'மியூஸியத்'தையும் பார்த்து விடுவோம்.

கொழும்பு நகரில் இருக்கும் மிருகக்காட்சிச் சாலை ஆசியாவில் இருக்கும் ஒரு சில சிறந்த காட்சிச்சாலைகளில் ஒன்று. இயற்கையும் செயற்கையும் கலந்து பரிமளிப்பது. ஒவ்வொரு பகுதியும் பார்த்துப் பார்த்து அநுபவிக்க வேண்டிய காட்சிகள். பறவை இனங்களையும், பாம்பு வகைகளையும், கொடிய மிருகக் கூட்டங்களையும், கூடித் திரியும் விசித்திர மீன்களையும் ஒரே இடத்தில் பார்க்கலாம். கிட்டத்தட்ட முழுநாள் அதற்குச் செலவிட நேரிடலாம். ஆகையால் கையில் சாப்பாட்டுமூட்டையையும் எடுத்துக் கொண்டு கொழும்பு நகரில் இருக்கும் மிருகக் காட்சிச் சாலைக்குச் செல்வதற்குத் தயாராக இருங்கள். (தொடரும்)

## உங்கள் வீட்டில் பூச்சிகளின் தொந்தரவு இருக்கிறதா?

# லின்டேன் கலந்த ப்ளிட் உபயோகித்து

## அவைகளைக் கொல்லுங்கள்!



பூச்சிகள் வளருமிடங்களில் வியாதியும் பரவுகின்றது! உங்கள் குடும்பத்தினரின் ஆரோக்கியத்தைப் பாதுகாக்க, பூச்சிகளை அணைப்பொழுதில் சீக்கிரமாகக் கொல்லும் சக்தி வாய்ந்த லின்டேன் கலந்த ப்ளிட்டைத் தவறாமல் உபயோகியுங்கள்! முன்னைவிட தீவிர சக்தி வாய்ந்த இந்த பூச்சிகொல்லி அதிக துரிதமாக வேலை செய்கிறது. இதில் லின்டேனும் டி.டி.டி.யும் (D.D.T.) ஒருங்கே சேர்ந்துள்ளதால், இதன் பலன் அதிக காலம் நீடித்து நிற்கிறது. புகழ்பெற்ற சிவப்பு, வெள்ளை மற்றும் நீல டின்னில் கிடைக்கும் லின்டேன் கலந்த ப்ளிட்டை வாங்குங்கள்.




ஸ்டாண்டர்ட்-வாக்குவம் ஆயில் கம்பெனி

(யு.எஸ்.ஏ.யில் இணைக்கப்பெற்றது; கம்பெனி அங்கத்தினர்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்டது)

V 4508

# மாலவல்லியின் தியாகம்

இரண்டாம் அத்தியாயம்

## கடற்கரையிலே!

அறிமுகம் இல்லாத ஒரு வாலிபன் மற்றொரு வாலிபனுடைய இளம் மனைவிக்குத் தன் கையிலிருந்து இரண்டு கழஞ்சு பொன் கொடுத்து முத்துச்சரம் வாங்கிக் கொடுப்பதாகச் சொல்லுவது சுயமதிப்பைக் குலைப்பதுபோல் இல்லையா? அதோடு மட்டுமல்ல, ஒரு வாலிபனாக இருப்பவன் இன்னொருவனுடைய மனைவிக்காகத் தன் கையிலிருந்து இரண்டு கழஞ்சு பொன் கொடுத்து முத்துச் சரம் வாங்கிக் கொடுப்பதாகச் சொல்வது சந்தேகம் அளிக்கக் கூடியதாகவும் வெட்கக் கேடானதாகவும் அவமானப்படக் கூடியதாகவும் இல்லையா...? அவனுக்கு ஆத்திரமும் கோபமும் வந்ததில் ஆச்சர்யமென்ன? கண நேரத்தில் தீப்போல் புகைந்து எழுந்த

கி.ரா. கோபாலன்

ஆத்திரத்திலும், கோபத்திலும் "என்ன வார்த்தை சொன்னாய்...?" என்று பளீரென்று அவன் கன்னத்தில் அடித்தான். இவைகளையெல்லாம் பார்த்துக் கொண்டு நின்ற அவனுடைய மனைவி நடுக்கமும் பயமும் கொண்டவளாக, "எனக்கு முத்துச்சரம் வேண்டாம்— வாருங்கள் நாம் போவோம்" என்று பதறிய வண்ணம் கூறித் தன் கணவன் கையைப் பிடித்து அழைத்தாள்.

அடிபட்ட வாலிபன் தன் கன்னத்தைத் துடைத்துக்கொண்டே, "என்னை அடித்து விட்டாய், பாதகமில்லை. என்னுடைய அடியை நீ தாங்க மாட்டாய். என்னைப்பற்றி உனக்குத்தெரியாது. பிறருக்கு நான் துக்கம் விளைவிக்க விரும்ப மாட்டேன்" என்று சொல்லி விட்டு அந்த இடத்தைவிட்டு நடந்தான்.

அந்த முத்துக் கடைக்குப் பக்கத்துக் கடை வியாபாரி சொன்னான்: "நாஸ்திக வாதம் பேசுகிறவனெல்லாம் இப்படித்தான் அடி வாங்கிச் சாக வேண்டும். அவன் யார் தெரியுமா? அவன் பெயர் பூதுகன் — பெரிய நாஸ்திகவாதி."



சிங்களத்தைச்சேர்ந்தமுத்து வியாபாரி இதைக் கேட்டதும் ஆச்சர்யம் அடைந்தவனாக, "இவன் தானா அவன்? புத்தர் பெருமான் அவனைக் காப்பாற்றட்டும். நாஸ்திகனென்றாலும் அவன் முகத்தில் தெய்விகக் களை சொட்டுகிறதே? நாஸ்திகனாக இருந்தாலும் இந்த உலகத்தில் அன்பை வளர்க்கப் பிரியப்படுகிறவர்கள் எல்லாம் தெய்விக புருஷர்கள் தான்" என்றான்.

"புத்த சமயத்தைச் சேர்ந்தவர்களே இப்படித்தான். அன்பு, அஹிம்சை யென்று கடவுளையே மறந்து விடுகிறார்கள்" என்று சொல்லிக் கொண்டே தன்னுடைய கடை வியாபாரத்தைக் கவனிக்கத் தொடங்கினான் மற்றவன்.

"இதெல்லாம் அறியாதவர்கள் சொல்லும் வார்த்தைகள்! அன்பு, அஹிம்சை, சத்தியம் இவைகளையே கடவுளாக மதிப்பவர்களுக்குத் தனியாகக் கடவுள் எதற்கு?" என்று சொல்லி விட்டு முத்து வியாபாரியும் தன் வியாபாரத்தைக் கவனிக்கத் தொடங்கினான்.

முத்துச் சரம் வாங்குவதற்காக வந்த அந்த வாலிபனும் அவன் காதலியும் எதுவும் வாங்குவதற்கு மனம் இல்லாதவர்கள் போல் அங்கிருந்து நடந்து கொண்டிருந்தனர்.

** ** **

சிறிது நேரத்துக்கு முன்னால் ஒரு வாலிபனால் தாக்கப்பட்ட பூதுகன் ஒவ்வொரு கடையாக வேடிக்கை பார்த்துக்கொண்டே, முத்துக்கடை, பட்டுக்கடை முதலிய பகுதிகளைத் தாண்டி நடந்து கொண்டிருந்தான். எதிர்பாராத விதமாக ஒருவனிடம் அடிபட்டதற்காக அவன்

முகத்தில் சஞ்சலமோ கோபமோ ஏற்பட்டதாகத் தெரியவில்லை! எப்பொழுதும் போல அவன் கண்களில் பிரகாசமும் இயற்கையான புன்சிரிப்புடன் கூடிய ஒளியும் இருந்தன. புயல் வீசும் கடலில் கூட அமைதி குலையாது மிதக்கும் கப்பல் போல, மனத்தில் எவ்வித அதிர்ச்சியும் இல்லாதவன் போல் நடந்து கொண்டிருந்தான் பூதுகன்.

அங்கொரு இடத்தில் யவன தேசத்து வியாபாரி ஒருவன் இரண்டு யவன தேசத்து அழகிகளை ஒரு பிரபுவிடம் விற்கும் முயற்சியில் ஈடுபட்டிருந்தான். அது அவன் கவனத்தைக் கவரக் கூடியதாக இருந்தது.

அந்த யவன நாட்டு அழகிகளை விலை பேசி வாங்க நினைத்த அந்தப் பிரபு பூதுகனைக் கண்டதும் சிறிது வெட்கம் அடைந்தவராக, ''பார்த்தீர்களா? இப்படி அழகான பெண்களை யெல்லாம் கொண்டு வந்து இங்கே விலை கூறுகிறார்கள்!'' என்றார்.

''உலகத்தில் எதையும் விலைக்கு வாங்குகிறவர்கள் இருக்கிறபோது ஏன் இந்த அழகிகளைக் கொண்டு வந்து விலை கூறுகிறவர்கள் இருகக மாட்டார்கள்?'' என்றான் பூதுகன்.

''இந்தப் பெண்கள் மிகவும் அழகாகத் தானிருக்கிறார்கள். விலைக்கு வாங்கி வைத்தால் எதற்காவது உபயோகப் படுவார்கள். எவ்வளவு கேவலம்? பெண்களை விலை என்று பேசி வாங்கத்தான் மனம் கூசுகிறது'' என்றார் பிரபு.

பூதுகன் சிரித்தான். ''ஏன் மனம் கூச வேண்டும்? மனிதன் தன்னுடைய சந்தோஷத்துக்காகவும் இன்பத்துக்காகவும் எவ்வளவு பொருள்களை விலை கொடுத்து வாங்க



வில்லை? அதைப்போலத்தான் இதுவும். உங்களிடம் பொருள் இருக்கிறது. கூசாமல் வாங்குங்கள். இந்த உலகில் இன்பம் அனுபவிக்கத்தானே நாம் பிறந்திருக்கிறோம்'' என்று சொன்னான் பூதுகன்.

''பெண்களைக் கேவலம் ஆடுமாடுகளைப் போல் விலை பேசி வாங்குவதென்றால்! ......'' என்று இழுத்தார் பிரபு.

பூதுகன் கலகலவென்று சிரித்தான். ''ஆடுமாடுகள் மாத்திரம் ஜீவன்கள் இல்லையா? அவைகளையும் விலைக்கு வாங்காமல் இருக்கலாம் அல்லவா? இந்த உலகமே விநோதமான உலகம்! வீண் தத்துவங்களெல்லாம் பேசி மனிதர்கள் தங்கள் சுகத்தைத் தாங்களேபலியிட்டுக் கொள்கிறார்கள். இதோ பாருங்கள்! இந்த யவனன் பொருளை விரும்பி இந்த நங்கையரை விற்க நினைக்கிறான். அந்த அழகிகளோ தங்கள் வாழ்வை எப்படியேனும் நடத்தளந்தத் தேசத் தவர்களுக்காவது சந்தோஷத்துடன் அடிமையாகலாம் என்று அவனோடு வந்திருக்கிறார்கள். நீங்களோ சுகத்தை விரும்பி அவர்களை விலைகொடுத்து வாங்க நினைக்கிறீர்கள். இதில் தரும விரோதமோ, பாவமோ எப்படி வந்து புகுந்தது என்று தான் எனக்குத் தெரியவில்லை. வீண் கற்பனை இருளில் இறங்கி இன்பத்தைக் குலைத்துக் கொள்ளுகிறவன் மனிதன் அல்ல. உயிருள்ள வரையில் இந்த உலகத்தில் இன்பத்தையும், சுகத்தையும் அனுபவிக்கிறவன்தான் மனிதன். இந்த உலகத்தில் நாம் அனுபவிக்கும் சுகம்தான் சொர்க்கம். நான் அனுபவிக்கும் துக்கம்தான் நரகம். மனம் கூசாமல் இந்த அழகிகளை விலைக்கு வாங்குங்கள்.....'' என்று சொல்லிவிட்டு அங்கிருந்து நடந்தான் பூதுகன்.



**பூ**துகன் அந்தவியாபார ஸ்தலங்களையெல்லாம் தாண்டிக் கடற்கரையை அடைந்தான். இருள் சேரும் நேரம். மழை வருவதற்கு அறிகுறியாக வானில் கருமேகக் கூட்டம் குமைந்து நின்றது. பேரிரைச்சலுடன் பொங்கி அலை எழும்பிக் கரையில் மோதும் பெருங்கடல் கண்ணுக் கெட்டிய நெடுந்தூரத்துக்கு அப்டால் வானத்தை அளவெடுத்துக் கோடிட்டது போல் அமைதியாக நின்றது. தெற்குக் கடற் கரையில் முத்துக் குளிக்கச் சென்று திரும்பும் இடமிக்க பரதவர்களின் கட்டு மரங்களும் சமீப தூரத்திலேயே மீன் பிடிக்கச் சென்ற பரதவர்களின் கட்டு மரங்களும் பரந்த நெடுங்கடலில் இங்கொன்றும் அங்கொன்றுமாகக்கரையைநோக்கி வந்து கொண்டிருந்தன. கடல் நோக்கிச் சென்ற நாயகரின் வரவை எதிர் பார்த்துக் கடற்கரையில் நின்றுகொண்டிருந்தனர் பரதவர்களின் காதலிகள்.

அவர்களுடைய குழந்தைகள் மணற் பரப்பில் ஓடிக் குதித்தும், கரைக்குச் சமீபமாகக் கடலில் மூழ்கி நீந்தியும் விளையாடிக் கொண்டிருந்தனர். பரதவர்களின்பெண் குழந்தைகள் எல்லாம், கடல் உந்திக்கொண்டுவந்து கரைசேர்க்கும்சோழி, சிப்பி, பளபளக்கும் வர்ணக் கற்கள் இவைகளை ஓடோடிப் பொறுக்கிச்சேர்த்துக் கொண்டிருந்தனர். இந்த மனோரம்யமான காட்சிகளையெல்லாம் அனுபவித்த வண்ணம் கரையோரமாகத் தென்திசை நோக்கி நடந்து கொண்டிருந்தான் பூதுகன்.

கண நேரத்தில் இவ்வுலகில் எத்தகைய மாறுதல்கள் வேண்டுமானாலும் ஏற்படலாம் என்பதற்கு அறிகுறியாக ஒரு பெரிய காற்று வீசியது. அதைத் தொடர்ந்து சரசரவென்ற பேரிரைச்சலோடு கூடிய மழையும் பொழியத் தொடங்கியது. வெட்டி வெட்டிப் பாய்ந்தது மின்னல். கடலின் அலைகள் விண்ணையே போய் முட்டுவது போல ஓங்கி ஓங்கிப் புரண்டு விழுந்தன. 'கூ கூ' என்று கூவிக் கூவி வீசியது பேய்க் காற்று. மழை எப்படி வந்தது? இயற்கையின் திருவிளையாடலை, அதிசய சக்தியை யாரே அறிவார்? கடலோரமாக நடந்து வந்து கொண்டிருந்த பூதுகன் எதிர்பாராத வண்ணம் ஏற்பட்ட அந்தப் பெரு மழையிலிருந்து தன்னைக் காப்பாற்றிக் கொள்வதற்காகக் கடற்கரை யோரமாக இருந்த சோலையை நோக்கி விரைந்து ஓடினான்.

## மூன்றாம் அத்தியாயம்

# 'நான் பூதுகன்'

பூதுகன் அந்தப் பெரு மழையில் அதிகம் நனையாமல் தப்பித்துக்கொள்ள வேண்டுமென்று நினைத்தானே தவிர, அந்தச் சோலையை அடைவதற்குமுன்பே முழுவதும் நனைந்து விட்டானென்றே சொல்ல வேண்டும். அந்தச் சோலைக்குள் செல்லும் வாசல் ஸ்தூபங்களோடு கூடிய சிறிய மண்டபமாகக் காணப்பட்டது. அலங்காரமாகக் கட்டப்பட்டிருந்த அந்த ஸ்தூப வளைவில் அதிக இடமில்லா விட்டாலும் அந்தப் பெரு மழையில் அதிகமாக நனையாமல் நிற்பதற்கு வேண்டிய இடவசதி இருந்தது. புகார் நகரின் எல்லைக்கு வெளியே கடற்கரை ஓரமாக இருக்கும் அந்தப் பூஞ்சோலையைச் சம்பாதிவனம் என்று சொல்லுவார்கள். அந்தப் பூஞ்சோலையினிடையே ஒரு பௌத்த விஹாரம் இருந்தது. அந்தப் பௌத்த விஹாரத்தில் அனேக பிக்ஷுக்களும், பிக்ஷுணிகளும் வசித்து வந்தனர் என்பதெல்லாம் பூதுகனுக்குத் தெரியும். எந்நாளும் அவன் அங்கே வருவதற்குப் பிரியப்பட்டதில்லை. ஆனால் அவன் அன்று எதிர்பாராத விதமாக அங்கு வர நேர்ந்ததும் ஏதோ நன்மைக்குத்தான் என்று அவன் மனத்துக்குள் எண்ணினான்.

மழை சிறிது நின்றது. மழை பூரணமாக நிற்கா விட்டாலும் பிசுபிசுவென்று பொழிந்து கொண்டிருந்தது. மாலை மறைந்து இரவு நெருங்கியது. முன்னிலவு காலமாயிருப்பினும் வானம் முழுவதும் யானைக் கூட்டம்போலக் கருமேகக் குழப்பம்தான் சூழ்ந்து நின்றது. தூரத்தில் தெரியும் கலங்கரை விளக்கின் பிரகாசமான ஒளி கரிய இருளிடையே வானத்தை எட்டிப் பிடித்து அன்று சந்திரனுக்குப் பதிலாகத் தானே ஆட்சியைக் கைப்பற்றிக் கொண்டது போல் காட்சி யளித்தது.

சம்பாதி வனத்திலுள்ள புத்த விஹாரம் தீப ஒளி செய்யப்பட்டுத் திகழ்ந்ததுபோல் காட்சி யளித்தது. கடலின் அலையோசையினிடையேயும், மழை யோசையினிடையேயும், அதர்மத்தின் பெருங் கூச்சலினிடையேயும் தர்மத்தின் இனிய குரல் எழுவதுபோல் புத்த விஹாரத்திலிருந்து எழுந்த மணியோசை கேட்டது. இது பிரார்த்தனை நேரம் என்பதை மணியோசை மூலமாக அறிந்த பூதுகனுக்கு அந்தப் புத்த விஹாரத்துக்குள் சென்று பார்த்து விட வேண்டுமென்று ஆவல் எழுந்தது. அவன் அந்தச் சோலையின் மத்தியிலே இருந்த புத்த விஹாரத்தை நோக்கிச் சற்று வேகமாகவே நடந்தான்.

மனத்தைக் கவரும் சிற்ப வேலைப்பாடுகள் அமைந்த பெரிய கருங்கல் கட்டடமாக அந்தப் புத்த விஹாரம் காட்சியளித்தது.

பூதுகன் அந்த விஹாரத்தினுள் நுழைந்தபோது முக்கியமான இடங்களில் ஏற்றி வைக்கப்பட்டிருந்த தீபங்களினால் சிறிது ஒளியும் மற்ற இடங்களில் திட்டுத் திட்டாக இருளும் சூழ்ந்திருந்தன. அது மெய்ஞ்ஞான ஒளியை அடைந்த உள்ளத்தின் ஓரங்களிலும் உலக மாயையின் இருள் ஒதுங்கி நிற்பது போலத்தான் இருந்தது. உள்ளே சபா மண்டபம் போன்ற முற்றம். அவைகளைச் சுற்றிலும் நீண்ட தாழ்வாரம். அந்தச் சபா முற்றத்தில் பிரதானமான இடமாக உயரமாக அமைக்கப்பட்ட மேடை. அந்த மேடையின் மேல் ஏறுவதற்கு நான்கு படிகள். புத்த சங்கத்தின் முக்கிய நிவர்த்தி மார்க்கக் கொள்கைகளான துக்கம், துக்கோற்பத்தி, துக்க நிவாரணம், துக்க நிவாரண மார்க்கம் இவைகளைக் கடந்து நிர்வாண நிலையை யடையும் நிலையை எடுத்துக் காட்டுவது போல அந்தப்படிகளில் சிற்பங்கள் செதுக்கப்பட்டிருந்தன. அந்த மேடை மேலே தாமரை மலரில் அமர்ந்திருந்த புத்த பிரானின் பொற்படிவம் ஒன்றும் வைக்கப்பட்டிருந்தது. அந்தப் படிவத்துக்குப் பின்னால் மிகப் பெரிய தருமச் சக்கரம் ஒன்று பொறிக்கப்பட்டிருந்தது.

அந்தப் பொற்படிவத்தின் பக்கத்தில் வைக்கப்பட்டிருந்த வெள்ளி விளக்குகளின் ஒளி அந்த இடத்தையே துயர இருள் ஒட்டாத சுவர்க்கமாகக் காட்டியது. அந்தச் சபையைச் சுற்றிலும் சதுரமாக அமைக்கப்பட்ட கூடங்களின் தென்புற அறை வாசலிலிருந்து புத்த பிக்ஷுக்கள் ஒவ்வொருவராக வெளியே வந்து வரிசையாக நின்றனர். வடபுறத்தில் இருந்த அறையின் வாசல் வழியாகப் புத்த பிக்ஷுணிகள் வந்து வரிசையாக நின்றனர். தலையை முண்டிதம் செய்துகொண்டு உடல் முழுதும் மறையும் வண்ணம் சீவர ஆடை அணிந்திருக்கும் புத்த பிக்ஷுக்கள் கையில் மலர்க் கொத்துக்களோடு தலை வணங்கி நின்றனர். நீண்ட தடித்த கேசங்கள், முடியப்படாமல் பிரி பிரியாகத் தோளில்

தொங்க, சீவர ஆடையால் தங்கள் உடல் அழகுகளையும் வெளிக்குத் தெரியாமல் மிக்க அடக்கமாகப் போர்த்தி மறைத்திருக்கும் புத்த பிக்ஷுணிகள் கையில் மலர்க் கொத்துக்களை ஏந்திச் சிரம் தாழ்த்தி நின்றனர். பிக்ஷுணிகளைக் காட்டிலும் பிக்ஷுக்களே அதிகமாக இருந்தனர். அவ்விடம் இருந்த பிக்ஷுக்கள் இருபத்தைந்திலிருந்து எழுபத்தைந்து வயது வரையில் மதிக்கக் கூடியவர்களாயிருந்தனர். பிக்ஷுணிகளிலோ இருபது வயதிலிருந்து நாற்பது அல்லது ஐம்பது வயது வரையில் உள்ளவர்களாக இருந்தனர்.



அந்த விஹாரத்துக்குள் வந்த பூதுகன் தாழ்வாரத்தில் இருள் நிறைந்த இடத்திலுள்ள ஒரு தூணுக்குப் பக்கத்தில் நின்று கொண்டு என்ன நடக்கிறது என்பதைக் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தான். அந்தச் சமயத்தில் அவன் பகிரங்கமாகவே போய் நிற்கலாம். எவரும் தடை சொல்ல மாட்டார்கள். ஆனால் அன்னியனான தன்னைக் கண்டால் அவர்கள் தங்களுடைய செய்கைகளை மறைத்துக் கொள்ளக் கூடும் என்று நினைத்தான். அவன் மறைந்து நின்று கொண்டிருந்த அந்த இடம் ஒவ்வொன்றையும் தெளிவாகப் பார்ப்பதற்கும், கேட்பதற்கும் வசதியாக இருந்தது. வரிசையாக நின்று கொண்டிருந்த ஒவ்வொரு பிக்ஷுவினுடைய முகத்தையும் பிக்ஷுணிகளின் முகத்தையும் அவன் நன்றாகப் பார்க்க முடிந்தது. அந்தப் பிக்ஷுக்களிலும், பிக்ஷுணிகளிலும் யௌவன வயதுடையவர்களாய்இருப்பவர்களைக்கண்டு அவன் மனத்தில் இரக்கமும் பச்சாத்தாபமும் ஏற்பட்டன. இந்த வயதில் சீவர ஆடையை ஏற்றுக் கொள்ளும் அளவுக்கு அவர்களுக்கு உலகில் வைராக்கியத்தையும் வெறுப்பையும் உண்டாக்கிய விஷயம் எதுவாக இருக்குமென்று அவனுக்குத் தெரியவில்லை. இளம் வயதிலேயே சீவர ஆடையைப் போர்த்தித் திரியும் அவர்கள் மூடத்தனமான கொள்கையையுடைய பக்தர்களாகவோ அல்லது சுயநலம் கருதி வேஷமிடுகிறவர்களாகவோதான் இருக்க வேண்டுமென்று அவன் கருதினான். 'உலகின் துக்கத்தைத் துடைக்கிறேன்' என்று சொல்லித் தானே வாழ்க்கையைப் பாழாக்கிக் கொண்டு துக்கத்தில் உழலுவதைக் கண்ட அவனுக்கு நகைப்பாகத்தான் இருந்தது. ஒருவன் உண்மையாகத் துறவறத்தை ஏற்றுக் கொண்டாலும் உலகில் அனுபவிக்க வேண்டிய சுகங்களைப் பலியிட்டுக் கொண்டு அவன் தன்னைத் தானே ஏமாற்றிக் கொள்கிறான் என்பது தான் அவனுடைய எண்ணம்.

புத்த விஹாரத்திலிருந்து 'டாண்! டாண்!' என்று அன்பு நாதத்தை எழுப்பிக் கொண்டிருந்த மதுரமான மணியோசை இன்னமும் ஒலித்துக் கொண்டே இருந்தது. அந்தப் பிக்ஷுக்களின் குழுவில் மிகவும் வயதானவரும் முன் வரிசையில் நிற்பவருமான ஒருவர்,

'நமோ தஸ்ய
பகவதோ அரஹதோ
ஸம்மாஸம்புத்தஸ்ய'

என்று சொன்னார். அப்பிக்ஷுவைத் தொடர்ந்து மற்றப் பிக்ஷுக்களும், பிக்ஷுணிகளும் :

'புத்தம் சரணம் கச்சாமி,
தம்மம் சரணம் கச்சாமி
சங்கம் சரணம் கச்சாமி'

என்றனர். வயதில் நிறைந்த பிக்ஷு முதலில் சொல்லிய சுலோகத்தை மறுமுறையும் சொன்னார்.

'துதியம்பி புத்தம் சரணம் கச்சாமி
துதியம்பி தம்மம் சரணம் கச்சாமி
துதியம்பி சங்கம் சரணம் கச்சாமி'

என்றனர். மறுபடியும் வயோதிகரான பிக்ஷு தம் சுலோகத்தைச் சொன்னார்.

'ததியம்பு புத்தம் சரணம் கச்சாமி
ததியம்பு தம்மம் சரணம் கச்சாமி
ததியம்பு சங்கம் சரணம் கச்சாமி'

என்றனர். முதலில் வயதில் மூத்தவராக இருக்கும் பிக்ஷு நான்கு படிகளையும் கடந்து மேடைமீது ஏறித் தம் கையில் ஏந்தி இருந்த மலர்க் கொத்தைப் புத்தர் சிலையின் பாதார விந்தங்



தேனிதயாள் இண்டஸ்ட்ரீஸ் குழுவின் டைரக்டரான ஸ்ரீ ஹரிகிருஷ்ணதாஸ் அகர்வால், உருக்கு யூனிட்டுகளும் கேபின்களும் தயாரிக்கும் இயந்திரங்கள் வாங்குவதற்காக அமெரிக்கா சென்றிருக்கிறார். தேனிதயாள் இண்டஸ்ட்ரீஸ் குழுவினருக்கு ஏ ஸி எஸ் ஆர் கண்டக்டர்களும், 'வி ஐ ஆர்', 'வி டி எஸ்' மின்சாரக் கம்பிகளும் இந்தியாவில் தயார் செய்ய லைசென்ஸ் வழங்கப் பட்டிருக்கிறது.

களில் வைத்து வணங்கினார். அவருக்குப் பின்னால் ஒவ்வொருவராக மேடை மீது ஏறி மலரைப் புத்தர் பெருமானின் திருவடிகளில் சமர்ப்பித்து விட்டு வந்தனர். எல்லாப் பிக்ஷுக்களும் தங்கள் மலரைப் பகவானின் திருவடியில் சமர்ப்பித்த பிறகு பிக்ஷுணிகள் வரிசையாகச் சென்று தங்கள் கையிலுள்ள மலர்களைப் பகவானுக்கு அர்ப்பணித்தனர்.

கடைசியில் வயதில் சிறியவளாக இருந்த ஒரு பிக்ஷுணி தன் கையிலுள்ள மலரைப் பகவருக்குச் சமர்ப்பணம்செய்வதற்காக மெதுவாகச் சென்று மேடையின் முதல் படியில் காலை வைத்த போது, "பகவதி, நில்...." என்ற குரல் கேட்டுச் சட்டென்று நின்று விட்டாள். திடீரென்று ஏற்பட்ட இந்தக் குரலைக் கேட்டுப் பிக்ஷுக்கள் கலவரம் அடைந்தவர்களாக நின்றனர். அந்தப் பிக்ஷுக்களினிடையே இருந்த ஒருவர், "இவள் ததாகதருக்கு மலர் சமர்ப்பிக்க அருகதையற்றவள், சங்கத்தில் இருக்கத் தகுதியற்றவள்......" என்றார்.

வயதில் முதிர்ந்தவராக இருந்த துறவி முன்னால் வந்து நின்று கையைத் தூக்கி வேதனை நிறைந்த குரலில் 'சாந்தி, சாந்தி' என்று இரு தடவைகள் சொல்லி விட்டுச் சில விநாடி நேரம் கண்களை மூடிக் கொண்டு தியானத்தில் இருப்பவர் போல் இருந்தார். பிறகு கண்களை விழித்துத் துயரம் நிறைந்த குரலில், "இது பிரார்த்தனை நேரம். இந்தச் சமயத்தில் தியானத்தைத் தவிர வேறு எதையும் புத்தர் பெருமான் விரும்ப மாட்டார். பிறர் குறையைக் காண்பது எளிது. தன் குறைகளை முதலில் அறிந்து கொள்கிறவனே பிக்ஷு என்ற பெயரைச் சூட்டிக் கொள்ள அருகதை உள்ளவன். கொலைக் குற்றம் கூடச் செய்திருக்கலாம். ஆனால் புத்தர் பெருமானின் பொன்னடிகளில் மலர்களை வைத்து வணங்க அவர்களை அருகதை யற்றவர்கள் என்று யாரும் தடுக்க முடியாது. அன்புருவமும் குற்றம் செய்தவர்களை மறுபடியும் மன்னிக்கும் தயாள குணமும் பொருந்திய ததாகதருக்கு இது உவப்பாகாது. பகவதி ஏதேனும் குற்றங்கள் இழைத்திருக்கலாம். அதை விசாரணை செய்ய வேண்டியது சங்கத்தின் விதி. கணவனைக் கொன்றவனைக் கூடப் பௌத்த சங்கம் ஏற்றுக் கொண்டிருக்கிறது. துக்கமடைந்தோரையும், அனாதையானவர்களையும், தீய ஒழுக்கத்தினால் சமூகத்திலிருந்து ஒதுக்கப்பட்டவர்களையும் ஏற்று அன்பு, அடக்கம், அஹிம்சை இவற்றின் மூலமாக அவர்களை நல்வழியில் புகுத்துவதற்காகத் தான் சங்கம் ஏற்பட்டிருக்கிறது. இதுதான் புத்தர் பெருமானின் முக்கிய விருப்பம். துக்கம் அடைந்தவர்களின் பாதுகாப்பாளர் அவர். துயரமடைந்தோரை மேலும் துயரமடையச் செய்வதற்காக அந்தக் கருணாமூர்த்தி இந்த உலகுக்கு வரவில்லை. அவர் அவதரித்தது இந்த உலகத்தின் துயரைத் துடைப்பதற்காகத்தான். பிக்ஷு என்று தன்னைச் சொல்லிக் கொள்ளும் ஒவ்வொருவரும் இதை உணர்ந்து கொள்ள வேணும். ஒழுங்கை நிலைநிறுத்த வேண்டும், ஊழலைக் களையவேண்டும். நாளைய மறுதினம் பௌர்ணமி—பாடி மோக்ஷம்—அன்று பகவதியின் குற்றங்களை விசாரிக்கலாம். இன்று பகவனுக்கு மலர் அர்ப்பணிப்பதைத் தடுக்கும் பாவத்தைப் பிக்ஷுக்களாகிய நாம் ஏற்றுக் கொள்ள வேண்டாம்" என்றார்.

அமராவதி புத்தவிஹாரத்தில் பல வருஷ காலம் பிக்ஷுவாய் இருந்து பயிற்சி பெற்றிருந்த அக் காவிரிப்பூம் பட்டினத்திலுள்ள அந்தப் பௌத்த சங்கத்துக்கு மகாதேரர் அப்பொழுது தலைவராக இருந்தார். சங்கத்தில் தேரராவதென்றால் வயதிலும் படிப்பிலும் அனுபவத்திலும் மிகுந்தவராக இருக்க

வேண்டும். அக்கமகாதேரர் அசோகனைப் பௌத்த மதத்தில் பற்றுக் கொள்ள வைத்த உபகுப்தர் என்னும் பௌத்த மகானின் வழியில் வந்தவர். நாலந்தா கல்லூரியில் படித்த பேரறிவாளர். அவருடைய அன்பு மார்க்கத்தாலும், ஒழுக்க சீலத்தாலும் பூம்புகார் நகரத்தில் மாத்திரமல்ல, தமிழகமெங்குமே அவர் பெரிய தவசிரேஷ்டராகப் போற்றப்பட்டார். அக்கமகாதேரர் தம் கருணை நிறைந்த பார்வையை அந்தப் 'பிக்ஷுணியிடம் செலுத்தி, பகவனுக்கு மலரைச் சமர்ப்பிக்கலாம்' என்பது போல் மெதுவாகத் தலையசைத்தார்.

அந்த இளம் பிக்ஷுணி மலர்களைப் பெருமானின் திருவடிகளில் சமர்ப்பித்த பின் அமைதி நிறைந்த இரவில் கடலோசை கேட்பது போல் 'புத்தம் சரணம் கச்சாமி — தம்மம் சரணம் கச்சாமி, சங்கம் சரணம் கச்சாமி' என்ற கோஷங்கள் எழுந்தன. மணியோசையும் ஓய்ந்தது. பிக்ஷுக்களும், பிக்ஷுணிகளும் அமைதியாகக் கலைந்தனர். இருளிடையே தூண்மறைவில் நின்று எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருந்த பூதுகனுக்கு அங்கு நடந்தவைகள் எதுவுமே ஆச்சரியத்தையோ, வியப்பையோ கொடுக்கவில்லை. ஆனால் அவன் மனத்தில் ஆச்சர்யத்தையும், பரபரப்பையும் உண்டாக்கிய விஷயம் ஒன்றுதான். அந்தத் துறவிகளின் கூட்டத்தில் கடைசியில் நின்ற ஒருவருடைய முகம் அவனுக்கு யாரையோ நினைவுப்படுத்தியதுதான் அவனுக்கு வியப்பை ஏற்படுத்தியது. இவன் கவனத்துக்கு உள்ளான அந்தப் பிக்ஷு மற்றப் பிக்ஷுக்களைப் போல் பிரார்த்தனைக்குப் பின் அந்த இடத்தை விட்டுச் செல்லாது கரங்களைக் குவித்த வண்ணம், கண்களை மூடிக் கொண்டு பிரார்த்தனையில் லயித்துப் போயிருந்தார். மற்றவர்களெல்லாம் சென்ற பிறகு அந்தப் பிக்ஷு தனியாக நின்று கொண்டிருப்பது அவனுக்கு ஒரு வாய்ப்பாகவும் பட்டது. அவன் சிறிதும் அச்சமோ தயக்கமோ இன்றிச் சட்டென்று அந்தத் துறவியை நெருங்கி அவர் தோளைத் தொட்டு அசைத்தான். தியானத்திலிருந்த பிக்ஷு கண்களைத் திறந்து எதிரில் நின்றவனைப் பார்த்ததும் பேய் அறைந்தவர் போல ஆகி விட்டார். ஆனால் கண நேரத்தில் அவர் மனத்தில் திடமும் தெளிவும் ஏற்பட்டு விட்டதை முகத்தின் ஒரு ஒளி காட்டியது.

"பூதுகனா..?" என்றார் சிறிது அச்சத்தோடும் ஆச்சர்யத்தோடும். (தொடரும்)

---



# மகிழம்பூ மரைக்காயர்

சேத்தூர் கூத்தன்

'கம்'மென்று மகிழம் பூவின் வாடையும், ஊது வத்தியின் வாசமும், நல்ல சாம்பிராணியின் நறுமணமும் கடை வாசலைத் தாண்டித் தெருவெல்லாம் வீசியது.

தங்கவேல் தன் இறந்து போன தந்தையின் படத்துக்குத்தான் இத்தனை நைவேத்தியமும் வைத்து வணங்கிக் கொண்டிருந்தான். வாரத்துக்கு ஒரு நாள் அந்தப் படத்துக்குச் சிறப்பாகப் பூசை செய்யத் தவற மாட்டான்.

கூப்பி இருந்த கையை எடுத்து, குனிந்திருந்த தலையை நிமிர்த்தினான். யோகநிலையில் அவனுடைய தந்தை புகைப்படத்தில் காட்சி அளித்தார். அவனுடைய வாய் அவரைப் பார்த்து முணுமுணுத்தது.

''......தாங்கள் இறந்து போய் நான்கு வருஷங்களுக்கு மேல் ஆகிறது. இந்த நான்கு வருஷங்களில் நான் எவ்வளவோ அனுபவித்து விட்டேன். என்கையில் காசு இருந்த பொழுது கணக்கு வழக்கின்றி எல்லோருக்கும் கொடுத்து உதவினேன். ஆனால் இன்று என்னை நம்பிக் காலணா கொடுக்க யாரும் முன்வரவில்லை. நாளைப் பொழுதிற்குள் ஆயிரம் ரூபாயாவது கிடைத்தால்தான் என் மானம் கப்பல் ஏறாமல் இருக்கும்....''

தனக்கு ஏற்பட்ட வேதனையை அந்தப் படத்துக்கு எதிரில் கொட்டித் தீர்த்தான். அவன் உள்ளம் சுழலில் அகப்பட்ட துரும்பு போல் இருந்தது.

இந்தச் சமயத்தில் 'மகிழம்பூ மரைக்காயர்' அவன் விறகுக்கடையை நோக்கி வந்து கொண்டிருந்தார். யானை பின்னே வருவதை மணி ஓசை முன்னே அறிவிக்குமல்லவா? அதுபோல் மரைக்காயர் வருவதை அவருடைய ஊன்றுகோல் முன்னேயே தெரிவித்தது.

இடுப்பிலே காவி ஏறிக் கந்தலாய்ப் போன கைலி. தலையிலே அழுக்கடைந்து பழசாய்ப் போன தொப்பி. உடலில் இழிந்த சட்டைக்குப் பாதுகாப்பாய்ப் பொத்தலாய்ப் போன கோட்டு. கையிலே ஒரு மூங்கில் தடி. கழுத்திலே கன்னங்கரேல் என்ற நூலில் கோத்த தாயத்து. கூன் விழுந்த முதுகு. நரைத்த மீசையும் தாடியும். மங்கிய கண்கள்—இத்தனை கோலங்களோடும் தள்ளாடியபடியே தங்கவேலுவுக்கு முன்னால் இருந்த ஒரு பலகையில் உட்கார்ந்து, தம் கோட்டுப் பையில் கையை விட்டு ஒரு பழைய துணி முடிச்சை வெளியே எடுத்து அவிழ்த்து மேசையின் மேல் கொட்டினார். அந்தப் பழைய துணியிலிருந்து புதிய மணம் கமழும் மகிழம்பூ பொல பொலவென்று கொட்டியது.

தங்கவேலுதான் அவருக்கு 'மகிழம்பூ மரைக்காயர்' என்ற பெயரைச் சூட்டியது. அவருடைய இயற் பெயர் அப்துல் ஹாதி சாஹேப். ஆனால் இப்பொழுது மகிழம்பூ மரைக்காயர் என்றால்தான் பலருக்குப் புரியும்.

தங்கவேலுவின் தந்தை பக்கிரிசாமியும் அப்துல் ஹாதியும் சிறு வயது முதற்கொண்டு ஒன்றாகப் பழகியவர்கள். இருவரும் செல்வம் நிறைந்த குடும்பத்தில் பிறந்து செல்வமாக வளர்ந்தவர்கள். பெற்றோர்கள் அளித்த செல்வம் பிள்ளைகளுக்குத் தீம்பாயிற்று.

பள்ளிக்கூடம் போவதாகக் கூறிப் பல இடங்களிலும் சுற்றித் திரிய ஆரம்பித்தார்கள். எவ்வளவு தீய பழக்கங்களைக் கற்க முடியுமோ அவ்வளவையும் இருபது வயதுக்குள்ளேயே பக்கிரிசாமியும் அப்துல் ஹாதியும் கற்று விட்டார்கள்.

பெற்றவர்களுக்குப் பிள்ளைகளின் போக்கு சொல்ல முடியாத வேதனையை அளித்தது. பக்கிரிசாமியின் பெற்றோர்கள் அப்துல் ஹாதியால்தான் தங்கள் பிள்ளை கெட்டான் என்றும், ஹாதியின் பெற்றோர்கள் பக்கிரிசாமியால் தான் தங்கள் பிள்ளை கெட்டான் என்றும் எண்ணினார்கள். அதோடு பெரியவர்கள் தங்களுக்குள் விரோதமும் கொண்டார்கள்.

முடிவில் ஹாதியையும் பக்கிரிசாமியையும் சேர விடாமல் செய்தால் எல்லாம் சரியாகி விடும் என்று பிள்ளைகளைப்பெற்றவர்கள் முடிவு கட்டினார்கள். ஆனால் உயிர் நண்பர்களான ஹாதிக்கும் பக்கிரிசாமிக்கும் தங்களைப் பிரிப்பது தங்கள் உடலிலிருந்து உயிரைப் பிரிப்பது போலவே இருந்தது.

திடீரென்று ஒருநாள் பக்கிரிசாமியையும் ஹாதியையும் காணவில்லை. அதே சமயத்தில் சிறு குழந்தைகள் அணிந்திருந்த நகைகளும், தப்பித் தவறி வெளியில் வைத்திருந்த பணமும் காணாமல் போயிருந்தன. இருவரது வீட்டிலுமே இந்தத் திருட்டு நடந்திருந்தது. பக்கிரிசாமியின் தந்தையும் ஹாதியின் தந்தையும் பிள்ளைகளை எங்கெங்கோ போய்த் தேடினார்கள். பயனில்லை.

சில மாதங்கள் சென்ற பின்புதான் பக்கிரியும் ஹாதியும் கப்பல் ஏறி மலேயா சென்று விட்டார்கள் எனத் தெரிய வந்தது.

அந்தக் காலத்தில் கப்பல் பிரயாணம் வெகு லகுவாக இருந்தது. யார் வேண்டுமானாலும் டிக்கட் எடுத்துக் கொண்டு பிரயாணம் செய்யலாம். அப்பொழுதுதான் ஹாதியும் பக்கிரிசாமியும் மலேயாவுக்குச் சென்றார்கள். நல்லகாலமாகப் பக்கிரிசாமியின் மூளை நல்ல விதமாக வேலை செய்தது. கையில் இருந்த பணத்தைக் கொண்டு கோலாலம்பூரில் ஒரு சிறிய கடைவைக்கப் பக்கிரிசாமியே முதலில் யோசனை கூறினான்.

கடை நாளுக்கு நாள் விரிவடைந்தது. வியாபாரம் வலுத்தது. நாலைந்து ஆண்டுகளுக்குள்ளேயே பக்கிரிசாமியும் அப்துல் ஹாதியும் பல ஆயிரம் ரூபாய்களுக்கு உரியவர்களாய் இருந்தார்கள். இதற்கெல்லாம் முக்கிய காரணம் பக்கிரிசாமிதான். அவனுடைய திறமையால்தான் கடை இவ்வளவு விரிவடைந்தது. அவனிடமிருந்து தீய வழக்கமெல்லாம் எப்படியோ படிப்படியாகக் குறைந்து விட்டது. இப்பொழுது மாசு மறுவற்று விளங்கினான்.

ஆனால் அப்துல் ஹாதி அதே அப்துல் ஹாதியாகத்தான் இருந்தான். சொல்லப்போனால் அதைவிடச் சற்று அதிக 'முன்னேற்றம்' உடையவனாகவும் ஆகியிருந்தான். அவன் கடை விவகாரத்தில் தலையிடுவதே யில்லை. தேவையான பொழுது பக்கிரிசாமியிடம் பணம் வாங்கிக் கொள்வான். குடிப்பதும் மற்றக் 'கேளிக்கை'களில் ஈடுபடுவதுந்தான் அவன் பொழுதுபோக்காக இருந்தன.

பக்கிரிசாமி எவ்வளவோ சொல்லிப் பார்த்தான். அப்துல் ஹாதியின் காதில் அது ஏறவே இல்லை. கெட்ட பால் நல்ல பாலாகவா ஆகப் போகிறது? பக்கிரிசாமி உடனடியாகப் பிரிவினைக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தான். அதை நேரிடையாகச் சொல்லாவிட்டாலும் ஊருக்குப் போகும் சாக்காக அதைக் கிளப்பினான்.

ஹாதி ஊர் திரும்ப மறுத்து விட்டான். பக்கிரிசாமி தன் பாகத்தைப் பிரித்துக் கொண்டு ஊர் திரும்பி விட்டான். கைநிறையக் காசோடு வந்த பக்கிரிசாமிக்கு ஒரு பெரிய இடத்திலிருந்து பெண் கிடைத்தது. சில ஆண்டுகளிலேயே தங்கவேல் தலைப்பிள்ளையாகப் பிறந்தான். அதன் பிறகு புத்திர பாக்கியமே பக்கிரிசாமிக்குக் கிட்டவில்லை.

கையிலே காசை வைத்துக் கொண்டு சும்மா இருக்கப் பக்கிரிசாமிக்குப் பிடிக்கவில்லை. நகரத்திலும், நாட்டுப்புறத்திலும் சொந்த தம் ஊரில் ஆயிரக்கணக்கான ரூபாய்களைக் கொட்டிப் பெரிய விறகுக் கடை ஒன்றை ஆரம்பித்தான். சுற்றுப் புறங்களில் இருந்து விறகை வாங்கிச் சென்னை முதலிய இடங்களுக்கு எல்லாம் அனுப்பினான். பெருத்த லாபம் கிடைக்கா விட்டாலும்வரவுக்கும் செலவுக்கும் சரியாக இருந்தது.

ஒரு நாள் மாலை நேரம். பக்கிரிசாமி தன் வீட்டு முகப்பில் உட்கார்ந்து கடந்த கால



ஜனவரி 18 முதல்

...சென்னை...

சித்ரா • ஸ்ரீ கிருஷ்ணா

காமதேனு • மஹாலக்ஷ்மி

மற்றும் தென்னாடெங்கும்



உமா பிக்சர்ஸ்

சக்கரவர்த்தித் திருமகள்

டைரக்ஷன்:
ப.நீலகண்டன்
சங்கீதம்: ஜி.ராமநாதன்

ஏ எல் எஸ் வெளியீடு

ALS
PRODUCTIONS

பூரண உரிமையாளர்கள்
ஷண்முகா பிக்சர்ஸ். சென்னை.17

நினைவுகளில் மூழ்கி இருந்தான். அவன் மலையாளிலிருந்து வந்து ஏறக் குறைய இருபது வருஷங்களுக்கு மேல் இருக்கலாம். இத்தனை வருஷங்களும் எப்படித்தான் சென்றனவோ? அவனுக்கே அது ஆச்சரியமாக இருந்தது.

அப்பொழுது வாசலில் வண்டிவந்து நிற்கும் ஓசை கேட்டு எழுந்து போய்ப் பார்த்தான். யாரோ ஒரு வயதான முகமதிய மனிதர் வண்டியிலிருந்து கீழே இறங்கினார். அவர் நிலை பரிதாபத்துக்கு உரியதாக இருந்தது. அவர் வேறுயாரும் இல்லை. திருவாளர் அப்துல் ஹாதி சாகேப்தான் அந்தக் கதிக்கு ஆளாகி வந்திருந்தார்.

அப்துல் ஹாதி இந்தக் கதிக்கு ஆளாவார் என்று பக்கிரிசாமிக்கு நன்றாகத் தெரியும். ஆனால் தாய் நாட்டுக்குத் திரும்பி வருவார் என்று அவன் எதிர்பார்க்கவில்லை. தர்ம 'ஆர்ட'ரால் தாய்நாடு திரும்பிய ஹாதியிடம் வண்டிச் சத்தம் கொடுக்கக்கூட வழியில்லை. பக்கிரிசாமிதான் கொடுத்து அனுப்பினான்.

ஹாதியிடம் பக்கிரிசாமி எதுவும் கேட்கவில்லை. 'வெந்த புண்ணில் வேலை எறிவானேன்?' என்று பேசாமல் இருந்து விட்டான். ஹாதியின் உற்றார் உறவினர்களெல்லாம் எப்பொழுதோ கரை சேர்ந்து விட்டதால் ஹாதி உண்டு உறங்குவதெல்லாம் பக்கிரிசாமியின் வீட்டில்தான்.

திடீரென்று ஒருநாள் பக்கிரிசாமி மாரடைப்பால் இறந்து விட்டான். மகனுக்கு மணம் செய்துகூட அவன் பார்க்கவில்லை. பாவம்! தங்கவேலுவுக்குப் பேரிடியாக இருந்தது. இதுவரையிலும் வியாபாரத் துறையில் இருந்த நெளிவு சுளுவுகள் ஒன்றையும் அவன் அறிந்து வைத்திருக்கவில்லை. கொடுக்கல் வாங்கலும் அவனுக்குத் தெரியாது. இருந்தாலும் கடையை நல்ல முறையில் கண்காணிக்க ஆரம்பித்தான். ஆனால் ஆடம்பர வாழ்வில் பிரியமுள்ள அவன், சிக்கனமாக எப்படி இருக்க முடியும்? அதன் பலன் விரைவிலேயே தெரிந்தது. வியாபாரம் மந்தமாயிற்று. வாடிக்கைக்காரர்கள் குறைந்தார்கள். லாபம் கிடைக்காத தோடல்லாமல் நஷ்டமும் ஏற்பட்டது. முதலுக்கே கேடு வந்து கையில் இருந்த பணமும் கரைந்தது.

தங்கவேலு படும் சிரமத்தைப் பார்த்துக் கொண்டு அப்துல் ஹாதியால் சும்மா இருக்க முடியவில்லை. ஆனால் பக்கிரிசாமியின் பரந்த உள்ளம் தங்கவேலுவிடமும் இருந்தது. தந்தை இறந்த பிறகு அவன் எத்தனையோ இடர்களுக்கு உள்ளாகியும், அப்துல்ஹாதியை வெளியேற்ற முயலவில்லை. தகப்பனாரின் நண்பர் என்கிற மரியாதையை மனத்தில் வைத்துக் கொண்டு அவரைத் தன் குடும்பத்தினரில் ஒருவராகவே அன்போடு நடத்தி வந்தான். வரவரக் குடும்பக் கஷ்டம் அதிகமாயிற்று. அப்துல் ஹாதி தாமாகவே தங்கவேலுவின் பராமரிப்பிலிருந்து விலகிக் கொண்டு விட்டார். தங்கவேலு இதற்கு இலேசில் சம்மதிக்கவில்லை. ஆனால் ஹாதி வலுக் கட்டாயமாக அவனைச் சம்மதிக்கச் செய்து வெளியேறி, பெரிய பள்ளிவாசலுக்குப் பின்புறத்திலுள்ள மகிழ மரத்தடி மேடையை வாசஸ்தலமாகக் கொண்டார்.

தங்கவேலு அவர் செலவுக்காகத் தினந்தோறும் நாலணா கொடுத்து வந்தான். அதைக்கொண்டு அவர் ஒருவாறு தம் சரீர யாத்திரையை நடத்தி வந்தார். தினம் காலையில் வந்து தங்கவேலுவைச் சந்திப்பார். அவனும் தன் வறுமையிலும் அவரைக் கைவிட்டு விடாமல் உதவி செய்து வந்தான்.

தங்கவேலு தமக்குச் செய்து வந்த உதவியை இலவசமாகப் பெற்றுக் கொள்ள விரும்பாத அப்துல் ஹாதி, தினந்தோறும் பள்ளிவாசல் மகிழ மரத்தடியில் உதிரும் பூக்களைச் சிரத்தையோடு பொறுக்கி யெடுத்துத் தங்கவேலுவிடம் கொடுப்பார். இது நொந்து கிடந்த அவர் உள்ளத்துக்கு ஓரளவு சாந்தியை அளித்தது.

அவர் நாள் தோறும் பொறுக்கி வந்த மகிழம்பூ மலைபோல் குவிந்தது. தங்கவேலு அந்தப் பூக்களை மாலையாகக் கோத்துத் தன்

தந்தையின் படத்துக்குச்சூட்டிக் கடையையும் அலங்கரித்தான். நாள் தவறினாலும் ஹாஜி மகிழம்பூ பொறுக்கி வருவது தவறாது.

அன்றைக்கு என்றுமில்லாதவாறு அதிகமான மலர்களைக் கொண்டு வந்திருந்தார் மரைக்காயர். அதிகமான பூக்களைக் கண்டால் தங்கவேலுவுக்கு ஆனந்தம் தாங்க முடியாது. ஆனால் இன்றைக்கு அம் மலர்க் குவியலைக் காணக்காண ஆத்திரம் வந்தது அவனுக்கு.

''ஏன் இந்தக் கர்மத்தை மேசையின் மேல் கொண்டு வந்து கொட்ட வேண்டும்? இதே எழவாகப் போய் விட்டது. யார் எக்கேடு கெட்டால் உங்களுக்கு என்ன? 'எனக்குப் போடும் படியை நீ போடு' என்று பொழுது விடிந்ததும் கழுத்தறுக்க வந்துடுறீங்க. கையிலே காலணா காசு இல்லே. தயவு செய்து இனிமேல் காசு கேக என்று சொல்லிக் கொண்டு இங்கே வராதீங்க...'' தங்கவேல் பொரிந்து தள்ளி விட்டான்.

மரைக்காயர் பேய் அறைந்தாற் போல் ஆகிவிட்டார். தங்கவேலுவின் கடு சொற்கள் அவரை வாட்டின. 'தினந் தவறாமல் நான்கு அணா கொடுக்க வேண்டும் என்று அவர்களுக்கு என்ன விதி?' மரைக்காயர் இப்படியும் நினைக்கத்தான் செய்தார்.

ஏதோ தீர்மானமான முடிவுக்கு வந்தாற் போல் மரைக்காயர் எழுந்தார். தங்கவேலுவின் தந்தையின் படத்தை ஒரு தடவை உற்றுப்பார்த்தார். அவர் கண்கள் கலங்கின. நண்பனுக்காக எவ்வளவோ சிரமப்பட்ட பக்கிரிசாமியின் ஆத்மாவுக்காக மரைக்காயரின் உள்ளம் அல்லாவை நோக்கிப்பிரார்த்தித்தது.

மரைக்காயர் தங்கவேலுவிடம் வந்து, ''தம்பி, கவலைப்படாதீங்க! நம்மாலே செய்ய என்ன இருக்கிறது? எல்லாம் அல்லாவின் செயல். நம்பினவர்களை அல்லா கைவிட மாட்டார். மலைபோல் வந்த துன்பம் பனி போல் மறைந்து விடும்...போயிட்டு வரேன், தம்பி....'' என்று கூறிவிட்டுப் பள்ளிவாசலை நோக்கித் தள்ளாடி தள்ளாடி நடந்தார்.

தங்கவேலுவுக்கு அவர் போனது மகிழ்ச்சியாகவே இருந்தது. ஆனாலும் இனி எவ்வளவு சிக்கனமாய் இருந்து தான் என்ன செய்கிறது? ஊரில் பெரிய பணக்காரரான மருதமுத்துத்தேவரிடம் 'ஒரு மாதத்தில் தருகிறேன்' என்று ஆயிரம் ரூபாய் கடன் வாங்கி ஆறு மாதங்களுக்குமேல் ஆகிறது. தங்கவேல் மொட்டையாகி விட்டான் என்பதையறிந்து கொண்ட மருதமுத்துத் தேவர், முந்திக் கொண்டால்தான் ஏதோ கொடுத்த தொகையையாவது கண்ணால் பார்க்கலாம் என்று எண்ணி, 'ஒரு வாரத்தில் பணம் கட்டாவிட்டால் கடை சீல் வைக்கப்படும்' என்பதாக வக்கீல் மூலம் 'நோட்டீஸ்' விட்டார்.

நாளைதான் கடைசி நாள். நாளை பொழுதுக்குள் ஆயிரம் கிடைக்காவிடில் ....தற்கொலை செய்து கொள்வதுதான் சிறந்த வழி.

மறுநாள் தங்கவேலு தூக்கம் கலைந்து எழுந்திருக்கும் பொழுது பள்ளிவாசல் பக்கிரிசா இஸ்மாயில் எழவுச் செய்தியோடு காத்திருந்தான். ''மகிழம்பூ மரைக்காயர் இறந்தாரல்ல, அவுக பள்ளி வாசல் மகிழ மரத்தடியில் 'மவுத்'தாகிக் கிடக்குறாக. உங்களுக்கு வேண்டியவரானதாலே, அடக்கம் செய்வதற்கும் மற்றக் காரியங்களுக்கும் உங்களிடம் மௌல்வி சொல்லி வரச் சொன்னாக...''

பள்ளிவாசலை நோக்கி நடந்தான் தங்கவேலு. சனி தொலைந்தது என்று நினைத்தாலும் மனுஷன் செத்தும் செலவு வைத்துவிட்டானே என்றும் அவன் நினைத்தான்.

மௌல்வி, மரைக்காயரின் மூட்டை முடிச்சுகளைச் சோதித்து விட்டுக் கோட்டுப் பைகளையும் சோதித்தார். அதில்—ஒரு கசங்கிய கடிதம் இருந்தது. மரைக்காயர் தம் கையாலேயே எழுதி இருந்தார். மௌல்வி படித்தார். தங்கவேலு கேட்டான்.

''என் உயிரை எந்த நேரமும் அல்லா பெற்றுக்கொள்ளக் கூடும். என் உயிர் பிரியும் நாளை நான் ஆவலோடு எதிர்பார்க்கிறேன். ஆனாலும் ஒரு குறை. அதிருப்தியான வாழ்க்கையே வாழ்ந்தோம் என்று.

''என்னைப்போன்ற குணம் படைத்திருந்த பக்கிரிசாமி எவ்வளவோ நல்லவராகி விட்டார். நான் மட்டும் மூர்க்கத்தனத்தை விடவில்லை. பாகத்தைப் பிரித்துக் கொண்டு ஊருக்குப்போன பக்கிரிசாமியின் மேல் அளவற்ற வெறுப்பும் குரோதமும் கொண்டேன். அவர் கப்பலில் வரும்பொழுதே தீர்த்துக் கட்டிவிட முயன்றேன். ஆனால் அது பயனில்லாமல் போய் விட்டது.

''அநீதிகள் பல செய்து ஆதரிக்க யாருமின்றி மிகக் கேவலமான நிலையில் ஊர் திரும்பிய என்னைப் பக்கிரிசாமி அன்புடன் போற்றி உபசரித்தார். அவர் செய்கை என்னை அணு அணுவாகச் சிதைத்தது. அவர் அளித்த உணவைச் சாப்பிடும்போது உள்ளம் கூசியது.

''அவர் கொடுத்த பணம்-என் செலவுக்காக—நூற்றுக் கணக்கில் இருக்கும். அதில் காலணா கூடச் செலவுசெய்ய என் மனம் ஒப்பவில்லை. அந்தப் பணம் முழுவதும் மகிழமரப் பொந்தில் புதைத்துள்ளேன். தவிர, என் கழுத்தில் கிடக்கும் தாயத்தினுள் பத்து பவுன் எடையுள்ள தங்கம் இருக்கிறது. நான் மலேயாவில் இருக்கும்பொழுது அது ஒருநல்ல காரியத்துக்குப் பயன்பட வேண்டும் என்று அப்படிச் செய்தேன்.

''நான் இறந்து போனால் இவற்றை அருமைப் பக்கிரிசாமியின் குமாரன் தங்கவேலுவிடம் சேர்ப்பிக்கவும். நாகூர் ஆண்டவர் துணை. அப்துல் ஹாஜி சாகேப்.''

'செத்தும் செலவு வைத்தாரே மனுஷன்' என்று சற்று முன்பு பொருமினான் தங்கவேலு. ஆனால் உண்மையில் செத்தும் கொடை கொடுத்த சீதக்காதியைப் போல் இருந்தது அவர் செய்கை.

மரைக்காயர் வைத்திருந்ததைக் கொண்டு கடனைச் சுமுகமாகத் தீர்த்து விட்டு மீதம் இருந்ததைப் போட்டு 'மகிழம்பூ மரைக்காயர்' என்ற விலாசமுள்ள ஒரு விறகுக் கடையை ஆரம்பித்திருக்கிறான். நல்ல லாபம் கிடைக்கும் என்று நிச்சயம் எதிர்பார்க்கலாம். ஏனென்றால் தன் தந்தையின் படத்துக்குப் பக்கத்தில் மகிழம்பூ மரைக்காயரின் படத்தையும் மாட்டி வைத்திருக்கிறான். அது அவனுக்கு அளிக்கும் அறிவுரை அளவிடற்கு அரியது என்று சொல்லியா தெரிய வேண்டும்?

# பாலர் மலர்











''ஐயா! ரயில்வே ஸ்டேஷனுக்குச் சீக்கிரம் போக ஒரு வழி சொல்லேன்!''
''வேகமா ஓடுங்கோ; சீக்கிரம் போய்ச் சேர்ந்து விடலாம்!''



மரம் செடி இவற்றின் விதைகள் வெவ்வேறு திசைக்குச் சென்று, முளைக்கின்றன. காற்று தண்ணீர் இவற்றின் மூலமாகச் சில விதைகள் செல்கின்றன. சில விதைகள் வெடித்து வெகுதூரத்துக்கு அப்பால் போய் விழுந்து அங்கே முளைக்கின்றன. சில பழங்களை அணிலும் பறவைகளும் எடுத்துச் சென்று ஆங்காங்கே கொட்டையைப் போட்டுச் செடிகள் முளைக்க உதவி செய்கின்றன.



## குட்டிக் கதை



பாநு ஒருவருக்கும் தெரியாமல் ஒரு மறைவான இடத்தில் உட்கார்ந்து கொண்டு பிஸ்கோத்துகளைத் தின்று கொண்டிருந்தான். திடீரென்று அவன் சிநேகிதர்கள் அவனைத் தேடிக்கொண்டு வந்துவிடவே பாநு சட்டென்று பிஸ்கோத்துகளை ஒளித்து வைத்து விட்டான். சிநேகிதர்கள் இதைத் தெரிந்து கொண்டு, ''பாநு, நாம் கண் கட்டி விளையாட்டு விளையாடலாமா?'' என்று கேட்க, ''சரி'' என்று பாநுவும் ஒப்புக்கொண்டான்.

பாநுவின் கண் கட்டப்பட்டது. பையன்கள் அங்கு மிங்கும் ஓடுவது போல் பாசாங்கு செய்தார்கள். பிறகு ஒருவரையும் காண வில்லை. பாநு கண் கட்டை அவிழ்த்துப் பார்த்த போது அவர்கள் பிஸ்கோத்துகளைத் தின்று கொண்டிருந்தனர்.

* * *



கலிபோர்னியாவில், ஓப்மன் நகரில் கென்னட் போஸ்டன் என்பவரிடம் ஒரு குதிரைக்குட்டி இருந்தது. அந்தக் குட்டியின் உடலில் ஒரு சிறுவனின் முக உருவம் இயற்கையாகவே அமைந்திருந்தது.







# குழந்தைகளுக்குப் புரியும்



ராஜாஜி

"தேவலோகத்து பாஷை சமஸ்கிருதம்" என்றார் சாஸ்திரியார்.

"ஆண்டவன் பேசுவது தமிழ்தான்" என்றார்கள் சிலர்.

"பகவான் பேசும் மொழி அனைவருக்கும் பொதுவான ஹிந்தி மொழி" என்றார்கள் வடக்கத்தியார்.

சில வங்காளியர்கள் இதைக் கேட்டுச் சிரித்தார்கள்.

மராட்டி வீரர்கள் "அல்ல!" என்றார்கள்; "எங்கள் மராட்டி பாஷையே பகவான் சிவ்ஜி பாஷை" என்றார்கள்.

"ஆங்கிலம் அல்லவோ மேலுலக பாஷை" என்றார் ஆங்கிலேயப் பாதிரி.

"ஒரு நாளும் அல்ல; யாரும பேசாத லத்தீன் மொழியே மேலிடத்து பாஷை" என்றார் மற்றொரு பாதிரியார்.

"உங்களுக்கு உண்மை தெரியவில்லை. அரபி பாஷையல்லவோ ஆண்டவன் தினசரி பேசுவது. சில சமயந்தான் பிற மொழிகள் பேசுவான். குர் ஆன் எந்தப் பாஷையில் அமைந்திருக்கிறது? அதிலிருந்து உங்களுக்குத் தெரியவில்லையா?" என்று அரபி மௌல்வியார் வாதாடினார்.

இன்னும் பலர் இந்த விவாதத்தில் சேர்ந்து கொண்டு பெரிய சண்டை நடந்தது. எல்லாரும் போய் நேரில் பார்த்துவிட்டு வரலாம் என்று தீர்மானித்துச் சென்றார்கள்.

திரைக்குப் பின் பகவான் பேசினான்.

கீழே இறங்கும்போது ஒருவரோடு ஒருவர் பேசிக் கொண்டே இறங்கினார்கள்.









"பார்த்தாயா தம்பி! கடவுள் பேசினது தமிழ்!" என்றார்கள் தமிழர். "எவ்வளவு சுத்தமாக வடமொழியே கலவாமல் பேசினான் உலகையாளும் பெருமான்!" என்று சந்தோஷமாகச் சொன்னார்கள்.

"பார்த்தாயா! பகவான் பேசிய பாஷை, நம்முடைய ஹிந்தி. இந்த மூடர்களுக்கு இதிலிருந்தாவது அறிவு உண்டாகுமா!" என்று பேசிக் கொண்டார்கள் வடக்கத்தியார்கள்.

"ஆஹா! ஈசுவரன் வாயிலிருந்து வந்த மராட்டியைக் கேட்டாயா?" என்றான் ஒருவன்.

"வங்காளம் அல்லவா ஆண்டவன் பேசியது? அதுதான் தேவ பாஷை!" என்று வங்காளியர் சொன்னார்.

இவ்வாறே அராபியரும் ஆங்கிலேயரும் அமெரிக்கரும் பிரஞ்சுக்காரர்களும் இன்னும் எல்லாரும் தத்தம் மொழியே தேவனுடைய மொழி என்று பேசிக் கொண்டு குதூகலத்துடன் சென்றார்கள்.

இந்த நிகழ்ச்சியைப் பார்த்துக் கொண்டிருந்த பறவைகள் தமக்குள் பேசிக் கொண்டன!

"இந்த மனிதக் கூட்டத்தின் மதியீனத்தைப் பார்த்தீர்களா! ஆண்டவன் நம்முடைய பறவை-பாஷையல்லவோ பேசினான்?" என்றன.

"ஆண்டவனுடைய சிறகுகள் திரை வழியாகக் கொஞ்சம் தெரிந்ததே! அது எவ்வளவு அழகு!" என்றது ஒரு கிளி.

"ஈசுவரனுடைய தும்பிக்கையைப் பார்த்தாயா?" என்று கேட்டது ஒரு யானை, தன் மனைவியைப் பார்த்து.

"திரையினூடே எனக்கு அவனுடைய அழகிய தந்தங்கள்தான் தெரிந்தன!" என்றது பெண் யானை.

"ஆஹா! என்ன மௌன சுவரூபி!" என்றார் ஒரு முனிவர்.

"இறைவனுடைய இந்தக் கானத்தைக் கேட்ட பின் வேறு ஒரு சங்கீதமும் வேண்டாம்" என்றார் ஒரு சங்கீத வித்துவான்.

"பலருக்குப் பலவேறு உருவங்களாகத் தோன்றும் இந்தப் பொருள் பொருளாகாது. அது பொய்!" என்றார் நாஸ்திகர்.

"பொய்யல்ல. மாயை, நமக்கு விளங்காத ஒரு பொருள்; அனைத்தையும் கடந்த பொருள். அதைத் தமிழர் கடவுள் என்பார்கள். அதற்குத் திணையும் இல்லை, பாலுமில்லை" என்றார் ஒரு தமிழ் நாவலர், நாஸ்திகருக்கு!

"இங்கே நாம் வாதித்துக் கூச்சல் போடலாகாது. கடற்கரைக்குப் போய்ப் பேசவோம்" என்றார் நாஸ்திகர்.

"இதை ஒரு கதையாகக் குழந்தைகளுக்குச் சொல்லும்" என்றார் விநாயகர்.

"குழந்தைகளுக்குப் புரியுமா?" என்றேன்.

"பெரியவர்களுக்குத்தான் புரியாது. குழந்தைகளுக்குப் புரியும்" என்றார் கணேசர்.

"சரி" என்றேன்.



# ஊமை ராஜா

## 21. ஊமை ராஜாவுக்கு ஜே!

மறுநாள் ராஜசபை என்றுமில்லாத உற்சாகத்துடன் காணப்பட்டது. நகரத்துப் பிரமுகர்களில் பெரும்பாலோரும் கூட அங்கே கூடித் தனிமையான இடங்களில் அமர்ந்திருந்தனர். அரசரின் ஆசனத்துக்குப் பக்கத்திலிருந்த தனித்தனியான ஆசனங்களில் ராணி நளினி, ராஜகுமாரி மேகலா, விஜயன் அனைவரும் உட்கார்ந்திருந்தனர். முதல்நாள் குற்றவாளியாகக் கருதப்பட்ட ராணி மல்லிகாவும் கூட அங்கே தனிமையான ஆசனத்தில் இருந்தாள்! அவளது சூழ்ச்சியினால் கடத்தப் பெற்றிருந்த ராஜகுமாரன் இப்போது உயிருடன் வந்துவிட்டானல்லவா? ஆகவே, ராணி மல்லிகாவுக்கு இடப்பட்டிருந்த ராஜ தண்டனை நிறைவேற்றப் படவில்லை. ஆனால், அவர்களில் ஒருவர் மட்டிலும் அங்கே இல்லை. அது. இளைய ராஜகுமாரனான விமலன்தான். ஏனென்றால், சிகிச்சை பெற்றுக் கொண்டிருந்த ராஜகுமாரனை அரண்மனை வைத்தியர் ஓய்வு எடுத்துக் கொள்ளுமாறு கூறியிருந்தார். ஆகவே, அவனைத் தவிர, ராஜ சபையில் யாவரும் நிறைந்திருந்தனர்.

அரசர் கனிவான முகத்துடன் எழுந்து தமது தமக்கையாரான ராணி நளினி தேவியையும், அவளது மகனையும் சபைக்கு அறிமுகம் செய்வித்தார். பின்னர், மகேந்திரபுரத்து ராணி வந்திருக்கும் காரியங்களைப் பற்றிக் கூறிவிட்டு, இளவரசுப் பட்டம் கட்டும் விஷயமான ஆலோசனைகளைக் கூறுமாறு சபையிலுள்ளோரைக் கேட்டுக் கொண்டார்.

வழக்கம் போலவே பலதரப்பட்ட தீவிரமான வாதங்களும் எழுந்தன. இதற்கிடையே ஒரு சேவகன் அரசரின் சமீபமாக வந்து, யாரோ ஒரு புலவர் ராஜ சபைக்குள் வர அனுமதி கோரிக் கொண்டிருந்ததைக் கூறினான். அரசர் அவரை உடனே அழைத்து வருமாறு கூறி விட்டுச் சபையை நோக்கினார்.

சற்று நேரத்துக்கெல்லாம் சபைக்குள் நுழைந்த புலவரைக் கண்டதும் அரசர் பெரு மகிழ்ச்சியுடன் எழுந்து, அவருக்கு ஆசனமளித்து விட்டு உட்கார்ந்தார். ராஜகுமாரனான விஜயனும் கூப்பிய கரத்துடன்



எழுந்து நின்று புலவரை வரவேற்றான். அவர் யாரென்று நினைக்கிறீர்கள்? விஜயனைக் காப்பாற்றி அவனுக்குப் பேசும் சக்தியையும் அளித்த அதே பெரியவர்தான்!

சபையில் பட்டத்து உரிமையைப் பற்றின விவாதங்கள் தொடர்ந்து நடந்தன. ஆனால், அவ் விவாதம் அதிககேரம் நடக்க முடியாதபடி, திடீரென்று அங்கு விமலன் தோன்றினான். அவனது தலையிலும், உடலிலும் கட்டுக்கள் கட்டப்பட்டிருந்தன. அவன் பரபரப்புடன் அரசரின் சமீபமாக வந்துநின்று, "சபையோர்களே! ஏற்கனவே நான் இச்சபையில் என்ன கூறினேனோ, அதையேதான் இப்பொழுதும் கூறுகிறேன். என்னை அரசனுக்கி விட வேண்டுமென்று நீங்கள் இன்னும் கருதுவதாகத்தெரிகிறது. ஆனால், இப் பட்டத்தை ஏற்க எனக்குக் கொஞ்சமும் சம்மதமில்லை!" என்றான்.

அப்பொழுது சபையிலிருந்த அப் புலவர் திடீரென்று எழுந்து, "விஜயா! நீயும் பேச வேண்டிய தருணம் வந்து விட்டது. உன் அபிப்பிராயத்தைக் கூறலாம்!" என்றார்.

அடுத்த கணம், விஜயன் எழுந்து நின்று, "சபையோர்களே! என் தாய், தந்தை, குரு முதலானவர்களே! உங்கள் அனைவருக்கும் எனது வணக்கம்!" என்றான் கம்பீரத்துடன். அனைவரும் பெரும் வியப்புடன் விஜயனையே உன்னிப்புடன் பார்த்தனர்.

விஜயன் உரத்த குரலில் தொடர்ந்து கூறினான்: "நான் ஏற்கனவே, இந்த அரண்மனையில் இருந்தவரையில் ஊமையாகத்தான் இருந்தேன். ஓசை எப்படியிருக்கும் என்பதுவும் கூட எனக்குத் தெரியாது. ஆனால், காட்டினிடையில் அநேக கஷ்டங்களை அனுபவித்த பின்னர், இப் பெரியவராலேயே காப்பாற்றப்பட்டேன். இவராலேயே நான் பேசும் சக்தியையும், செவிகளால் கேட்கும் சக்தியையும் பெற்று விட்டேன். பரம குருவான இப் பெரியவரின் ஆணைகளுக் குட்பட்டே, நான் சில தினங்களாக மீண்டும் ஊமையாகவே இருந்து வந்தேன். இப்போது என் குருநாதரின் கட்டளையின்மீது தான் பேசத் தொடங்குகிறேன்.

"இப்போது இந் நாட்டின் பட்டத்து உரிமையைப் பற்றி, உங்களிடம் தீர்ப்பு ஒப்படைக்கப்பட்டிருக்கிறது. என் அபிப்பிராயங்களைக் கோரினால், நான் ஒன்றுதான் கூறுவேன். அதாவது, எனது தம்பியான விமலன் அரசாள வேண்டுமென்பது, என் சிற்றன்னையின் விருப்பம். இவ் வாசையைப் பூர்த்தி செய்ய வேண்டியது என்னுடைய கடமையென நான் உணருகிறேன். தவிரவும் மக்கள் எதை விரும்புகின்றனரோ அதையே நிறைவேற்றுவதுதான் அரசரின் கடமை. எனவே, இவ்வரசுரிமையை நான் மனப்பூர்வமாக என் தம்பி விமலனுக்கு அளிக்கவே விரும்புகிறேன்."

இவ்வாறு ராஜகுமாரனை விஜயன் சரளமாகப் பேசவும், அனைவரும், அவன் மீது வைத்த கண்ணை எடுக்க மறந்து போய்த் திகைத்து நின்று பார்த்தனர்.

விஜயனின் கோரிக்கையைக் கேட்ட விமலன் என்ன செய்தான்? அப்பொழுதே பெரு மகிழ்ச்சி கொண்டவனாகி, ஓடிவந்து அவனைத் தழுவிக் கொண்டான். பின்னர் விமலன் "சபையோர்களே! இவ்வளவு காலங்களாக என் தமையனார் 'ஊமை' யென்ற ஒரே காரணத்தைக் கொண்டு, உங்களில் வீணான சர்ச்சைகளெல்லாம் நிகழ்ந்தன. கடவுள் அருளாலும், இப்பெரியவரின் நன்முயற்சியாலும், இப்போது நம் ராஜகுமாரரின் குரலை முதன் முதலாகக் கேட்டோம். இனி, 'யார் பட்டத்துக்கு வரவேண்டும்' என்ற விஷயத்தை முடிவு செய்ய உங்களுக்கு அவகாசமே தேவையில்லை. நீங்கள் இப்போது என்ன கூறுகிறீர்கள்?" என்றான். அவனது கண்களில் ஆனந்தபாஷ்பம் பொங்கியது.

சபையில் மீண்டும் ஆரவாரமான குரல்களுடன் "ராஜகுமாரன் விஜயனே பட்டத்துக்கு உரியவன்" என்ற குரல்கள் எழுந்தன. விமலன் சட்டென்று ராணி மல்லிகாவின் புறமாகத் திரும்பி, "அம்மா! மக்களின் குரல்கள் தங்களது செவிகளுக்குக் கேட்கின்றனவா?" என்றான். அடுத்த கணமே, மல்லிகா தனது வெட்கம் நிறைந்த முகத்தைக் கீழே துவளவிட்டுக் கொண்டாள். அரசரோ, மகிழ்ச்சியின் மிகுதியினால், அது ராஜ சபை யென்பதையும் மறந்தவாறு எழுந்து சென்று தம் இரு குமாரர்களையும் தழுவிக் கொண்டார்.

விமலன் மீண்டும் சபையை நோக்கியவாறு, "இளவரசர் விஜயேந்திர பூபதிக்கு ஜே!" என்று கோஷமிடும்படி கூறினான். அக் கோஷங்களால் ராஜசபை மண்டபமே எதிரொலி செய்தது! அதன் முடிவாக, ராஜ சபையின் ஓரத்திலிருந்த நகரத்துப் பையன்களெல்லோரும், "ஊமை ராஜாவுக்கு ஜே!" என்று கோஷமிட்டனர்.



ராஜ சபையின் சம்பவங்களெல்லாம் முடிந்த பின்னர், ராணி நளினிதேவி விஜயனைத் தனிமையாகச் சந்தித்தாள். அப்பொழுது நளினியின் முகத்தில் அலாதியான மகிழ்ச்சியும், வெட்கமும் நிறைந்திருந்தன. அவள் விஜயனை அன்புடன் தழுவியவாறு, "குழந்தாய்! நான் உன்னை ஒரே ஒரு விஷயம் கேட்பேன். நீ மறைக்காமல் பதில் சொல்லுவாயா?" என்றாள்.

"அத்தை! நீங்கள் எதைக் கேட்டாலும் நான் பதில் சொல்ல வேண்டியவன் தானே?" என்றான் விஜயன்.

"நாம் காட்டிலிருந்து இரதத்தில் வரும் போது, நாங்கள் இருவரும் பேசிக் கொண்டதெல்லாம் உனக்குத் தெரியுமா?"

விஜயன் இலேசாக நகைத்தவாறு, "ஆமாம், அத்தை! அதைப் பற்றி இப்பொழுது என்ன?" என்றான்.

"இப்பொழுது என்னவா? நீ என்னைப் பற்றி எவ்வளவு கெடுதலாக எண்ணிக் கொண்டிருப்பாய்?"

"அதனால் என்ன, அத்தை? உலகத்திலுள்ள ஒவ்வொரு தாயும் தனது மகள் நல்ல புருஷனுக்கு வாழ்க்கைப் பட வேண்டுமென்று எண்ணுவது சகஜம் தானே, அத்தை? நீங்களும் மேகலாவின் நன்மையை உத்தேசித்துத்தான் இந்த ஊமையனுக்கு எப்படிக் கலியாணம் செய்து கொடுப்பது என்று எண்ணினீர்கள்!"

ராணி சட்டென்று தலை குனிந்து கொண்டாள். பின்னர், "இவ்வளவையும் கேட்டுக் கொண்டு உன்னால் எப்படிப் பேசாமல் இருக்க முடிந்தது?" என்றாள் மிகுந்த வியப்புடன்.

விஜயன் கம்பீரத்துடன் "என் குருநாதரின் கட்டளைதான்!" என்றான்.

ராணி நாக் குளறியபடியே, "இப்பொழுது நீ அதை மனத்தில் வைத்துக் கொள்ள மாட்டாயே?" என்றாள். அவள் குரல் பரிதாபமாக இருந்தது.

"அத்தை! நீங்கள் பெரும் உபகாரமே தான் செய்திருக்கிறீர்கள். நீங்கள் அவ்வாறெல்லாம் பேசாவிட்டால், ராஜகுமாரி மேகலாவின் எண்ணங்களை இந்த ஊமையன் எவ்வாறு அறிய முடியும்?" இவ்வாறு கூறிவிட்டு, விஜயன் 'கல கல' வென்று நகைத்தான். அவனது முகத்தைத் தம் கைகளால் பற்றிச் சொடுக்கிய வண்ணம் மறைந்தாள் ராணி நளினி!

இத்துடன் உபாத்தியாயர் கதையை நிறுத்தி விட்டு, "என்ன, பையன்களா! கதை எப்படி?" என்றார்.

"ஸார்! பேஷான கதை ஸார்! ஆனால், அப்புறம் என்ன நடந்தது என்கிறதைச் சொல்லாமல் விட்டு விட்டீர்களே!" என்றான் சட்டாம் பிள்ளை சங்கரன்.

"அப்புறம் என்ன நடந்தது? விக்கிராந்த பூபதி தமது மூத்த குமாரனை விஜயனுக்கே பட்டத்தைச் சூட்டினார். ராணி நளினியும் தன் பெண்ணான மேகலாவை அந்த 'ஊமை ராஜா'வுக்கே கலியாணம் செய்து கொடுத்துத் தன் நாட்டையும் சேர்த்து ஆண்டு வருமாறு கூறினாள்!"

"விமலன், அவனது தாயான ராணி மல்லிகா இருவரும் என்ன செய்தார்கள்?" என்றான் கோடியிலிருந்த மாணிக்கம்.

"போடா மக்கு! விமலன்தான் முன்னமேயே அண்ணனுக்கு முடிசூட்ட வேண்டுமென்று பிரயாசைப் பட்டானே! ராணி மல்லிகா தன்னுடைய துவேஷபுத்திகளையெல்லாம் விட்டு நல்ல மனத்தையடைந்தாள்! அதிருக்கட்டும், இந்தக் கதையினால் நீங்களெல்லாம் என்ன தெரிந்து கொண்டீர்கள்?" என்றார்.

சட்டாம்பிள்ளை சங்கரன் கூறினான்: "விக்கிராந்த ராஜாவைப் போல் ஒவ்வொருவரும் நியாயத்துடன் நடக்க வேண்டும். அப்புறம், ராணி மல்லிகாவைப் போல் ஒருவரும் துவேஷபுத்திகள் கொள்ளக்கூடாது. விஜயனும், விமலனும் போல ஒவ்வொருவரும் சகோதரர்களிடம் அன்புடன் நடந்து கொள்ள வேண்டும்!"

ஆசிரியர், "சரி, இவன் சொன்னதெல்லாம் சரிதான். இன்னொரு முக்கியமான விஷயம் இருக்கிறது. அதை யாராலாவது சொல்ல முடியுமா?" என்றார்.

பையன்களெல்லோரும் சிறிதும் சத்தம் செய்யாமல், தீவிரமாக யோசனை செய்தபடியே உட்கார்ந்திருந்தனர். திடீரென்று போக்கிரி பாலு எழுந்திருந்து, "எனக்குத் தெரியும், ஸார்!" என்றான்.

"என்ன?" என்றார் ஆசிரியர்.

"உபாத்தியாயருக்குக் கீழ்ப்படிந்து, அவர் சொற்படி நடக்க வேண்டும்!" என்றான் பாலு சிரித்தபடியே.

"சபாஷ்!" என்றார் ஆசிரியர். பின்னர், பையன்களைப் பார்த்தவாறு, "விஜயனைப் பேசும்படி செய்த அந்தப் பெரியவர், தாம் உத்தரவு கொடுக்கும் வரையில் அவனைப் பேசவே கூடாது என்று சொல்லியிருந்தாரல்லவா? நடுவில் எவ்வளவோ சந்தர்ப்பங்கள் நேரிட்டும், அவன் தன் ஆசிரியரின் வார்த்தையை மீறாமல், மகா உறுதியுடன் இருந்தானல்லவா? அப்படிப்பட்ட தன்மையும், மனஉறுதியும் தான் உங்களுக்கும் வேண்டும்! அடுத்த வருஷம் நீங்கள் மேல் வகுப்புக்குப் போய் விடுவீர்கள். ஆகவே, உபாத்தியாயருக்குக் கீழ்ப்படிந்து நடக்க வேண்டுமென்ற உறுதியை நீங்கள் இப்போதிருந்தே மனத்தில் வைத்துக் கொள்ளுவீர்களா?" என்றார்.

பையன்கள் சந்தோஷமாகத் தலையை யாட்டி, "அப்படியே நடந்து கொள்ளுகிறோம், ஸார்!" என்றனர். **(முற்றும்)**

# ரகுபதி  ராகவ

[அகமதாபாத் நவஜீவன் காரியாலயத்தினர் பிரசுரம் செய்திருக்கும் 'சத்தியமே தெய்வம்' என்னும் காந்தி வசன மஞ்சரியிலிருந்து ராஜாஜி எடுத்து எழுதியது]

## 62

ராம நாமத்தைச் சரியாக ஜபம் செய்தும் சுத்த வாழ்க்கை நடத்தியும் வருகிறவர்கள் ஏன் சிலசமயம் நோய்க்கு ஆளாகிறார்கள் என்பது சரியான கேள்வியே. யாருமே பூரண சுத்தமடையவில்லை. அடையவும் முடியாது. அசாத்தியம். இயற்கை அதற்கு இடம் தராது. முயற்சிதான் செய்ய முடியும். அதுவே கடமை. வரம்பை அறிந்து வாழ்க்கை நடத்த வேண்டும். வரம்பு மீறினால் நோய் வந்து தாக்கும். வரம்பு மீறிய உணவும் வரம்பு மீறிய மற்றவையும் நோய்க்குக் காரணம். உணவிலும் மற்ற விஷயங்களிலும் அவனவன் வரம்பை அவனவனே உணர்ந்து வாழ்க்கை நடத்த வேண்டும். இப்படி வாழ்பவன் நீண்ட ஆயுள் பெற்று வாழ்வான். *[ஹரிஜன் 19—5—46]*

இயற்கை முறையையும் ஆயுர்வேத முறைகளையும் நான் மிகவும் பாராட்டுகிறேன். ஆயினும் மேல்நாட்டு வைத்தியம் அடைந்திருக்கும் முன்னேற்றத்தை நான் ஒப்புக் கொள்கிறேன். மேல்நாட்டு வைத்தியம் உன்னத நிலையடைந்திருப்பது உண்மையாயினும் அந்த உன்னத நிலை அடைவதற்காகக் கையாண்டு வரும் முறைகளை நான் கண்டிக்கிறேன். உயிரும் உணர்வும் கொண்ட பிராணிகளை இம்சை செய்தும் இன்னும் பல அக்கிரமங்களைச் செய்தும் மனிதனுடைய சரீர நலத்தையே மேலாகக் கருதி மனித உடலைத் தாக்கும் நோய்களுக்கு மருந்து தேடி வருகிறார்கள். பாப காரியங்கள் செய்து மனிதனுடைய உடலைக் காப்பாற்றுவது என்ன தருமம்? இதனாலேதான் இயற்கை முறையில் எவ்வளவு குறைகளிருந்த போதிலும், இயற்கை முறை வைத்தியர்களில் அநேகம் பேர் பொய்யர்களாயினும், முயற்சியும் சாமர்த்தியமுமின்றித் தங்கள் தொழிலை நடத்தி வருபவர்களாயினும், இயற்கை வைத்திய முறையை நான் பாராட்டி வருகிறேன். மற்ற வைத்திய முறைகளில் அந்த அந்த வைத்தியர்களின் உதவியில்லாமல் முடியாது. இயற்கை முறையில் ஒருவன் வைத்தியனைத் தேடாமல் தனக்குத்தானே வைத்தியனாக அமையலாம். இதுவே ஒரு பெரிய லாபம். *[ஹரிஜன். 11-8-46]*

இயற்கையிலுள்ள பல வேகங்களில் ஆன்ம சக்தியும் ஒரு வேகம். ஆன்ம சக்தியை மறந்து விடுதல் பெரும் தவறாகும். நம்முடைய முன்னோர்கள் பலர் அதைக் கொண்டே தங்களுடைய வியாதிகளைத் தீர்த்துக் கொண்டிருக்கிறார்கள். உடலுக்கு வரும் நோய்களில் பலவற்றை வெற்றிகரமாகவே ஆன்ம சக்தியைக் கொண்டு சொஸ்தப்படுத்திக் கொள்ள முடியும். பூத உடலில் ஆன்ம சக்தியும் கலந்தேயிருக்கிறது. ஆன்ம சக்தி சிலருக்குத்தான் உண்டு, சிலர் தான் கையாளலாம் என்கிற ஆட்சேபணை சரியல்ல. மேல் நாட்டு மருந்துகளும் கூட எல்லாருக்கும் கிடைப்பது அரிது. பலர் குளிப்பதில்லை என்பதற்காக நாம் குளிக்காமல் இருப்போமா? பலர் உடலைச் சுத்தமாக வைத்துக் கொள்ளாமலிருந்தாலும் நாம் சிலராவது குளித்துச் சுத்தமாக வாழ்க்கை நடத்தினால்தான் பிறருக்குப் பணி செய்ய முடியும். சமூகத்துக்குப் பயன்பட முடியும். தேகத்தைச் சுத்தமாக வைத்துக் கொள்வது போலவே உள்ளத்தையும் சுத்தமாக வைத்துக் கொண்டு ஆன்ம சக்தி அடைய வேண்டும். சமூகத்தில் பலருக்கு இது முடியாது என்று நாமும் அந்த முயற்சி செய்யாமல் விட்டு விடக்கூடாது.

எல்லா விதத்திலும், அதாவது உடலும் உள்ளமும் பரிசுத்தமாக நோய் இன்றியிருப்பதே தர்ம மார்க்கமாகும். நாம் அந்த மார்க்கத்தில் நின்று மற்றவர்களுக்கும் வழிகாட்ட வேண்டும். வழி காட்டுவதோடு ஆரோக்கிய நிலையில் உடலையும் உள்ளத்தையும் வைத்துக் கொண்டு மற்றவர்களுக்காக நன்றாகப் பாடும் படலாம்.

*[ஹரிஜன் 1—9—46]*

# முன்கதைச் சுருக்கம்

[கணபதிபாளையம் ஒரு சங்கீத வித்வானோ, அரசியல் வாதியோ பிறந்ததனால் பிரசித்தி யடைந்து விடவில்லை. ஒரு சிறு ஹோட்டல் கொட்டகையில் சின்னத்துரை என்ற இளைஞனின் இணையற்ற கைத்திறமையினால் தயாரான மசால் வடையின் மணம்தான் கணபதி பாளையத்துக்குப் பெரும் புகழைத் தேடித் தந்தது.

அன்று ஒரு பெரியவர் ஒரு அழகிய யுவதியும் வாலிபனும் பின் தொடரச் சின்னத்துரையின் ஹோட்டலுக்கு வந்தார். அந்தப் பெரியவரைக் கண்டதும் சின்னத்துரைக்கு வாழ்க்கையில் நிகழ்ந்த பழைய சம்பவங்களெல்லாம் கண்முன் வந்து நின்றன.

சின்னத்துரை ரயிலில் உத்தியோகம் பெறவேண்டும் என்று அவன் அன்னை ஆசைப்பட்டாள். ஆனால் வடை சுற்றிக் கொண்டிருந்த அவனுக்குப் படிப்பில் கவனம் செல்லவில்லை. அன்னை அடிக்கடி இடித்துரைத்ததின் பயனாக, பிறகு மெதுவாக ரயிலில் உத்தியோகம் பெற இன்ஸ்பெக்டர் மார்க்கபந்துவின் இல்லத்துக்குச் செல்லுகிறான். அங்கே ஏற்கனவே பானு என்னும் அழகிய நங்கை சமையல் வேலையிலிருக்கிறாள். பானு சின்னத்துரையின் உள்ளத்தைக் கவர்ந்தவள். ரயிலில் உத்தியோகம் தேடிப்போனவனுக்கு ரயில்வே உத்தியோகஸ்தர் மார்க்கபந்துவின் வீட்டில் சமையல் பணிபுரியும் பாக்கியம் கிட்டுகிறது. சின்னத்துரை வருவதனால் பானுவுக்கு வேலை போய் விடுகிறது. அவளுக்கு வேலை போனதைக் கண்டு அவன் மனம் நெகிழ்கிறது.

ஆனால் அவன் உள்ளம் சீக்கிரத்திலேயே பானுவின் மீது கோபத்தையும் ஆத்திரத்தையும் அடைந்து விடுகிறது. காரணம் ஒரு மொட்டைக் கடிதம்தான்! அந்தக் கடிதத்தின் துன்ன மா. ப. என்னும் எழுத்துக்களைக் கண்டு அவனுக்கு அந்த வீட்டு மார்க்கபந்துவின் மீது சந்தேகம் ஏற்படுகிறது. வயதானவர் தனக்குப் போட்டியாகப் பானுவைக் காதலிப்பதும், தன் காதலி பானுவை ஆற்றுப் பாழ் மண்டபத்தில் அவர் சந்திக்கப்போகிறார் என்பதும் சின்னத் துரையைத் தூக்கிவாரிப் போட்டன. அவனுக்கு உலகமே அஸ்தமித்து விட்டதைப் போன்று தோன்றுகிறது.

மேலும் பானுவின் பேச்சும் நடவடிக்கைகளும் அவன் சந்தேகத்தை வலுப்படுத்துகின்றன. கோபத்தில் சின்னத்துரை மார்க்கபந்துவின் மனைவி சுந்தரியம்மாளிடமே அந்த மொட்டைக் கடிதத்தைக் காட்டி விடுகிறான். அதோடு அவன் ஆத்திரம் நின்று விடவில்லை.

பாழ் மண்டபத்தில் மார்க்கபந்துவைச் சந்தித்து அவரை நெட்டித் தள்ளச் செல்கிறான் சின்னத்துரை. புயலும் மழையும் வீசுகின்றன. அவன் தலையில் குண்டாந்தடி யொன்று விழுந்துவிடுகிறது. பொறி கலங்கி விழுகிறான். கண் விழித்தபோது, ஆஸ்பத்திரியில் படுத்திருப்பதை அவன் உணர்கிறான். மனக்குழப்பத்தில் "பானு! பானு!" என்று பிதற்றுகிறான். சின்னத்துரையின் குழப்பத்தை நீக்க, பானு யாருடனோ ஓடிப்போய் விட்டதாகத் தெரிவிக்கிறாள், அவன் தாயார் கமலம்மாள். சின்னத்துரையின் மனம் பெரும் சஞ்சலத்தில் ஆழ்ந்து விடுகிறது.

ஆஸ்பத்திரியிலிருந்து நோய் குணமாகி வந்ததும் அவன் மசால்வடை வியாபாரம் நடத்துகிறான். அவனுக்குத் தொழிலில் ஏகக் கிராக்கி. அன்று தேர்தல் கூட்டத்தில் பரிதிமால் என்னும் இளைஞனைச் சந்திக்கிறான். அவன் மூக்கும் விழியும் அவனை எங்கேயோ சந்தித்திருப்பதாக நினைவூட்டுகின்றன.

ரயிலில் வீடு திரும்பும்பொழுது, அன்றைக்குப் பரிதிமாலின் பேச்சைப் பற்றியும், அவனைப் பற்றியும் ரயிலிலுள்ளவர்கள் செய்யும் விவாதம் சின்னத் துரையின் கவனத்தை வெகுவாகக் கவர்கிறது.]

# பானுவின் காதலன்

## 10. பொறியில் விழுந்த எலி!

ரயில் கடகடவென்று தனது கடமையை நிறைவேற்ற வெகு வேகமாகச் சென்று கொண்டிருந்தது. ரயிலில் அமர்ந்திருந்தவர்கள் அன்றையக் கூட்டத்தைப் பற்றியும், பரிதிமாலைப் பற்றியும் தொடர்ந்து விவாதம் நடத்திக் கொண்டிருந்தனர்.

"இங்கே பூந்துறையில் கூடத் தகப்பனார் இன்ஸ்பெக்டராக இருந்தாரே? அவர் நேர் விரோதம். அந்த நாட்களில் பரிதிமாலைக் காவலிலே பிடித்து விட வேண்டும் என்று போலீசுக்கே உளவு கொடுத்திருக்கிறாரே?..."

"என்னது? உண்மையா, தம்பி? சிவப்பாக உயரமாக இருப்பாரே. அவரா?...அதுதான் ஜாடை கூட அப்படியே இருக்கிறது...?"

சின்னத்துரைக்குத் தன் நெஞ்சை வந்து யாரோ திடீரென்று இறுகப் பிடித்து விட்டாற்போல் இருந்தது.

'' அவங்க வீட்டிலே ஒரு சமையற்காரப் பெண் இருந்தாள். இவர் விரும்பினாரோ, இல்லை, அப்பனாகத்தான் மணம் முடித்து வைத்தாரோ, அதிலிருந்து பரிதிமால் இறங்கிப் போனார்...''

'' அடேயப்பா! அவ்வளவு கெட்டிக்காரப் பெண்ணா?''

'' பின்னே? இள வயசுதானே?..'' என்று கிழவர் சிரித்துக் கொண்டார்.

இளைஞன் கடைக்கண்ணால் அவரைப் பார்த்துக் கொண்டு தொடர்ந்தான்.

'' 'அரசியலையே விட்டு விலகி விட்டேன். ஆசிரியத் தொழில் செய்கிறேன்' என்று கூடப் பரிதிமால் தீர்மானித்து விட்டாராம். கட்சியே கலகலத்து விடும் போல் இருந்தது...''

'' நல்ல வேளையாக அங்கயற்கண்ணி சரியான சமயத்தில் வந்து அவரைக் கட்சியிலிருந்து விலகாமல் இருக்கும்படி செய்தாளோ, பிழைத்தாரோ!''

'' ஆமாம்! அந்த அம்மாளும் சாமானியமானவர்களில்லை. அவங்கதான் பேசினாங்க கேட்டீங்களே? 'பளிச் பளிச்' என்று எப்படிக் கருத்துக்களைக் காட்டுகிறார்கள்? தேர்தலில் இவ்வளவு பெருவாரியான வெற்றி கிடைக்கலாம் என்று நிர்ணயிக்க வேண்டுமானால், முக்கியமாக அவளுடைய உழைப்பைப் பொறுத்தே சொல்லலாம்..''

'' தேர்தலில் அவள் நிற்கவில்லையா?''

'' இத் தொகுதிக்குப் பரிதிமால் இரும்பா விட்டால் அவளைத்தான் நிற்க வைப்பதாக




இருந்தது. இவர்தான் வந்துவிட்டாரே? இதுவே பெரிய வெற்றியல்லவா? அவள் நிற்கவில்லை. இன்றைக்குப் பார்த்தால் கண்டிப்பாக இந்தத் தொகுதியில் பரிதிமாலுக்குத்தான் வெற்றி என்று சொல்லத் தோன்றுகிறது.''

''அப்படி நினைக்காதே தம்பி, எதிர்க் கட்சி பலம் இங்கே சொல்ல முடியாது. ஆனால்.....'' என்று கிழவர் மெதுவாக இழுத்தார்.

'' ஆனால் என்ன?'' என்றான் இளைஞன் படபடப்புடன்.

''அங்கயற்கண்ணியைப் பொறுத்த மட்டில் வெற்றியாக இருக்கலாம். பரிதிமாலின் சொந்த வாழ்க்கையைப் பொறுத்து வெற்றி கூறலாம். இந்த மாதிரி கொள்கை, இலட்சியம், அதற்காகவே வாழ்க்கை என்று நிர்ணயித்துக் கொண்டவருக்கு அதே மாதிரியான பெண் மனைவியாக இருந்தால்தானே இணைப்பு இருக்கும்? பிரிவு சாத்தியமில்லை....''



இந்தியாவிலுள்ள விளம்பர ஏஜென்ஸிகள் சங்கத்தின் வருஷாந்திரக் கூட்டம் சென்னையில் சமீபத்தில் நடைபெற்றது. அக்கூட்டத்துக்குப் பம்பாய், கல்கத்தா முதலிய இடங்களிலிருந்து பலர் விஜயம் செய்திருந்தனர். சங்கத் தலைவர் ஸ்ரீ எஸ்.கே. போஸ், காரியதரிசி ஸ்ரீமதி சட்டர்ஜி, லின்டாஸ் ஆஷ்டன் தம்பதிகள், லின்டாஸ் ஸ்ரீ ஆர். வி. கன்னா, ஆல்பா அட்வர்டைஸிங் ஸ்ரீ மிஸ்ரா முதலியவர்களை, 'கீமே'ரைச் சேர்ந்த ஸ்ரீ பி. எஸ். ஜி. ராவ், கிரைடீரியன் ஸ்ரீ லக்ஷ்மி நாராயணன், லின்டாஸ் ஸ்ரீ வேணுகோபால் முதலியவர்கள் சென்னை விமான நிலையத்தில் வழி அனுப்பினர்.

---

"முற்றிலும் உண்மை, தாத்தா!" என்று இளைஞன் ஆமோதித்தபோது வண்டி பூந்துறையில் நின்றிருந்தது.

சின்னத்துரைக்கு அதுவரையில் புரியாமல் இருந்த மர்மங்களெல்லாம் அப்பொழுது விடுபட்டன.

மா....ப....பானுவின் காதலன்.

மார்க்கபந்து இல்லை!

அப்போதைய அவனுடைய குழப்பத்திலே, அவன் எண்ணம் இவ்வளவு தூரம் போகவில்லைதான். மார்க்கபந்து திருட்டுப் பயல், போலீஸ் என்று சொன்ன போதுகூட அவன் கொள்ளை, திருட்டு நடத்தும் 'சோமாறி'கள் என்றுதான் எண்ணினனே ஒழிய, பொதுவுடைமை இயக்கக்காரர்களை நோக்கி அவன் எண்ணங்கள் திரும்பவில்லை.

ஒருபுறம் அவனுக்கு விந்தையாக இருந்தாலும் வேதனையும் அவன் நெஞ்சை வாட்டியது.

பானு இவனோடு உண்மையில் சந்தோஷமாக இருப்பாளோ? இல்லை, சூழ்ச்சி செய்து, இவனைத் திருப்புவதற்காக மார்க்கபந்து பலவந்தமாக அவனை மணம் முடித்து வைத்திருப்பாரோ?

எப்படி இருந்தாலும் இப்போது...... அங்கயற்கண்ணி.....! இவள் படிப்பெங்கே, பேச்செங்கே, அழகெங்கே?

பானு அழகு. புத்திசாலி. அவனுக்கு ஜோடி. அவனுக்குப் பேராசை கிடையாது. இருப்பதைக் கொண்டு இன்பமடையும் இயல்பு உண்டு. கூரைக் குடிசை, ஒற்றை அறை, அவனும் அவளும் பேசும் இன்பக் கதைகளை மௌனமாகக் கேட்டுக் கொண்டு 'முணுக் முணுக்' என்று எரியும் சிறிய விளக்கு—இவை போதும் அவர்கள் இன்ப வாழ்க்கைக்கு.

அவன் இதை எத்தனை நாட்கள் கற்பனை செய்திருக்கிறான்?

இரண்டாம் வகுப்பில் 'சேராத இடந்தனிலே சேர வேண்டாம்' என்று படித்திருந்தது அவனுக்கு நினைவில் வந்தது.

'பானு பேராசையுடன்தான் தன்னை நிராகரித்தாள். கஷ்டப்படட்டும், நன்றாகக் கஷ்டப்படட்டும்!' என்று எண்ணியது சின்னத்துரையின் உள்ளம்.

உள்ளம் கொப்புளித்த வெம்மை அவன் நடையை விரைவாக்கியது. பூந்துறையில் வண்டியை விட்டிறங்கி முன்போல் வெகுதூரம் தெருவுக்குள் போக வேண்டியதில்லை அவன் வீட்டுக்கு. அந்தப் பழைய வீட்டின்மீது வாங்கியிருந்த சுட்டிக் கடனும், சில்லறைக் கடன்களும் கடைசியில் வீட்டை விழுங்கி விட்டன. இப்போது ரயில் வண்டி நிலையத்திலிருந்து இரண்டு பர்லாங் தூரத்திலேயே, பெரிய சாலையிலிருந்து பிரியும் சந்தில் அவன் தாயுடன் குடியிருந்தான். அந்த வீட்டில் அவனைப் போல் வருவாயும் அந்தஸ்தும் உள்ளவர்களே அவனுடன் வாசம் செய்தனர்.

அந்தச் சந்தின் இருபுறங்களிலும் கழிவு நீர்க் கங்கை ஓடிக்கொண்டிருக்கும். அது சந்துப் பக்கம் வருபவர்கள் எல்லோரையும் குசலம் விசாரித்து, மூக்கைப் பிடித்துக் கொள்ளச்செய்யும். ஊராண்மைக் கழகத்தாரின் கருணைக் கண்களுக்கு அந்தச் சந்து பாத்திரமாகவில்லை. எனவே அந்தச் சந்து மின்னொளி பெறும் பாக்கியத்தை அடையவில்லை. மூலைத் தெருவிளக்கு மட்டும் மனம் இரங்கி, தன் ஒளிக்கதிரை எட்டியமட்டும் போகட்டும் என்று சந்துடன் உறவாட விட்டிருக்கும். இன்று அவ்விளக்கும் உயிரற்று ஒளி

# நான் மிகவும் கண்டிப்பான பேர்வழியாக்கும்

எனக்கு, சிறந்த பொருள்கள்தான் ஒத்துக்கொள்ளும். ஆமாம், மட்டமான சரக்கை என்கிட்டே யாராவது தள்ளப்பார்த்தால் அந்தப் பாச்சா என்கிட்டே பலிக்காது. எங்கம்மா இருக்காளே, சாமர்த்தியக்காரி. அவள் எனக்கு கிளாக்ஸோவைதான் ஆகாரமாய்க் கொடுக்கிறள். கிளாக்ஸோ பரிசுத்தமான புஷ்டி தரும் பால் ஆகாரம். அது மட்டுமா? அதில் எலும்பு வளர்ச்சிக்கு வேண்டிய விடமின்-டியும், ரத்தப் புஷ்டிக்கு அவசியமான இரும்பு சத்தும் சேர்ந்திருக்கின்றன. எனக்கு பகலெல்லாம் ஒரே கொண்டாட்டம். இரவில் அயர்ந்த தூக்கம். என் உடம்போ — பேபி ஷாண்டோ! என் அம்மாவுக்கு வேறு என்ன பரிசுவேண்டும்!

நான் சிபாரிசு
செய்வது க்ளாக்ஸோ

**Glaxo**

குழந்தைகளுக்கு
நிகரற்ற பால் உணவு




க்ளாக்ஸோ லாபரட்டரீஸ் (இந்தியா) பிரைவேட் லிட்.
பம்பாய் . கல்கத்தா . மதராஸ் . புதுடெல்லி



டிஸம்பர் 29, 30, 31-ந் தேதிகளில் கல்கத்தா பாரதி தமிழ்ச் சங்கத்தார், தேசிய உயர்நிலைப் பள்ளியில் பாரதி ஜயந்தி விழாவைக் கோலாகலமாகக் கொண்டாடினார்கள்.

முதல் நாள் விழா ஸ்ரீ டி. எஸ். சீநாபதி அவர்கள் வரவேற்புரையுடன் தொடங்கியது. சங்கத் தலைவர் ஸ்ரீ சுப்பிரமணியம் அவர்கள் தலைமை தாங்கினார். கல்கத்தா ஷெரீப் ஸ்ரீ எஸ். வி. ராய் அவர்கள் துவக்க உரை நிகழ்த்தினார்.

கல்கத்தா சர்வகலாசாலை கலைப் பகுதியின் தலைவர் டாக்டர் நிஹார் ரஞ்சன் ராய் அவர்களும், திரு கே. ராஜகோபாலாச்சாரியார் அவர்களும் தமிழ் இலக்கியம் குறித்து அருமையான விரிவுரை நிகழ்த்தினார்கள். இரண்டாம் நாள் விழாவிலும் அவர்கள் இருவரும் சொற்பொழிவாற்றினர். ராஜி குழுவினர்களின் நாட்டிய நிகழ்ச்சியுடனும் திருமதி ராஜேஸ்வரியின் இன்னிசையுடனும் இரண்டாம் நாள் விழா முடிவுற்றது.

மூன்றாம் நாள் விழாவில் ஹிந்தி - தமிழ் மொழிகளின் மறுமலர்ச்சி இயக்கம் குறித்தும் பல்வேறு அறிஞர்கள் பேசினர். கலை நிகழ்ச்சியில் திருமதி லக்ஷ்மி பத்மநாபன் அவர்களும் திரு என். எஸ். வைத்தியநாதன் அவர்களும் கலந்து கொண்டனர். திரு ஆ. சு. கிருஷ்ணன் தயாரித்த பாரதியின் 'குயில் பாட்டு' நாடகம் கல்கத்தா இளைஞர்களால் நடிக்கப்பட்டது.

வழக்கம்போல் விழாப் போட்டிகளில் கலந்து கொண்ட மாணவர்களுக்கும், மற்றும் கலைப் பகுதிகளில் பங்கெடுத்துக் கொண்டவர்களுக்கும் பரிசுகள் வழங்கப்பட்டன.

---

யற்றுப் போயிருந்தது. எனவே, கொலையாளியின் வஞ்சக உள்ளத்தைப் போல அந்தச் சந்து தோற்றமளித்தது. சந்தில் வழக்கமான கலகலப்பு இருக்கவில்லை.

சின்னுவுக்கு அங்கே வந்த பிறகுதான் நினைவுக்கு வந்தது. அப்போது பெரிய கோயிலில் உற்சவம் நடந்து கொண்டிருந்தது. சுவாமி இரவில் வீதிவலம் வருவார். எனவே அந்த வீட்டில் குடியிருந்தவர்கள் அனைவரும், தபால் ரன்னர் ரங்கசாமி, அவன் மனைவி, குழந்தைகள், கிட்டு மாமா, அவர் மனைவி, அவனுடைய தாய் எல்லோருமே இரவு கோயிலுக்குப் போவதாகவும், வீட்டைப் பூட்டிக் கொண்டு போவதாகவும் சொல்லி அவனிடம் வீட்டுக் கதவின் சாவியை ஒப்படைத்திருந்தார்கள் மாலையிலேயே. அமுக்கினால் பூட்டிக்கொள்ளும் பூட்டு அது.

மூக்கைப் பிடித்துக் கொண்டு விருவிரென்று வீட்டுப் படியேற வந்த சின்னத்துரை, வாசல் கங்கையாற்றிலே காலை வைக்கப் போய் விட்டவன் போல் திடுக்கிட்டுப் பின் வாங்கினான்.

வாசற்படி, வராந்தா, திண்ணை எல்லாமாக விளங்கிய அந்த மூன்றடி சதுர நடையில் ஒரு பெண் உருவம் உட்கார்ந்திருந்தது தெரியவந்தது. அவனைக் கண்டதும் சட்டென்று எழுந்து நின்றாள் அந்தப் பெண். மூச்சு விட்டதும் வளையல் குலுங்கியதும் சின்னுவின் உணர்வை நெருடின.

''யாரது?...'' என்றான் குரல் நடுங்க.

''நான்தான், கதவைக் கொஞ்சம் திறவுங்கள், வீட்டினுள்ளே வந்த பிறகு சொல்கிறேன்...''

சின்னு முகத்தைப் பார்க்கவில்லை.

கறுப்புச்சேலை, உருவம், குரல் எல்லாம் சந்தேகத்துக்குள் ஆழ்த்தின.

'அவள் நினைப்பாகவே வருவதால் பிரமையோ? பொய்யோ?' என்று குழம்பியவனை, ''நான்தான் என்றால் யார்?'' என்று அதட்டலாகக் கேட்க வாயெடுத்தவனுக்கு வாயையே திறக்க முடியாதபடி திடீர் ஆச்சரியம் தொண்டையைப் பிணித்து விட்டது.

அவள் அவன் புறம் திரும்பியே, ''நான்தான் பானு, கதவைத் திறவுங்களேன்? நான்தான், பேயோ பிசாசோ என்று எண்ணுகிறீர்கள்...'' என்றாள்.

சின்னு வாயடைத்துப்போய்த் தோளிலிருந்த பெட்டியை இறக்கி விட்டு, ஒரு கையால் சட்டைப் பையிலிருந்த சாவியை எடுத்தான். அதைப் பூட்டில் பொருத்தி இருட்டில் கதவைத் திறக்க ஒருநிமிஷமாயிற்று. சின்னுவின் உள்ளம் மின்சார விசிறியாய்ச் சுழன்றது. அவள் மூச்சு, வளையல் ஒலி, தாழம்பூ வாசம் போல் இலேசாக அவளிடமிருந்து வந்த வாசனை எல்லாம் அந்தச் சுழற்சியுடன் வேகமாகச் சுழன்றன.

உள்ளே நுழைந்தவன் கூடத்துக்குச் சென்றான். தட்டி வைத்துத் தடுக்கப் பெற்ற தங்கள் பகுதியில் இருந்த மாடத்தில் நெருப்புப் பெட்டி தேடி, விளக்கை ஏற்றினான். அதை எடுத்துக்

கொண்டு வந்த போது, அவள் முற்றத் துக் குறட்டிலே, தாழ்வாரத்துத் தூணில் சாய்ந்தபடி நின்றிருந்தாள்.

அவள், பானு, அவன் மனப்பீடத்தில் குடி கொண்டிருந்த மங்கைதானே? சௌந்தரியம் ததும்ப நிற்கும் அவள் பானுதானே?

ஹரிக்கேன் விளக்குடன் நின்ற சின்னுவுக்கு உடல் சிலிர்த்தது. முன்பு அவன் பார்த்திருந்தாற் போன்ற கறுப்புச் சேலைதான். ஆனால் ஓரத்திலே சரிகை மின்னியது. கைகள் நிறைய வளையல்கள். கண்ணாடி, பொன் இரண்டும் இருக்கும். காதுகளிலும் மூக்கிலும் அணிகள் சுடர் விட்டன. கழுத்திலே பொற் சரங்கள்..'இவளையா எனக்கு ஜோடியாக நினைத்தேன்?....அங்கயற்கண்ணியை இவளை விடக் குறைத்து எண்ணினேனே?....இல்லை....தப்பு, அப்படி எண்ணியதே தப்பு..' என்று அவன் உணர்வு உறுத்தியது.

வைத்த கண் இமைக்காமல் அவன் அவளைத் தெய்வத்தைப் பார்ப்பது போலவே பார்த்தான். ஆம், கோயில் அம்பாள் தன் முன் வந்து நிற்பதுபோல் தான் அவனுடைய உள்ளுணர்வுக்குப் பட்டது. அவனுக்குப் பேச்சே எழவில்லை. ஏதோ நடக்க முடியாத அதிசயமோ, விந்தையோ நிகழ்ந்து விட்டாற் போலிருந்தது.

''ஏன் இப்படிப் பார்க்கிறீர்கள்? உங்களையும் அத்தையையும் பார்க்க வேண்டும் போலிருந்தது; ஓடி வந்தேன். நான் வரக்கூடாதா? எனக்கு இங்கு இடம் கிடையாதா?''

அவள் இயல்பான குரலில்லை; சகஜமான கேள்வி யில்லை. செயற்கையாக, ஆறு ஓடி வரும் வேகத்திலே, பானுவா கேட்பது! இது உண்மையா? கனவா? பானுவா ஓடி வந்திருக்கிறாள்? சின்னுவுக்குக் குரல் நடுங்கியது.

''என்ன பானு? நீ தனியாகவா வந்தாய்?....''

இவ்வாறு கேட்டவனுக்கு, இப்போது தான் இன்னொரு உண்மை புலனாயிற்று.

பானுவின் புதுமையான சௌந்தரியத்துக்கு ஒரு காரணம் இருந்தது. அவள் தாயாகும் நிலையில் இருந்தாள்.

**வை**த்த கண் இமைக்காமல் சின்னு தெய்வத்தைப் பார்ப்பதுபோல் பானுவைப் பார்த்தான். எப்படியோ, என்ன காரணத்தாலோ அவளைப் பார்த்த போது, அவன் உள்ளுணர்வில் புனித எண்ணம்தான் நிறைந்தது. ''தனியாக வரலாமா, பானு?'' என்றான் மீண்டும்.

''தனியில்லாமல் இந்த உலகில் எனக்கு யார் இருக்கிறார்கள்? நான் மோசம் போனேன். ஏமாற்றப் பட்டேன். என் வாழ்வைப் பிய்த்து எறியப் பட்ட பூமாலையாகச் சிதைந்து விட்டார்கள். எனக்கு எல்லாம் கசந்து போய் விட்டன....''

இந்த ரீதியில் அவள் வெறுப்பில் முழுகிய சொற்களை அடுக்கியபோது சின்னத்துரை திடுக்கிட்டு விட்டான். அவன் கண்கள் கலங்கின.

''பானு?...என்ன சொல்கிறாய்?''

அவனால் நம்பத்தகாததாகவே இல்லையோ என்ற மாதிரியிலிருந்தது அவனுடைய கேள்வி.

''என்ன சொல்வது? நான் வஞ்சிக்கப் பட்டேன், அண்ணா! அன்றொரு நாள் காவேரிக் கரையில் நீங்கள் மனசைத் திறந்து கொட்டினீர்களே? நான் ஏன் விம்மி விம்மி அழுதேன், தெரியுமா? நான் ஏன் உங்களைப் பார்க்காமலே ஓடிப்போனேன் தெரியுமா, அண்ணா?''

குடத்தைச் சரித்ததும் குபுகுபுவென்று நீர் ஓடி வருவதுபோல் அவள் உள்ளத்திலிருந்து அந்தக் கேள்விகள் ஓடிவந்தன. உதடுகள் துடித்தன; கண்ணீர் பெருகியது.

சின்னத்துரை கண்களைப் படபடவென்று கொட்டிக் கொண்டான். சட்டென்று பேசத் தெரியாமல் போய் விட்டது போலிருந்தது அவனுக்கு.

''பொறியில் விழுந்த எலியைக் காட்டிலும் மோசமாவேன், அண்ணா. மனசோடு வைத்து இத்தனை நாட்கள் கட்டிக் காத்தேன். என்னால் தாளமுடியவில்லை...அண்ணா! அந்தக் காவேரித்தாய் எனக்கு அவள் அடிமடியில் இடம் கொடுக்காமலா போவாள்?''

விம்மல் இருதயத்தைப் பிளந்து கொண்டுவர, அவள் கடைசி முடிவைக் கூறியதும் சின்னுவுக்கு அச்சத்தால் உடல் சிலிர்த்தது.

''மெள்ள உட்கார்ந்து பதற்றமில்லாமல் பேசு, பானு..!'' என்றான். கையைப் பிடித்து அவளை உட்கார வைக்கலாமா என்று கையை நீட்டியவனுக்கு அந்தப் புனித உணர்வு கூச்சமாக வந்து நின்று தடை விதித்தது.

''அண்ணா! அந்தக் காவேரியும் என்னைத் தனியாக்கி விடுவாளா? நாதியற்றவள் என்று தள்ளி விடுவாளா?...''

''அசட்டுப் பிசட்டென்று பேசாதே, பானு. தனி தனி என்று இனிமேல் சொல்லாதே. நான் உன்னோடு பிறந்தவன். உனக்கு எப்போதும் என்றைக்கும் என் அன்பு உண்டு. என்னால் செய்யக் கூடியவைகளைச் செய்வேன். பானு! நீ ஏன் இந்த நிலையில் ஓடி வந்தாய்?'' என்று கேட்டான். **(தொடரும்)**

# நான்தான் டீ

# என்னை

# நன்றாகப்

# பாருங்கள்

ஒவ்வொரு ஆண்டும் பல லட்சக் கணக்கில் கோப்பைகளையும், தட்டுகளையும் உற்பத்தி செய்வதன் மூலம், நம் மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்த உதவுகிறது பீங்கான் தொழில். வளர்ச்சியுற்றுக்கொண்டிருக்கும் அத்தொழிலே எனது "தேநீர் கூஜாத்தலை" சின்னமாகக் கொண்டிருக்கிறது.

எனது உடலின் மற்ற அங்கங்கள் "இரண்டு இலைகளும்–ஒரு மொக்கும்". இவற்றிலிருந்து தயாரிக்கப்படும் பானம் உலகம் முழுவதும் அருந்தப்படுகிறது. மற்றும், எனது பசுமையான இலைகள், நான் வளரும் பல ஏக்கராக்களைக் கொண்ட பரந்த நிலப்பரப்பையும், இவ் விரிந்த நிலப்பரப்பில் என்னை வளர்க்கும் பல்லாயிரக் கணக்கான மக்களையும் உங்களுக்கு நினைவூட்ட வேண்டும். நிலக்கரி, சிமெண்ட், உரங்கள், டீ யந்திரங்கள், பிளைவுட் மற்றும் பல தொழில்களுக்கு நான் அளித்திருக்கிற பலத்தைப் பற்றியும் அவை உங்களுக்கு நினைவூட்டும் என்று சொல்லத்தேவையில்லை. தற்பொழுது இந்தியாவில் ஒவ்வொரு ஆண்டும் ஏறக்குறைய அறுபது லட்சம் டீ பெட்டிகள் பிளைவுட்டினால் தயாரிக்கப்படுகின்றன.

எனவே, பாரதத்தின் விவசாயம், மற்றும் ஆலைத்தொழில் துறைகளில் நான் மிகவும் முக்கிய இடத்தைப் பெற்றுள்ளேன். நான் நிலத்தில் உழைக்கும் உழைப்பாளிக்கும், ஆலையில் வேலை செய்யும் தொழிலாளிக்கும் நண்பன். எல்லாவற்றிற்கும் மேலாக உங்கள் இன்ப துன்பங்களில் உற்ற நண்பனாக விளங்குகிறேன்.






## நான்தான் டீ — இந்தியாவின் செல்வம்

## அரித்து. எரிந்து. கொப்பளிக்கும் எக்ஸிமா 10 நிமிஷத்தில் குணமடைகிறது

நிக்ஸோடெர்ம் (Nixoderm) கண்டுபிடிக்கப் பட்ட பிறகு எக்ஸிமா, முகப்பரு, படை, ரத்தக் கட்டி முதலிய அருவருப்புத் தரக்கூடிய சரும உபாதைகளினுல் அவதியுற அவசியமே இல்லே. நோயாளி என நினேத்து நண்பர்கள் விலகக் காரணமான அருவருப்பான சருமத்தை இம் மருந்தினுல் குணப்படுத்துங்கள்

### ஒரு புதிய சாதனம்

நிக்ஸோடெர்ம் (Nixoderm) ஒரு புதிய களிம்பு. பிசுக்கற்றது. ஒன்பது மூலப் பொருள்களின் சேர்க்கையால் தயாரித்த நிக்ஸோடெர்ம் (Nixoderm) மேலே தடவும் போதே ஒரு பவுடரைப்போல சருமத் துவாரங்களினூடே சென்று வியாதிக்கு மூலமான இடத்தை மூன்று வழிகளில் தாக்குகிறது. (1) நோய்க்குக் காரணமான கிருமிகளேக் கொல்லுகிறது. (2) அரித்து, எரிந்து வெந்து போவதை 7 முதல் 10 நிமிஷத்தில் தடுத்து சருமத்தை மென்மை யாக்குகிறது. (3) இயற்கையாகவே ஆற்றிச் சுத்தமாக்குகிறது

### விரைவில் பலனளிக்கிறது

சரும நோய்களே நிவர்த்திக்கவே தயாரான நிக்ஸோடெர்ம் (Nixoderm) மற்றதை விடச் சீக்கிரமாகவே நமைச்சல், எரிச்சலேச் சில நிமிஷத்தில் நிறுத்திச் சருமத்தை மிருதுவாகவும் வழவழப்பாகவும் செய்கிறது. நிக்ஸோடெர்ம் (Nixoderm) ஆயிரக் கணக்கானவர்களது சருமத்தைச் சுத்தமாக்கி புஷ்டியாக்கியது. அவர்களில் ஒருவரான மிஸ்டர் R. K.







கூறுகிறார். 12 வருஷமாக நமைச்சலும் எரிச்சலும் தரும் எக்ஸிமாவினுல் கஷ்டப்பட்டேன். பல மருந்துகளுக்குப் பின் நிக்ஸோடெர்ம் (Nixoderm) உபயோகித்தேன். பத்து நிமிஷத்தில் நமைச்சல் நின்று மறுநாளே சருமம் சுத்தமாகியது. என் தோற்றத்தின் மாறுதலேக் கண்ட நண்பர்கள் ஆச்சரியமடைந்தனர்

### திருப்திக்கு உத்தரவாதம்

இன்றே நிக்ஸோடெர்ம் (Nixoderm) வாங்கி உபயோகித்து அதனுல் ஏற்படும் பலனே கவனியுங்கள். ஒரு வாரத்தில் சருமத்தைச் சுத்தப்படுத்துகிறது. திருப்தி அளிக்கும்படி சருமத்தைச் சுத்தப்படுத்தாவிடில் அதற்கான செலவைப் பற்றிக் கவலேயுற வேண்டாம். அதன் காலிபாக்கெட்டைத் திருப்பி அனுப்பினுல் உங்களுக்கு முழுப் பணம் வாபஸ் செய்யப்படும். அதற்கு அளிக்கப்படும் உத்தரவாதமே உங்களுக்குச் சிறந்த பாதுகாப்பு

---



## பாவுஸேரி பெனிபிட் சிட் பண்டு
### (பிரைவேட்) லிமிடெட்

3. சிங்கராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி
தபால் பெட்டி நெ. 414 . . . ம த ரா ஸ் - 5
தந்தி: 'EVERMANS' . . . போன்: 85834

சேரக் கடைசி தேதி 24-1-1957 ... முதல் ஏலத் தேதி 26-1-1957

| 25 மாதங்கள் | மாதாந்திர சீட்டுகள் (4-வது சனிக்கிழமை ஏலங்கள்) | 25 அங்கத்தினர்கள் |
|---|---|---|

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|---|---|---|
| B | ரூ. 100/- | ரூ. 2,500/- | E | ரூ. 20/- | ரூ. 500/- |
| C | ரூ. 50/- | ரூ. 1,250/- | F | ரூ. 15/- | ரூ. 375/- |
| D | ரூ. 25/- | ரூ. 625/- | G | ரூ. 10/- | ரூ. 250/- |

விலாசம் தெளிவாக எழுதிக் கேட்பவர்களுக்கு எங்கள் விதிகள் இலவசமாக அனுப்பப்படும். சீட்டில் அங்கத்தினர்களேச் சேர்த்துக் கொள்ளும் உரிமை பண்டைச் சேர்ந்தது

(போர்டார் உத்திரவுப்படி.) எம். வி. சுப்பிரமணியம், மானேஜிங் டைரக்டர்

டெல்லி கிளே ஆபஸ் விலாசம் : B. 6, ப்ளாக் ... டெல்லி-ஆஜ்மீரி கேட் ஸ்கீம், புது டெல்லி-1

எங்கள் சேவை உங்களுக்குத்தேவை

# ஆசியப் பேனா வீரர் மகாநாடு



அ. சீரா.

(6-1-57 இதழின் தொடர்ச்சி)

'பாரத நாட்டில் உள்ள ஒவ்வொரு இலக்கியமும் கலாசாரக் கலவையாகத் திகழ்வது உண்மைதான். ஆனாலும் ஒவ்வொரு இலக்கியமும் அந்த அந்தப் பிரதேசத்தின் வரலாறு, வாழ்க்கை மலர்ச்சி, இவற்றின் சாயலாகவும் நிற்கிறது. இதனால், ஒவ்வொரு இந்திய இலக்கியத்துக்கும் தனித்தன்மை ஒன்று விளைந்திருக்கிறது. இந்த நிலையை நாம் ஏற்றுக் கொள்ள வேண்டும். எல்லா இலக்கியங்களும் ஒரே மாதிரியாக இருக்கின்றன என்று முடிவு கட்டி விட்டால், பிறகு பரிவர்த்தனைக்கு இடமேது, தேவை ஏது?

அந்த அந்த பாஷையின் சிருஷ்டி இலக்கிய எழுத்தாளர்கள், தமது பிரதேச வாழ்க்கையில் தோய்ந்து, சிறந்த இலக்கியத்தைப் படைக்கட்டும். அப்போது, தாமாகவே, மற்றைய மொழிகளில் அவற்றின் மொழி பெயர்ப்புத் தோன்றும். தகுதி இல்லாததை ஒரு மொழியிலிருந்து இன்னொரு மொழிக்கு ஏற்றுமதி செய்வதில் பயன் என்ன? நல்ல சரக்கானால் தானாகவே விலை போகும். வங்காள தாகூரையும், ஹிந்தி பிரேம்சந்தையும், மராட்டிய காண்டேகரையும் தமிழிலே மொழி பெயர்த்திருக்கிறோம். எங்கள் ராஜாஜி ரோம சக்கரவர்த்தி மார்கஸ் அரேலியஸின் சிந்தனைகளைத் தமிழிலே தந்திருக்கிறார். கீதையும், இராமாயணமும் பாரதமும் தமிழிலே உண்டு. யாராவது சொல்லியா செய்தோம்? இல்லை. சிறந்த சிருஷ்டி இலக்கியம் எந்த மொழியில் இருந்தாலும், அதை மற்றைய மொழிகள் ஏற்கும். ஆகவே சிறந்தவற்றைத் தத்தம் மொழியில் சிருஷ்டிக்க, சிருஷ்டி இலக்கிய எழுத்தாளர்கள் முயல வேண்டும்.

அறிவு இலக்கியம் படைப்பவர்கள் மலரிலிருந்து மலருக்குச் சென்று தேன் தேடும் தேனீயைப்போல் ஒவ்வொரு இலக்கியத்திலும் உள்ள தேனைத் திரட்டித் தமது மொழிக்கு அளிக்க வேண்டும். தேனீ, மலரிலிருந்து மலருக்குச் செல்வதால், தாவர வாழ்வு பெருகுகிறது என்று விஞ்ஞானிகள் சொல்வார்கள். அதுபோலவே, அறிவு இலக்கியம் படைக்கும் எழுத்தாளர்கள், பல கலாசாரங்கள், நாகரிகங்கள், இலக்கியங்கள், இவற்றில் உள்ள மேன்மையைத் துய்த்து, அதைப்பற்றிய அறிவைப் பரப்பினால், அவரவர் மொழியில் வாழ்வு பெருகும்; புதிய சக்தி உதயமாகும். அதே சமயத்தில் இலக்கிய கலாசார சம்மேளனம் என்ற நந்தவனம் நாடுமுழுவதும் மணம்வீசும்.

இந்த நிலையில் தோன்றும் வாழ்க்கை வளத்தைத்தான் எங்கள் தமிழ்க் கவிஞர் பாரதியார் பாடலாக வடித்தார்:

'சிந்து நதியின் மிசை நிலவினிலே
சேர நன்னாட்டிளம் பெண்களுடனே
சுந்தரத் தெலுங்கினில் பாட்டிசைத்துத்
தோணிகள் விட்டு விளையாடி வருவோம்.'

இவ்வாறு தமிழ் எழுத்தாளர் குழுத் தலைவர் பேசிய பேச்சு, அன்றையக் கூட்டத்தின் மங்களமாக அமைந்தது. சுதேசமித்திரன் ஆசிரியர் ராஜ அரியரத்தினத்துக்கு ஒரே குதூகலம். 'இந்த உரை வரிசையைத் தொடங்கியது தமிழ். இதை நிறைவாக்கியது தமிழ். அது மட்டுமா? வள்ளுவரில் தொடங்கினோம். பாரதியின் பாடலைக் கொண்டு மங்களம் பாடினோம்' என்று சொல்லி மகிழ்ந்தார். தமிழ்ப் பிரதிநிதிகள் எல்லோருமே—நான் கூட—கொஞ்சம் நிமிர்ந்து நடந்தோம்.

மறுநாள் அதாவது டிசம்பர் 23-ந் தேதி, காலையில் ஆசிய எழுத்தாளர் மகாநாடு பேராசிரியர் ஹுமாயூன் கபீர் தலைமையில் கூடியது. மகாநாட்டைக் கூட்டுவதற்கு எவ்வளவோ பாடுபட்டு, முதல்நாள் இந்திய எழுத்தாளர் சம்மேளனத்தில் பொழிந்த சொல்லம்பு மாரியை எல்லாம் ஏற்ற டாக்டர் முல்க்ராஜ் ஆனந்த் பிரசன்னமான முகத்தோடு மேடையில் வீற்றிருந்தார்.

பாகிஸ்தான், பாரசீகம், ஸிரியா, ஆசிய ருஷ்யா, மக்கள் சீனா, பர்மா, வியட்நாம், இலங்கை, வடகொரியா, மங்கோலியா, ஜப்பான் முதலிய பதின்மூன்று ஆசிய நாடுகளிலிருந்து பிரதிநிதிகள் விஜயம் செய்திருந்தார்கள். இவர்கள் எல்லோரும் பொதுவாக ஐரோப்பிய உடை அணிந்து வந்திருந்தார்கள். என்றாலும் ஒரு சிலர் — பர்மியப் பிரதிநிதிகள் இவர்களில் முக்கியமானவர்கள் — தமது தேசீய உடையில் இருந்தார்கள். வேறு சிலர் — முக்கியமாக மங்கோலியர் — தமது நாட்டுச் சின்னங்களை அணிந்து வந்தார்கள். மங்கோலிய தொப்பி பிரமாதமாய் இருந்தது.

தமிழ் எழுத்தாளரில் பலர் தமிழராகவே காட்சி அளித்தது மிகுந்த பெருமையாக இருந்தது. ஆனால் தமிழ் வேட்டி ஜிப்பாவில் தில்லி குளிரில், அவர்கள் பட்ட வேதனை அவர்களுக்கல்லவா தெரியும்!

பல மொழிகள் அங்கே முழங்கின. ஆனால் எல்லா மொழிகளும் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டன.

இந்த மொழிபெயர்ப்பு வியாபாரத்தில் ரஸமான நிலை ஒன்று ஏற்பட்டது. ஆங்கிலத்தில் ஒருவர் ஹாஸ்யமாக ஏதாவது சொல்வார். உடனே ஆங்கிலம் தெரிந்த பிரதிநிதிகள் சிரிப்பார்கள். இரண்டு மூன்று நிமிஷம் கழிந்த பிறகு வெளி நாட்டுப் பிரதிநிதிகள் பலர் கைகொட்டிச் சிரிப்பார்கள். அப்போது பேசுகின்றவர், 'ஏன் இவர்கள் சிரிக்கிறார்கள்?' என்று எண்ணி, 'ஓகோ, தாம் முன்னே சொன்னதன் மொழிபெயர்ப்பை இப்போது கேட்டுச் சிரிக்கிறார்களா?' என்று தம்மைத் தாமே தேற்றிக் கொள்ளுவார். இந்த நிலைமை நமது ராஜாஜி பேசியபோது அடிக்கடி ஏற்பட்டுக் கொண்டே இருந்தது.

அந்தந்த மொழியில் உள்ள இலக்கியத்தைப் பற்றி ஒவ்வொரு கோஷ்டியும் ஓர் அறிக்கை சமர்ப்பிக்க வேண்டும் என்பது முதல் நாள் ஏற்பாடு. இந்திய இலக்கியங்களைப் பற்றிய அறிக்கைகளை டைப் செய்து பிரதி யெடுத்து, பிரதிநிதிகளுக்கு விநியோகித்து விடுவது என்றும் இந்திய இலக்கியங்களைப் பற்றி ஒருவரும் கூட்டத்தில் பேசவேண்டாம் என்றும் டாக்டர் முல்க்ராஜ் ஆனந்த் யோசனை கூறினார். இது இந்தியப் பிரதிநிதிகள் பலருக்கு—முக்கியமாக—தென்னிந்தியப் பிரதிநிதிகளுக்குச் சிறிதும் பிடிக்கவில்லை. தமிழ் கோஷ்டித் தலைவர் முல்க்ராஜ் ஆனந்தின் மனத்தை மாற்றி இந்திய இலக்கியங்கள் ஒவ்வொன்றைப் பற்றியும் ஐந்து நிமிஷங்கள் பேசுவதற்கு ஏற்பாடு செய்தார்.

முதல் நாள் பேராசிரியர் கபீர், இந்திய சம்மேளனத்தின் சார்பில், வெளிநாட்டு எழுத்தாளர்களை வரவேற்று அருமையான பிரசங்கம் ஒன்று செய்தார். ''உலக சமாதானத்தை உருவாக்கும் முயற்சியில் எழுத்தாளர் அனைவரும் ஈடுபட வேண்டும். பல நாட்டு மக்களிடையே நல்லெண்ணத்தை வளர்ப்பது எழுத்தாளர் கடமை. பல மொழிகளும் பல இலக்கியங்களும் மனிதனுடைய எல்லையற்ற ஆன்ம ஒளியின் பல்வேறு வண்ணங்கள். இந்த மகாநாட்டின் மூலமாகப் பல இலக்கியங்களோடு நேரில் தொடர்பு கொண்டு அவற்றுக்கு மதிப்புத் தரவும், அவற்றை வெவ்வேறு மொழிகளில் மொழிபெயர்க்கும் நல்ல முயற்சியில் முனையவும் எழுத்தாளர்கள் கற்றுக் கொள்வார்கள்'' என்றார்.

பிறகு பல்வேறு இலக்கியங்களைப் பற்றிய அறிக்கைகள் சமர்ப்பிக்கப் பெற்றன. தற்காலச் சீன இலக்கியத்தைப் பற்றிய அறிக்கை என் மனத்தைக் கவர்ந்தது. மற்றைய நாட்டு எழுத்தாளர் தத்தம் இலக்கிய சாதனைகளைப் பற்றிப் பெருமையோடு பேசினார்கள். சாதாரண மக்களோடு தொடர்பு கொண்டு, அவர்களுடைய வாழ்க்கையைப் பற்றி எழுத்தாளர்கள் இப்போது அதிகமாக எழுதுகிறார்கள் என்றும், இதனால் இலக்கியம் மக்களுடைய முன்னேற்றத்துக்கு உதவும் சக்தி வாய்ந்த கருவியாகத் திகழ்கிறது என்றும் பொதுவாக எல்லாப் பிரதிநிதிகளும் தெரிவித்தார்கள். சமீப காலத்தில் ஆசிய இலக்கியங்கள் கலை நுட்பங்களிலும், இலட்சியங்களிலும் மேனாட்டு இலக்கியங்களை அதிகம் கப் பின்பற்றி உள்ளன என்பதையும் எல்லோரும் குறிப்பிட்டார்கள். ரஷ்யா, சீனா, பர்மா ஆகிய நாடுகளில் இந்திய இலக்கியங்களை எவ்வளவு தூரம் மொழிபெயர்த்திருக்கிறார்கள் என்பதும் தெரிந்தது.

'இவை யெல்லாம் மொழிபெயர்ப்பு நூல்கள். எல்லாம் இந்திய இலக்கியம்' என்று ரஷ்யப் பிரதிநிதி மேஜையின் மேல் கட்டுக்கட்டாகப் புத்தகங்களை அடுக்கிய போது இந்திய எழுத்தாளர்கள் மிகுந்த பெருமையோடு கரகோஷம் செய்தார்கள். 'ஆனால் நாமும் இதைப் பின்பற்ற வேண்டாமா? மற்றைய நாட்டு இலக்கியங்களை நமது தமிழிலே தர வேண்டாமா?' என்ற கவலை என் நெஞ்சை நிறைத்தது.

இரண்டு அறிக்கைகள் என்னை வெகுவாகக் கவர்ந்தன. ஒன்று சீன அறிக்கை. சீனகோஷ்டியின் தலைவரான மா துன் என்பவர் சொன்னார்:

''இன்றையச் சீன இலக்கியம் பேசுகின்ற பொருள் மிகக் குறுகியதாக இருக்கிறது. அதன் நடையும் ஒரே மாதிரியாகச் சலிப்புத் தட்டும் வகையில் இறுகிவிட்டது. ஆகவே நாங்கள் புது இயக்கம் ஒன்று தொடங்கியிருக்கிறோம். இந்த இயக்கத்தின் சுலோகம் 'புதுப்புது மலர்கள் மலரட்டும், புதுப் புதுக் கருத்துக்கள் உலவட்டும்' என்பது.''

இந்தச் சீன எழுத்தாளர் தலைவருடைய அடக்கத்தையும், புதுமையில் அவருக்குள்ள ஆர்வத்தையும் நாமும் பின்பற்றினால் எவ்வளவு நன்றாக இருக்கும்?



ஆசியப் பேரறிஞர் மகாநாட்டில் கலந்து கொண்ட தமிழ் எழுத்தாளர்கள். தமிழ் எழுத்தாளர் குழுத்தலைவர் பேராசிரியர் அ. சீநிவாசராகவன், ஆசிய எழுத்தாளர் மகாநாட்டுப் பிரதிநிதிகளுக்குத் தமிழ் இலக்கியத்தின் சிறப்பைக் காட்டும் நூலை ஆங்கிலத்தில் வழங்கி உதவிய கே. என். ஜம்புநாதன், தமிழ் எழுத்தாளர் சங்க உதவிக் காரியதரிசி திரு வைத்தியநாதன், திரு ஏ. வி. செட்டியார், ஈழநாட்டுப் பிரதிநிதி திரு ராஜ அரியரத்தினம் ஆகியோரைக் காணலாம்.



ஆசிய எழுத்தாளர் மகாநாட்டுக்கு ராஜாஜி வருகிறார்

இந்த இலக்கிய அறிக்கை வரிசையில் முதல் நாள் மாலையில் தமிழுக்குக் கடைசி இடம் கிடைத்தது. அதுவும் நல்லதாகப் போயிற்று. ஏனென்றால் தமிழுக்குப் பிறகு அன்று வேறு அறிக்கை ஒன்றும் இராது என்ற நம்பிக்கையில் ஐந்து நிமிஷத்துக்குப் பதிலாக இருபத்தைந்து நிமிஷம் தமிழுக்குக் கிடைத்தது.

'தென்னிந்திய மொழிகளில் மிகத் தொன்மையானது தமிழ். இரண்டாயிரத்தைந்நூறு ஆண்டுகளுக்கு முன்பே அதில் அழகிய கவிதை பிறந்து வளர்ந்து விட்டது. உலகத்தில் கால் ஊன்றி நின்று அதை நேருக்கு நேர் பார்த்துப் பேசும் பாங்கும், செறிவும், வாழ்க்கையோடு ஒட்டி நிறகும் தன்மையும் இப் பண்டைய இலக்கியத்தின் பண்புகள். அதன் ஒரு பகுதியான அகத்துறைப் பாடல்கள், மிக மிக நுட்பமான மன நிலைகளைக் குறிப்பால் உணர்த்தும் அருமைப்பாட்டைப் பெற்றுள்ளன. ஒன்றை மற்றொன்றின் அடையாளமாக வைத்துப் பேசும் இந்த முறையை, அடுத்த தமிழ் இலக்கிய சகாப்தத்தில் தோன்றிய ஆழ்வார்களும் நாயன்மார்களும் பயன்படுத்திக் கொண்டார்கள். மனித வாழ்வையும், அது நடைபெறும் இம் மண்ணுலகத்தையும் அப்பாலுக்கப்பால் உள்ள பொருளை உணர்த்தும் சங்கேதங்களாக அவர்கள் கையாண்டார்கள். பிறகு கம்பர் தோன்றினார். தமிழுடைய சாதனை அனைத்தையும் காவியமாக வடித்தார்; அதோடு உயிருக்கும் இறைவனுக்கும் உள்ள உறவினைக் காட்டும் அழகுச் சாஸரமாகவும் ராம காதையை அமைத்தார். அதன்பின் பல நூற்றாண்டுகளுக்குச் சிறந்த இலக்கிய முயற்சி நடைபெற்று வந்தபோதிலும் பண்டைய இலக்கியத்தில் இருந்த வேகமோ, அனுபவ முத்திரையோ புது வடிவம் பெறவில்லை. இந்த நூற்றாண்டின் முற்பகுதியில், தேசிய உணர்ச்சி பெருக்கெடுத்து ஓடத் தொடங்கிய போதுதான் தமிழ் இலக்கியம் புது வேகம் பெற்றது. இப் புது யுகத்தின் கட்டியம் கூறியவர்கள் இராமலிங்க அடிகள், ஆறுமுக நாவலர், சுந்தரம் பிள்ளை, வேதநாயகம் பிள்ளை, ராஜம் அய்யர், சுப்ரமண்ய பாரதி இவர்கள் ஆவார்கள். இவர்கள் தந்த ஆற்றல் இன்னும் தளராமல் இலக்கிய வளத்தைப் பெருக்கி வருகிறது' என்று உதாரணங்களோடு அவர் பேசினார். அவர் பேசிக்கொண்டிருந்தபோது, ''தமிழ்ப் பாடல்கள் சிலவற்றைச் சொல்லுங்கள். நேரத்தைப் பற்றிக் கவலைப் படவேண்டாம்'' என்று ரஷ்யப் பிரதிநிதிகள் கோஷ்டியிலிருந்து சீட்டு ஒன்று வந்தது. இதிலிருந்து வெளிநாட்டுப் பிரதிநிதிகள் ஒருசிலராவது தமிழின் பெருமையைச் சிறிது உணர்ந்திருப்பார்கள் என்று நம்ப இடம் ஏற்பட்டது.

இரண்டாம் நாள் காலையில் டாக்டர் ஸி.பி. ராமசாமி அய்யரும், ராஜாஜியும் மகாநாட்டுக்கு விஜயம் செய்தார்கள். இது மகாநாட்டின் பெருமைக்குச் சிகரம் வைத்தது போல் இருந்தது. அழகிய ஆங்கிலத்தில் டாக்டர் அய்யர் பேசினார்.

ராஜாஜியின் பேச்சு தொடங்கியதிலிருந்து முடியும் வரையில் சபையில் ஒரே குதூகலம், ஒரே உணர்ச்சி. அவர் ஆங்கிலத்தில்தான் பேசினார். ஆனால் அவர் தொடங்கிய இரண்டொரு நிமிஷத்தில் அவர் எந்த பாஷையில் பேசுகிறார் என்பது மறந்து போய்விட்டது. நமது உள்ளமே பேசுகிறது என்ற உணர்வே எல்லோருக்கும் ஏற்பட்டது. அவ்வளவு எளிமையாக, அவ்வளவு உருக்கமாக அதோடு மிகுந்த நகைச்சுவையோடு அவர் பேசினார்:

''எனக்கு ஒரே குழப்பமாக இருக்கிறது. உலகக் கலாசாரப் பரிவர்த்தனையின் அடையாளமாக நிற்கும் இந்த விஞ்ஞான பவனத்தைக் கண்டதும் பழைய தலைமுறையைச் சேர்ந்தவனான எனக்குத் தலை சுற்றுகிறது. ஆசிய நாடுகளைப் பூகோளப் புத்தகங்களிலே தான் பார்த்திருக்கிறேன். இப்போது அந்நாடுகளின் எழுத்தாளர் பலரை நேரிலே காண்கிறேன். சந்தோஷம்.

நான் இந்தியாவில் மட்டுமில்லை, ஆசியாவில் இருக்கிறேன். இதுதான் இப்போது

இங்கே முதலில் நான் உணர்வது. சென்னையில் மட்டுமில்லை, குஜராத்தில் மட்டுமில்லை, இந்தியாவில் இருக்கிறோம் என்பதை உணர நாங்கள் எவ்வளவோ பாடுபட்டோம். ஆசியாவில் இருக்கிறோம் என்பதை உணர்வது நல்லதுதான்.' ஆனால் அதைவிட நல்லது உலகத்திலே இருக்கிறோம் என்பதை உணர்வது. அதைச் செய்து விட்டால் மனித குலத்தின் பிரச்னைகள் தீர்ந்து விடும்.

நான் ஓர் எழுத்தாளன் இல்லை. எழுதியிருக்கிறேன், உண்மைதான். இந்தக் காலத்தில், எழுத்தாளன் என்றால் எழுதுகின்றவன், எழுதுவதைத் தவிர வேறொன்றும் செய்யாதவன் என்பதுதானே பொருள்? இது அவ்வளவு நல்லதா? எழுதுவதைத் தவிர வேறொன்றுமில்லை என்று எண்ணி, தன் அறைக்குள்ளே பேனாவோடு அடைந்து கிடப்பவன், நாளாக நாளாக வாழ்க்கையோடுள்ள தொடர்பை இழந்து விடுகிறான். பிறகு எழுதுவதற்கே விஷயம் இல்லாமல் ஊற்றுக் கண் அடைத்து வற்றிப் போகிறது. அப்போது, பழைய இலக்கியங்களைத் தன்னுடையது என்று விலை கூறுகிறான். அல்லது உண்மையோடு சம்பந்தமில்லாத கற்பனையில் அழுந்தி விடுகிறான். இவை நல்லதல்ல.

ஆசிய மகாநாட்டினால் ஆசிய எழுத்தாளர் எளிதில் ஒருவரை ஒருவர் புரிந்து கொள்ள முடியும். ஆனால் நினைவு வைத்துக் கொள்ளுங்கள்: ஆசியரல்லாத மற்றவரோடு போர் தொடங்குவதற்கு இம்மகாநாடு கூடவில்லை. குறுகிய மனப்பான்மையை நாம் கண்டிக்கிறோம். எங்கள் கிராமம், எங்கள் மாகாணம், எங்கள் தேசம் என்று பேசுவதைச் சில சந்தர்ப்பங்களில் நாம் குறை கூறுகிறோம். அதுபோலவே 'எங்கள் ஆசியாக் கண்டம்' என்று நாம் பேசுவதும் தவறாகக் கூடுமல்லவா? எழுத்தாளனுக்கு இத்தகைய குறுகிய மனப்பாங்கு வரவே கூடாது. மற்றவர்களை இந்த மனப்பாங்கிலிருந்து விடுவிக்கவே இறைவன் எழுத்தாளனைப் படைத்திருக்கிறான். இதை அரசியல்வாதிகள் விரைவில் சாதிக்க முடியாது. மக்களுடைய போக்கோடு இசைந்து, சிறிது சிறிதாகத்தான் அவர்களை அரசியல்வாதிகள் திருப்ப முடியும். வேகமாக மக்களைத் திருப்ப முயலும் அரசியல் தலைவன், தன் தலைமைப் பதவியை இழந்து விடுகிறான். ஆனால் எழுத்தாளனுக்கு இந்தக் கவலை இல்லை. அவர்களுடைய இலட்சியத்தை ஒருவரும் குறைக்க முடியாது. கசப்பான விஷயங்களைக் கூட, மக்கள் நன்மைக்காக எழுத்தாளன் எழுத முடியும். இதை எழுத்தாளர் மறக்கவே கூடாது.

ஆசிய இலக்கியம் உயர்ந்தது, பண்டைக் காலத்தில். இப்போது நம்முடைய தற்கால இலக்கியம் மேனாட்டார் இலக்கியத்தை விட, தரத்தில் குறைந்துதான் இருக்கிறது. இதை ஒப்புக் கொள்வோம். அவர்களைப் பார்த்து இந்தத் துறையிலும் முன்னேறுவோம்.

இதற்குப் பிற இலக்கியங்களைத் தெரிந்து கொள்ள வேண்டும். இதற்கு மொழிபெயர்ப்புத்தான் கருவி. ஆனால் மொழிபெயர்ப்பு மொழிபெயர்ப்பாக இருக்க வேண்டும். கொஞ்சம் கரடுமுரடாக இருந்தாலும் பாதகமில்லை. மூலத்தின் சக்தி குறைந்து விடக் கூடாது. இந்த முறையில் ஆசிய இலக்கியங்கள் மாத்திரமில்லை, உலக இலக்கியங்களையும் வழங்க வேண்டும்.

கடைசியாக ஒரு வார்த்தை. அரசியல் அவசியமானதுதான். ஆனால் அதைக் கொண்டு வந்து எழுத்தாளர் மகாநாட்டில் குழப்ப வேண்டாம். குளிக்கும் அறை தேவையானதுதான்; ஆனால் அங்கே போயா சாப்பிடுகிறோம், இல்லையே?

நன்றாக எழுதக் கற்றுக் கொள்வோம்; இங்கே நாம் சந்திப்பதன் மூலமாக அந்த நோக்கம் நிறைவேறட்டும்.

எழுத்தாளனுக்குச் சுதந்திரம் வேண்டும். எதற்கு? பிரசாரம் செய்வதற்கா என்றால் இல்லை. எழுத்தைக் கலையாகப் பயில்வதற்கும், தன் உள்ளத்தில் உள்ளதை அப்படியே கலைப் பொருளாக வடிப்பதற்கும் சுதந்திரம் வேண்டும். இது இல்லையென்றால், எழுத்து வெறும் பிரசாரமாகி விடும். எழுத்தைக் கலையாகக் கருதி, அதை வளர்த்து ஆசிய எழுத்தாளர் மேம்பாடு அடைந்தால், ஆசியா மட்டுமில்லை, உலகமே நன்மை அடையும்!''

இது ராஜாஜி பேசிய அற்புதமான பேச்சின் சுருக்கம். பேச்சின் அழகும் வேகமும் இந்தச் சுருக்கத்தில் தெரிய வராது. ஆனால் ராஜாஜியை அன்று நேரிலே கேட்கும் பாக்கியம் செய்தவர்களுக்கு, எழுத்தாளன் வணங்கும் உண்மையும் அழகும் உள்ளத்திலே பூத்து நிற்கும் என்பதில் ஐயமில்லை.

இதன் பிறகு மகாநாடு பல கமிஷன்களாகப் பிரிந்து நான்கு விஷயங்களை ஆலோசித்தது.

1. எழுத்தாளனும் சுதந்திரமும்.
2. ஆசிய மரபுகளும் புதிய ஆசியாவும்.
3. எழுத்தாளன் தொழில்.
4. கலாசாரப் பரிவர்த்தனை.

இவை ஒவ்வொன்றையும் பல நாட்டுப் பிரதிநிதிகள் பல கோணங்களிலிருந்து நுணுக்கமாக ஆராய்ந்தார்கள். அப்போது பிரதிநிதிகளுக்கு இன்னும் நெருங்கிப் பழக வாய்ப்புக் கிடைத்தது. வெறுமனே கூடிக் கலையாமல் சிறந்த கொள்கைகளையும், கருத்துக்களையும் உருவாக்க முடிந்தது.

நாலைந்து நாட்களுக்கு விருந்து மயம்: இந்திய ராஷ்டிரபதி பவனம், சீனத் தூதர் காரியாலயம், டில்லி முனிஸிபல் கமிட்டி, பஞ்சாபி கலாகேந்திரம், முதலிய பல இடங்களில் பிரதிநிதிகளுக்கு விருந்துகள் நடந்தன. இவை தவிர, டில்லி தமிழ் எழுத்தாளர் சங்கமும், டில்லி தமிழ்ச் சங்கமும் தமிழ்ப் பிரதிநிதிகளை வரவேற்று உபசரித்தன.

டில்லிக் குளிரிலிருந்தும், விருந்துப் புயலிலிருந்தும் மெல்ல விடுவித்துக் கொண்டு சென்னை திரும்பினேன்.

மகாநாட்டின் கடைசி நாளன்று பிரதம மந்திரி பண்டித ஜவாஹர்லால் நேருவும், உப ஜனாதிபதி டாக்டர் ராதாகிருஷ்ணனும் பேசினார்கள் என்று பத்திரிகை வாயிலாக அறிந்தேன். நான் இருந்து கேட்கக் கொடுத்து வைக்கவில்லை. அதனால் என்ன, ஒரு நாள் முன்னதாகவே சென்னைக்கு வந்ததால் 'வியாசர் விருந்து' எனக்குக் கிடைத்தது; அது என்ன எளிதில் கிடைக்கக் கூடியதா?

ஜன்னல் அருகில் உட்கார்ந்து வெளியே வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்த மங்களம் ஒரு பெருமூச்சு விட்டாள். அவள் மனம் எங்கேயோ சஞ்சரித்துக் கொண்டிருந்தது. ஆயிற்று, தனி மரம் போன்ற இவ் வாழ்க்கையை அவள் ஆரம்பித்து இரண்டு வருஷங்கள் ஓடிவிட்டன. இப்பொழுதெல்லாம் அவள் வாழ்க்கையில் சிறிது பசுமை யூட்டி ஆறுதலையளித்தது குழந்தை சோபனா தான். வயதான தன் பாட்டியுடனும், தன் குழந்தையுடனும், கிராமத்திலிருந்த அப் பழைய வீட்டிலே காலம் தள்ளிக் கொண்டிருந்தாள் மங்களம்.

அவளுக்கு வயது இருபத்திரண்டேதான். கொடி போலத் துவளும் தளதளத்த சரீரமும் நல்ல அழகும் களையும் பொருந்திய முகம். நன்றாய்ப் படித்தவள். பெற்றோர் இல்லாவிடினும், தாயைப் பெற்ற பாட்டி, ஆசையாய்ப் பார்த்துப் பார்த்து எல்லாவிதத்திலும் மங்களத்துக்குத் தகுதியான கணவனாகவே பொறுக்கி யெடுத்தாள்.

நிறைந்த மனத்துடன் ஆனந்தமாக வாழ்க்கை நடத்தினாள் மங்களம். வீட்டில் அவள், கணவன் துரைசாமி, அவனுக்கு மூன்று வயது இளையவன் கோபாலசாமி இவ்வளவே பேர்கள்தான்!

கல்யாணத் தன்றே தன் தம்பியை மனைவிக்குக் காண்பித்து, "மங்களம்!— என் தம்பி கோபு இவன். உன் தம்பியாகவே மதித்து அவனை நீ பிரியமாகப் பார்த்துக்கொள்ளவேண்டும்" என்றான் துரைசாமி.

எதிரே நின்றபடி குறும்பாகப் பார்த்துச் சிரித்த கோபுவினிடம் அவளுக்குப் பாசம் பிறந்து விட்டது.

தன் கணவனைப் பார்த்து நாணத்துடன், "ஆகட்டும்" என்றபடி தலைகவிழ்ந்து கொண்டாள்; ஆனால் கோபுவைத் தன் தம்பியாகவே பாவித்து அன்பாக நடத்துவது அபவாதத்துக்கு இடமளிக்கும் என்பதை அந்தப் பேதைப் பெண் அப்பொழுது அறிந்துகொள்ளவில்லை. பாவம்....

ஒரு வருடத்தில் குழந்தை சோபனா பிறந்தாள். அச்சிறு வீட்டில் இன்பம் துள்ளியது.

"அம்மா! இந்த ரயில் வண்டியைச் சரி செய்யேன்! ஓடவே மாட்டேன் என்கிறது" என்று புகார் பண்ணினாள் சோபனா;

குழந்தையின் குரல் மங்களத்தின் சிந்தனையைக் கலைத்தது. சட்டென்று எழுந்து போய் அந்த விளையாட்டு ரயிலைச் சாவி கொடுத்து ஓட வைத்தாள். கடகட வென்று வேகமாக ஓடிச் சுவரில் மோதிக் கொண்ட அந்த ரயிலைக் கண்டதும் கலீரென்று சிரித்தபடி



# அபவாதம்

வேங்கடலக்ஷ்மி

பின்னால் ஓடினாள் சோபனா; மங்களமும் அவள் சிரிப்பில் கலந்து கொண்டாள். மீண்டும் ஜன்னலருகில் போய் நின்று பார்வையை வெளியே செலுத்தினாள். வாசலில் வந்து நின்ற ஒரு குதிரை வண்டியில் அவள் பார்வை லயித்தது. அடுத்த விநாடி அவள் கண்கள் நிலைகுத்தி நின்றன. உடம்பில் சொல்ல முடியாத ஒரு பரபரப்பு உண்டாயிற்று. வேகமாக அடுக்களைக்குள் ஓடினாள்.

"பாட்டி, பாட்டி! சீக்கிரம் போய்க் கதவைத் திற. சோபனாவின் அப்பாவும் என் மைத்துனர் கோபுவும் வந்திருக்கிறார்கள்!"

தயிர்ச் சட்டியில் மத்தைச் சாட்டிக் கடைந்து கொண்டிருந்த பாட்டியின் கண்களில் ஒரு பிரகாசம் உண்டாயிற்று; மத்தை அப்படியே விட்டு விட்டு விசுக்கென்று எழுந்தாள்;

''மங்களம், நிஜமாகவா சொல்லுகிறாய்? நன்றாய்ப் பார்த்தாயோ?—அவர்கள்தானா?'' என்று கேட்டாள் பாட்டி சந்தேகத்துடன்.

''ஆமாம், பாட்டி! நன்றாய்ப் பார்த்தேன். அவர்களேதான்! சீக்கிரம் போய்க் கதவைத் திற'' என்று அவசரப்படுத்தினாள் மங்களம்.

பாட்டி வேகமாய்ப் போய்த் தாழ்ப்பாளை விலக்கிக் கதவைத் திறந்தாள். முதலில் உள்ளே நுழைந்தான் துரைசாமி. அவன் பின்னாலேயே கையில் ஒரு சிறு பெட்டியுடன் வந்தான் கோபு.

''வாருங்கள், மாப்பிள்ளை!—வா, கோபு!'' என்று வரவேற்று, அவர்களுக்கு வழி விட்டு நகர்ந்து கொண்டாள் பாட்டி.

''சௌக்கியமா பாட்டி! மங்களம் எங்கே? அட, இது யார்? நம்ம சோபனுவா! அடையாளம் தெரியாமல் வளர்ந்து விட்டதே?'' என்றபடி அறை வாசற்படியில் வந்து நின்ற குழந்தையை வாரியெடுத்து அணைத்துக் கொண்டான் துரைசாமி.

வியப்பினால் அகன்ற விழிகளுடன் தன் தகப்பனை நோக்கிய குழந்தை அவனை அடையாளம் தெரியாமையினால் அவனுடைய பிடிப்பிலிருந்து திமிறிக்கொண்டு பாட்டியின் பின்னால் ஒளிந்து கொண்டான்.

சமையலறையின் கதவு மூலையில் நின்றபடி தன் கணவனையும் மைத்துனனையும் மாறி மாறிக் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தாள் மங்களம். —அவளுக்கு எல்லாம் குழப்பமாகவும் கலவரமாகவும் இருந்தது. 'இரண்டு வருஷங்களாக ஏன் என்று கூடக் கேட்காமல், போட்ட கடிதங்களை யெல்லாம் பிரித்துக் கூடப் பார்க்காமல், தனக்கே திருப்பி அனுப்பிய கணவன் இப்பொழுது திடீரென்று வரக் காரணமென்ன? முக தரிசனம் பண்ண மாட்டேன் என்று கூறி வீட்டை விட்டுச் சென்ற கோபுவை எங்கு, எப்படி, எவ்வாறு சந்தித்து உடன் அழைத்து வருவானேன்? என்ன உத்தேசத்துடன் இருவரும் வந்திருக்கிறார்கள்?' என்று பலவாறாக யோசித்துத் தவித்தாள்.

பாட்டி பரபரவென்று உள்ளே வந்தாள்.

''மங்களம்! சட்டென்று காப்பியைக் கலந்து எடுத்துக் கொண்டு போ;— இந்தா பட்சணம்!'' என்று இரண்டு தட்டுகளில் முதல் நாள் செய்து வைத்திருந்த பட்சணங்களையும் நிரப்பி எடுத்து வைத்தாள்.

கரி அடுப்பை விசிறிப் பாலைக் காய்ச்சிக் காப்பியைக் கலந்த மங்களம், ''பாட்டி! நீயே கொண்டு போய்க் கொடு. எனக்குப் பயமாயிருக்கிறது'' என்றாள்.

பாட்டி நல்ல அநுபவமுள்ளவள் அல்லவா? கூடத்துப் பக்கம் எட்டிப் பார்த்தாள். கோபாலசாமி மட்டும் ஊஞ்சலில் உட்கார்ந்திருந்தான். துரைசாமியை அங்கே காணவில்லை. சட்டென்று திரும்பிப் பேத்தியைப் பார்த்து, ''மங்களம்! மாப்பிள்ளை மாடிக்குப் போய் விட்டார் போலிருக்கிறது. காப்பியை அவருக்கு அங்கேயே கொண்டு போய்க் கொடுத்து விடு'' என்றபடி காப்பித் தம்ளரையும் பட்சணத் தட்டையும் அவள் கையில் திணித்து, அவளைக் கழுத்தைப்பிடித்துத் தள்ளாக் குறையாக மாடிப்படி வரையில் கொண்டு போய் விட்டுவிட்டு வந்தாள்.

பிறகு கோபுவுக்குக் காப்பி, பலகாரம் கொடுத்து உபசரித்து அவனுடன் பேச்சு கொடுக்கலானாள்.

* * *

''மங்களம்!..என்னை மன்னிப்பாயா?'' என்று கெஞ்சினான் துரைசாமி.

கையிலே கொண்டு வந்தவைகளை யெல்லாம் மேஜைமேல் வைத்து விட்டு அவனை ஏறெடுத்துப் பார்க்கக்கூடத் தைரியமில்லாமல் தலைகுனிந்து நின்று கொண்டிருந்தாள் அப் பேதைப் பெண்.

''மங்களம்! உண்மையைச் சொல்லுகிறேன். சொர்ணம் அத்தையின் பேச்சைக் கேட்டு முட்டாளாகப் போய் உன்னை ரொம்பவும் மனம் நோகச் செய்து விட்டேன். கோபுவின் விஷயத்திலும் ரொம்பவும் அநியாயம் செய்து விட்டேன். தன்னுடைய பெண்ணை மறுத்து விட்டு உன்னை நான் கல்யாணம் செய்து கொண்டதற்காக அவள் இப்படி என்னைப் பழி வாங்கி யிருக்கிறாள்..''

பலபலவென்று பொங்கும் கண்ணீருடன் கூடிய தன்னுடைய விழிகளை மலர்த்தி அவனைப் பார்த்தாள் மங்களம். அவளுடைய கரங்களை ஆவலுடன் பற்றித் தன்னருகே உட்கார வைத்துக் கொண்டான் துரைசாமி.

''மீனாட்சி சித்தியைப் போன வாரம் காசியில் சந்தித்தேன். கோபு உனக்கு வாங்கிய பட்டுப் புடவையை அவள்தான் கடையில் பொறுக்கி வாங்கினாளாம். 'அண்ணாவிடம் சொல்ல வேண்டாம். பாவம், மன்னியிடம் ஒரு நல்ல புடவைகூட இல்லை. கிராமத்தில் அவளுடைய பிறந்தகத்து மனிதர்கள் வீட்டில் விசேஷம். நல்ல புடவை யில்லாமையினால் போகத் தயக்கம் அவளுக்கு. மாசமாசம் கொஞ்சம் கொஞ்சமாகப் பணம் கொடுத்து விடுகிறேன். சித்தி! அண்ணாவிடம் இப்பொழுது இதைப்பற்றிச் சொன்னால், 'இருக்கிற செலவு போதும். கடனாக இப்பொழுது புடவை வேண்டாம்' என்று சொல்லி விடுவான். பணம் எல்லாம் கொடுத்தான பிறகு மெதுவாக அண்ணாவிடம் சொல்லிக் கொள்ளுகிறேன்' என்றானாம். சித்தி இதைச் சொர்ணம் அத்தையிடம் கூறினாளாம். அத்தை உடனே அதற்குக் காது மூக்கெல்லாம் ஒட்ட வைத்து அதை அப்படியே என்னிடம் ஒப்புவித்து விட்டாள். நானும் யோசனை செய்யாமல் நம்பி விட்டேன். சித்தியைத் தற்செயலாகச் சந்தித்திரா விட்டால் இன்று வரையில் எனக்கு ஒன்றும் தெரிந்திராது. என்னை மன்னித்துவிடு, மங்களம்!'' என்று மனப்பூர்வமான பச்சாத்தாபத்துடன் கேட்டுக் கொண்டான்.

* * *

கீழே கோபுவிடம் பேசிக் கொண்டிருந்த பாட்டியின் மனமெல்லாம் மாடியிலேயே இருந்தது. கோபு எப்பொழுதும் போல் கலகலவென்று பேசிச் சிரித்துக் கொண்டிருந்தான். சோபனுவை மெல்ல மெல்லத் தாஜா பண்ணித் தன்னிடம் உட்கார வைத்துக் கொண்டான். குழந்தை பயம் தெளிந்து அவனிடம் மழலையாய்ப் பொழிந்தாள்.



சென்னை தியாகராய நகரிலுள்ள தருமபுர ஆதீன சமயப் பிரசார நிலையத்தில் டிசம்பர் மாதம் 31ல் திருவெம்பாவை — திருப்பாவை மகாநாடு ஆரம்பமாயிற்று. இந்த மகாநாட்டை ஆரம்பித்து வைத்துத் திரு முத்துராமலிங்கத் தேவர் பேசுகிறார். திரு ஏ. ஜி. வெங்கடாச்சாரியார் மகாநாட்டுக்குத் தலைமை வகித்தார். தருமபுரம் ஆதீனம் சென்னை மடத்துத் தலைவர் திருப்பெருந்திரு சோமசுந்தரத் தம்பிரான் அமர்ந்திருப்பதையும் படத்தில் காணலாம்.

மாடிப்படியில் கலகலவெனச் சிரிப்பொலி கேட்டது. மலர்ந்த முகத்துடன் இறங்கி வந்தாள் மங்களம். அவளைத் தொடர்ந்து இறங்கினான் துரைசாமி.

''வா, கோபு! சௌக்கியமா?'' என்று சகஜமாக அவனை விசாரித்தாள் மங்களம்.

கோபுவின் முகத்தில் குறும்பு துள்ளியது. பெட்டியிலிருந்து புடவையையெடுத்து, ''இந்தா மன்னி! முதலில் உன் புடவையையெடுத்து வைத்துக் கொள். என் பெட்டியில் இரண்டு வருஷங்களாக அது தூங்கியது போதும்'' என்று கூறிவிட்டு இருவரையும் மாறிமாறிப் பார்த்தான். துரைசாமியின் முகத்தில் அசடு வழிந்தது. சட்டென்று தன்னைச் சமாளித்துக் கொண்டான்.

''மங்களம், போய் அதை உடுத்திக் கொண்டு வந்து பாட்டிக்கு நமஸ்காரம் பண்ணு'' என்றான் துரைசாமி. சிவந்த முகத்துடன் புடவையைக் கையில் வாங்கிக் கொண்டு உள்ளே போனாள் மங்களம்.

அன்றிரவு தனியாயிருக்கையில் கணவனிடம் பேச்சுக் கொடுத்து எல்லா விவரங்களையும் தெரிந்து கொண்டாள் மங்களம். இது தான் நடந்த விஷயம்:

துரைசாமியின் அத்தையான சொர்ணம் தன்னுடைய பெண்ணை அவனுக்குக் கல்யாணம் செய்து கொடுக்க எண்ணியிருந்தாள். ஆனால் அவள் எதிர்பார்த்தபடி நடக்கவில்லை. எழுதப் படிக்கத் தெரியாத பட்டிக்காட்டுப் பெண் தனக்கு வேண்டாமென்று மறுத்து விட்டான் துரைசாமி. அத்தைக்குக் கோபம் பொங்கியது. பழி வாங்குவதற்குச் சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள்.

துரைசாமி ஆபீஸிலிருந்து வீட்டுக்குப் போவதை எதிர்பார்த்து வாசலில் நின்று கொண்டிருந்தாள் சொர்ணம் அத்தை. அவனைத் தூரத்தில் கண்டதும், ''துரைசாமி! உள்ளே வந்து விட்டுப் போ; ஒரு சமாசாரம் சொல்லணும்'' என்று குழைந்து அழைத்தாள்.

அவனை உட்காரச் சொல்லி விட்டுக் காப்பியுடன் பிரசன்னமான சொர்ணம் அத்தை, ''ஏண்டாப்பா, துரைசாமி! ஊரிலே கண்டபடியெல்லாம் பேசிக் கொண்டிருக்கிறார்களே! மங்களத்தைக் கொஞ்சம் அடக்கி வைக்கப்படாதோ?'' என்று கேட்டாள்.

கையிலிருந்த காப்பியை இரண்டு வாய் குடித்த துரைசாமி, ''என்ன சொல்லுகிறாய், அத்தை?'' என்றான்.

''சொல்லுவதென்ன இருக்கிறது? உன் மனைவியையும் கோபுவையும் பற்றி என்னவெல்லாமோ காதிலே பட்டது. ஆரம்பத்திலேயே நீ அவனுக்கு ரொம்ப இடம் கொடுத்து விட்டாய் போலிருக்கிறது, அசட்டுப் பிள்ளை!'' என்றாள் சொர்ணம் அத்தை.

துரைசாமி சட்டென்று எழுந்தான். அவன் உள்ளம் எரிமலையாய்க் குழம்பி விட்டது.

''இப்பொழுதுதான் நாலு நாட்கள் முன்பு மங்களத்துக்குப் பட்டுப்புடவை வாங்கிக் கொண்டு போனானாம் கோபு. மீனாக்ஷி சொன்னாள். அவசரப்பட்டு ஒன்றும் செய்துவிடாதே அப்பா; அதைத் தீர யோசித்து ஏதாவது செய்'' என்று தன்னுடைய உபதேசங்களுக்கெல்லாம் முத்தாய்ப்பு வைத்தாள்.

குமுறிக் கொந்தளித்த உள்ளம் அவனுடைய புத்தியைக் குழப்பி விட்டது. சந்தேகத் திரை அறிவை மயக்கிவிட்டது. வேகமாய் நடந்து வீட்டையடைந்தான் துரைசாமி.

அவன் கதவைத் திறந்துகொண்டு உள்ளே நுழையும்பொழுது ஊஞ்சலின் மேலிருந்த புடவைப் பொட்டலத்தை யெடுத்துக் கொண்டு மங்களம் வேகமாய்ப் பக்கத்து அறைக்குள் நுழைவதைக் கண்டான். மங்களத்தைப் பற்றியும் கோபுவைப் பற்றியும் ஊரில் பேசிக் கொள்வதாகச் சொர்ணம் அத்தை கூறியது உண்மைதான். இல்லாவிட்டால் கோபு அவளுக்குப் புடவை வாங்குவானேன்? அதை அவள் தனக்குத் தெரியாமல் பெட்டிக்குள் வைப்பானேன்?

மின்னல் வேகத்தில் யோசித்தான். அன்றிரவு வண்டியிலேயே மனைவியையும் ஒரு வயதுக் குழந்தையான சோபனாவையும் கிராமத்திலிருக்கும் பாட்டியிடம் அனுப்பிவிட்டான். மங்களம் கண்ணீருடன் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் ஒரு பதிலும் சொல்லவில்லை. தான் அழைக்கும் பொழுது வந்தால் போதும் என்று மட்டும் கூறி விட்டான். தகராறைத் தீர்த்து வைக்கப் புகுந்த கோபுவிடம், 'நீயும் போய்விடு; என் வீட்டில் இனிமேல் உனக்கும் இடமில்லை' என்று வெட்டிக் கூறி விட்டான். மங்களம் கிராமத்துக்குப் போய்ச் சேர்ந்தாள். கோபுவும் அன்றிரவே கிளம்பி வடக்கே போய்விட்டான்.

மறுதினம் பகல் மங்களம் பரிமாற அண்ணன் தம்பிகள் இருவரும் சிரிப்பும் விளையாட்டுமாய்க் குதூகலத்தோடு சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள்.

''மன்னி, பாயசம் ரொம்பப் பிரமாதம்! இன்னும் கொஞ்சம் விடு'' என்றான் கோபு.

''எனக்கும் கொஞ்சம்'' என்றான் துரைசாமி.

''எனக்கும்'' என்றபடியே தன்னுடைய வெள்ளித் தட்டை நகர்த்தினாள் சோபனா.




# உடன் பிறந்தவர்கள்

"டாக்டர் சார்! இப்போது எப்படித் தோன்றுகிறது?"

"ஒன்றும் சொல்வதற்கில்லை, சார்! இன்றைய இரவு தாண்டி விட்டால் பிறகு பயமில்லை! எதற்கும் ஒரு ஊசி போட்டுப் பார்க்கிறேன்!" என்றார் டாக்டர் மூர்த்தி.

பஞ்சுவின் முகத்தில் ஈயாடவில்லை. இது வரை, 'கல்யாணி எப்படியாவது பிழைத்து விடுவாள்' என்ற நம்பிக்கையுடன் இருந்த அவனை, டாக்டரின் பதில் உலுக்கி விட்டது.

"சார்! இன்று இரவு நீங்கள் இங்கேயே தங்கி விடுங்களேன், சார்!" பஞ்சுவின் குரலில் உயிரே இல்லை.

"நான் இங்கேயே தங்கி என்னசெய்துவிடப் போகிறேன்? என்னால் முடிந்ததை யெல்லாம் செய்து பார்த்து விட்டேன், மிஸ்டர் பஞ்சு! இனி உங்கள் தங்கையைக் கடவுள் காப்பாற்றினால்தான் உண்டு!" என்று சொன்ன டாக்டரின் குரலில் வேதனை நிறைந்திருந்தது.

பாவம்! டாக்டர்மட்டும் என்ன செய்வார்? இந்தப் பத்து நாட்களாக, பஞ்சுவின் தங்கை கல்யாணியின் உயிரை உடலோடு ஒட்ட வைத்து அவளை இன்னும் சில நாட்கள் இந்த உலகத்தில் தங்க வைத்துவிட வேண்டும் என்ற எண்ணத்தோடு எத்தனையோ பாடு பட்டார்! இரவென்றும் பகலென்றும் பாராமல் ஓடி ஓடி வந்து உழைத்தார்!

தமக்குத் தெரிந்த வைத்தியப் புலமை முழுவதையும் பிரயோகித்துப் பார்த்து

விட்டார்! விதம் விதமான மருந்துகளையும் மாத்திரைகளையும் அவள் உடலில் திணித்தார். விலையுயர்ந்த புதுப் புது ஊசி மருந்துகளை அவளுக்குச் செலுத்தி அவர் கைகள் தான் ஓய்ந்தன. என்ன செய்தும் அவள் தேறவில்லை. நாளுக்கு நாள் கல்யாணி தேய்ந்து கொண்டேயிருந்தாள்.

ஒவ்வொரு முறை ஊசி ஏற்றும் பொழுதும் 'இதாவது சற்றுப் பலனளிக்காதா'? இதாவது கொஞ்சம் நம்பிக்கையூட்டாதா?' என்று எதிர்பார்த்து, தாமும் ஏமாந்து பஞ்சுவையும் ஏமாற வைத்து விட்டார் டாக்டர்!

அன்று மாலை இருரென்று கல்யாணியின் நிலைமை படுமோசமாகி விட்டது! ஜுரம் விஷம் போல் வேகமாக ஏறி மூன்று மணி நேரமாக அவளைத் தீய்த்துக் கொண்டிருந்தது. கல்யாணி ஒரேயடியாகக் கருகிச் சுருங்கிப் போய் விட்டாள்.

பதினைந்து நாட்களுக்கு முன், தந்தச் சிலை போல், ''அண்ணா! அண்ணா!'' என்று சுற்றிச் சுற்றி வந்த பஞ்சுவின் செல்வத் தங்கை, இன்று பார்க்கச் சகிக்காத அத்தனை விகாரமாய்....ஒட்டி உலர்ந்து சருகாய்க் கிடக்கிறாள். கால்கள் ஜில்லிட்டு விட்டன! உயிர்கூட மெதுவாக அவள் இதயத்தை விட்டு நழுவத் தொடங்கி விட்டது.

டாக்டரும் தம் கையை விரித்து விட்டு, கடவுளின் கரங்களைப் பிடித்துக் கொள்ளச் சொல்லி விட்டார்.

தாங்க முடியாத துயரத்தை நெஞ்சில் வைத்து அமுக்கிக் கொண்டே, செத்துக் கொண்டிருக்கும் தன் அருமைத் தங்கையைக் கண் கொட்டாமல் சிறிது நேரம் பார்த்துக் கொண் டிருந்தான் பஞ்சு.

'கல்யாணி இனி பிழைப்பது சந்தேகம்: எந்த விநாடியும் துடித்துக் கொண்டிருக்கும் அவள் உயிர் நின்று விடலாம்!....பிறகு?.. பிறகு....? அவளுக்குப் பதிலாக ஒரு உயிரற்ற உடல்தான்! பிறகு அந்த உடலையும் கொண்டு போய் விடுவார்கள்!'....

இந்த நினைப்பு வந்ததும் அவன் உடல்மீது யாரோ, எங்கிருந்தோ அக்கினித் திராவகத்தை வாரி யடித்தாற் போலிருந்தது.

''ஐயோ! கல்யாணி!'' என்று பயங்கரமாக அலறிக் கொண்டே, அவள் கிடத்தப்பட்டிருக்கும் கட்டிலின் மீது விழுந்து, கட்டிலின் மரச் சட்டத்தில், 'ணங்! ணங்' என்று தன் தலையை மோதிக் கொண்டான் பஞ்சு.

இந்தப் பரிதாபக் காட்சியைப் பார்த்துக்கொண்டிருந்த டாக்டருக்கு ஒன்றுமே புரியவில்லை. தங்கையின் பேரில் இத்தனை அன்பு வைத்திருக்கும் ஒரு அண்ணனை அவர் இதுவரை கண்டதேயில்லை.

ஒரு வாரமாக, பஞ்சு தன் தங்கைக்காகப் பட்டபாடு, தூக்கமின்றி இரவெல்லாம் கண் விழித்து அவளுக்கு அவன் செய்த சிசுருஷைகள், எல்லாவற்றையும் கவனித்துக் கொண்டிருந்த அவருக்குக் கல்யாணியின் உயிர் பிரிந்த பிறகு, பஞ்சு அதிக நேரம் உயிரோடு இருப்பானென்பதே சந்தேகமாயிருந்தது.

எல்லையற்ற இந்தச் சகோதர வாஞ்சையும் ரத்த பாசமும் அவரை ஒரு சிலிர்ப்பு சிலிர்க்க வைத்து விட்டன! இந்த விசித்திர அண்ணனையும், தங்கையையும் இப்படியே விட்டு விட்டுப் போவதா, வேண்டாமா? ஒன்றும் தீர்மானிக்க முடியாமல் அப்படியே மலைத்து நின்று விட்டார் டாக்டர்!

அவருக்கு என்ன தெரியும், பஞ்சுவையும் அவன் தங்கையையும் பற்றி?

சிறு வயதிலேயே தந்தையை இழந்து விட்ட அவர்கள் வளர்ந்த விதம், கல்யாணியைப் பஞ்சு வளர்த்த அழகு: தோளில் தூக்கிக் கொண்டு அவன் குதித்த பெருமை; தெய்வத்தைப் போல் அவளை அவன் கொண்டாடிய சிறப்பு! எல்லாம் எழுத்தில் வடிக்க முடியாத கதை! இதயத்தை நிரப்பும் உருக்கமான காட்சிகள்!

பதினைந்து ஆண்டுகளுக்கு முன்: அப்பொழுது கல்யாணிக்கு ஆறுவயது, பஞ்சு வயதில் பதினொன்றுக்கும், பதினைந்துக்கும் இடையே நடமாடிக் கொண்டிருந்த காலம்!

அவன், தன் அறையில் பரீட்சைக்குப் படித்துக் கொண்டிருப்பான். அவன் கையில் இருக்கும் புத்தகத்தின் பக்கங்களில், எங்கிருந்தோ அழகிய ரிப்பன் கல்லிய ஒரு பின்னலின் நுனி தவழ்ந்து இங்குமங்குமாகக் கோலமிடும்!

அந்தப் பின்னலை ஏந்திக் கொண்டிருக்கும் வெண்ணிறப் பிஞ்சுக் கரத்தின் பட்டுப் போன்ற இரண்டொரு விரல்களும் அவன் கண்களில் படும். கோபமாகத் தலையைப் பின்னுக்குத் திருப்புவான்.

பின்னால் நாற்காலியில் சாய்ந்தவாறே கையில் தன் தலைப் பின்னலை வைத்துச் சுழற்றிக் கொண்டே கன்னங் குழியச் சிரித்துக் கொண்டு நிற்பாள் தங்கை கல்யாணி!

அவ்வளவுதான்! கடுசொல் லுக்காகச் கருகிகூட்டிய அவ



னுடைய வாய் தேனுய்இனிந்துவிடும். பச்சை நரம்புகள் ஓடும் சுருத்துப் போன்ற அவள் கழுத்தைத் தன் முகத்துக்கு நேரே வளைத்துக் கொண்டுகொஞ்ச ஆரம்பித்துவிடுவான் பஞ்சு.

''ஏன் கல்யாணி, இங்கே வந்தாய்?''

''இங்கே வரவே கூடாதா, அண்ணு?''

''யார் வரவே கூடாது என்றூர்கள்? நான் பரீட்சைக்குப் படிக்கிறே னென்று உனக்குத் தெரியுமல்லவா?''

''ஓ!....தெரியும்! அம்மாகூடச் சொல்லி யிருக்கிறுளே!''

''பின்னே! ஏன், நான் படிக்க முடியாமல் புத்தகத்தில் பின்னலைவைத்து மறைக்கிருய்?''

''மறைக்கவில்லே, அண்ணு! இன்றைக்குப் புதிதாய் ரிப்பன் வாங்கிக் கொண்டேன்! அதைக் காட்டலா மென்று தான் வந்தேன்!''

''ஓகோ! ரிப்பன் புதிசா? எப்பொழுது வாங்கினுய்?'' என்று கேட்டான் பஞ்சு.

''இன்று மாலைதான் அம்மா வாங்கிக் கொடுத்தாள்!''

''பேஷ்! ரொம்ப ஜோராய் இருக்கிறதே!'' என்று சொல்லிக் கொண்டே கல்யாணியை அப்படியே வாரி எடுத்து அணைத்துக் கொண்டான்.

இந்தக் காட்சி பஞ்சுவின் மனத்தில் ஓடியதும் மெதுவாகத் தன் கண்களைத் திறந்து சலனமற்றுக் கிடக்கும் கல்யாணியின் வெளிறிப் போயிருக்கும் இன்றைய முகத்தைப் பார்த்தான்.

அவன் வயிற்றில் ஏதோ பிடுங்குவதைப் போலிருந்தது. 'ஐயோ!' என்று மறுபடியும் கண்களை மூடிக் கொண்டான்.

** ** **

அப்பொழுது பஞ்சு கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தான். ஒரு நாள் மாலை, அவன் வீட்டுக் கூடத்தில் அவனும் அவனுடைய நெருங்கிய நண்பன் சேகரும், ஒரே சோபாவில் உட்கார்ந்துகொண்டு ஏதோ பேசிக் கொண்டிருந்தார்கள்.

பள்ளியிலிருந்து அப்பொழுதுதான் வீடு திரும்பிய கல்யாணி, சோபாவின் பின்புறம் வந்து, ''அண்ணு! பாட்டுப் போட்டியில் எனக்குத்தான் முதல் பரிசு!'' என்று கூவிய வண்ணம் பஞ்சுவின் கழுத்தைக் கட்டிக் கொண்டாள்.

அவன் பக்கத்தில் உட்கார்ந்துகொண்டிருந்த சேகரின் தலையில், கல்யாணியின் தோளில் தொங்கிய புத்தகப் பை சற்றுப் பலமாகத் தாக்கி விட்டது.

''சே!'' என்றுன் சேகர்.

கல்யாணியைப் பார்த்துச் சேகர், 'சே' என்று சொன்னதும் அடக்க முடியாத ஆத்திரம் வந்து விட்டது பஞ்சுவுக்கு.

''யாரையடா, 'சே' என்று சொன்னுய்?'' என்று ஆவேசத்துடன் எழுந்து சேகரின் கன்னத்தில் ஓங்கி ஒரு அறை வைத்து விட்டான் பஞ்சு!

சேகருக்கு ஒன்றுமே விளங்கவில்லே. 'எதற்காகத் தன் நண்பன் இப்படித் திடீரென்று தாக்கினுன்?' என்று தெரிந்து கொள்ள இயலாமல் வெல வெலத்து விட்டான்.

அண்ணுவின் இந்த ஆவேசத்தைக் கண்ட கல்யாணி, நிலைகுலைந்து நின்று விட்டாள். தன்னை ஒரு வார்த்தை சொன்னதற்காக இப்படித் தன் நண்பனையே கை நீட்டி அடிக்கும் அளவுக்கு வளர்ந்து விட்டிருக்கும் தன் சகோதரனின் அன்பின் வலிமையைக் கண்டு, பிரமித்துப் போய் விட்டாள்.

பயமும் சந்தோஷமுமாக அன்று அவளை ஆட்டி வைத்து விட்டது, அவளுடைய அண்ணன் பஞ்சுவின் பயங்கர அன்பு.

மறுவிநாடி அவன் இரு கைகளையும் சேர்த்துத் தன் முகத்தில் வைத்துக் கொண்டு தேம்பித் தேம்பி அழுதாள் கல்யாணி!

இந்த காட்சியைப் பார்த்துக்கொண்டிருந்த சேகரின் கண்களிலும் நீர் கசிந்தது.

பிறகு, இதே சேகர்தான் கல்யாணியின் கணவனுகப் போகிறுன் என்று யாருமே அன்று அறிந்திருக்க வில்லை!

படிப்போடும், பாட்டோடும் செல்வமாக வளர்ந்தாள் கல்யாணி! பாவாடை ஜாக்கட்டோடு திரிந்து கொண்டிருந்தவள் தாவணி அணியத் தொடங்கினுள்.

தங்கையின் வளர்ச்சியைக் கண்டு பஞ்சுவுக்குப் பெருமை பிடிபட வில்லை யென்றாலும், மனத்தின் ஒரு மூலையில், இந்த வளர்ச்சி, அவளை, அவனை விட்டுக் கொஞ்சம் கொஞ்சமாகப் பிரித்துக் கொண்டே போவதைக் கண்டு, ஒரு வேதனை தோன்றி அரிக்கத் தொடங்கி விட்டது.

இன்னும் சில நாட்களில் கல்யாணி மங்கையாகி விடுவாள். பிறகு! அவளை ஒருவனுக்குக் கொடுத்துவிட வேண்டும்! அவன் எப்படிப்பட்டவனுக இருப்பானே?

பஞ்சுவின் கண்கள் மறுபடியும் திறந்து கொண்டன. செத்துக் கொண்டிருக்கும் தன் தங்கையின் தேய்ந்து போன உடலைக் கவனித்தான்.

'அந்தத் தளதளப்பும், அழகும் இப்பொழுது எங்கே போய் விட்டன? பார்த்துப் பார்த்துப் பரவசமடைந்த பாழும் கண்கள், தன் பார்வையினுலேயே அந்த அழகை எரித்துச் சுருக்கி விட்டதா? அல்லது சிறுகச் சிறுகச் சௌந்தர்யத்தை அளித்துக் கொண்டிருந்த அந்தக் 'காலமே' மறுபடியும் அதைக் கொஞ்சம் கொஞ்சமாக அவளிடமிருந்து பறித்துக் கொண்டு விட்டதா?

** ** **

மறுபடியும் கடந்து போன நிகழ்ச்சிகளில் மனத்தைப் பதிய விட்டான் பஞ்சு.

அன்று கல்யாணிக்குத் திருமணம். மண மாலை ஆடும் கழுத்தோடு அவளும் அவள் கணவன் சேகரும், அவன் நிற்கு மிடத்துக்கு வந்து அவனுக்கு வணங்கினுர்கள்.

''என்னடா! பஞ்சு! மரம் மாதிரி நிற்கிறுய்? குழந்தைகள் நமஸ்காரம் செய்கின்றன. நீ ஒன்றும் சொல்லாமல் இப்படி நிற்கிறுயே?'' என்றுள் அவன் தாயார்.

பஞ்சு திடுக்கிட்டான். இதுவரை தான் இதைப் போன்ற ஒரு மரியாதைக்குப் பாத்திரமானவன் என்று நினைத்தவனே யல்ல! திடீரென்று கல்யாணியும் அவள் கணவனும் அவன் கால்களில் விழுந்து எழுந்ததும் வெட்கம் அவனைப் பிடுங்கித் தின்றது.

அதன் பிறகு ஒரு நாள்!

கல்யாணி புருஷன் வீடு செல்ல வேண்டிய தினம் அது. வாசலில் வாடகைக் கார்

எல்லோருக்கும் தெரியும்—



## உயர்ந்த ரக கடிகாரங்கள்

ஸ்விஸ் தயாரிப்பு. 5 வருஷம் உத்திரவாதம். ஒரே சமயத்தில் ஏதாவது இரண்டு கடிகாரங்கள் ஆர்டருக்கு ஒரு பாக்கெட் கடிகாரமும் மூன்று கடிகாரங்கள் ஆர்டருக்கு ஒரு கடிகாரமும் இனாம்



ஜென்ட்ஸ் மாடல் 7½" நெ. 55 அல்லது 56

கோல்டன் 5 ஜுவல்ஸ் ரூ. 32/- 15 ஜுவல்ஸ் ரூ. 40/- ரோல்டு கோல்டு ரூ. 42/- 17 ஜுவல்ஸ் ஜெர்மன் 20 மைக்ரோன் ரோல்டு கோல்டு ஷாக்புரூப் ரூ. 55/-



ஜென்ட்ஸ் மாடல் நெ. 757

குரோமியம் ரூ. 22/- சென்டர் செகண்ட் ரூ. 25/- 15 ஜுவல்ஸ் ரூ. 34/- வாட்டர்புரூப் குரோமியம் ஸ்டீல் ரூ. 46/- ஆல் புரூப் 17 ஜுவல்ஸ் ரூ. 45/- 21 ஜுவல்ஸ் ரூ. 60/-



ஜென்ட்ஸ் 8½" மாடல் நெ. 755

குரோமியம் ரூ. 25/- கோல்டு 15 ஜுவல்ஸ் ரூ. 34/- வாட்டர் புரூப் குரோம் ஸ்டீல் ரூ. 43/- ஆல்புரூப் 17 ஜுவல்ஸ் ரூ. 48/- ஜெர்மன் 21 ஜுவல்ஸ் ரூ. 60/-



ஜென்ட்ஸ் 8½" மாடல் நெ. 758

குரோமியம் ரூ. 24/- கோல்டு 15 ஜுவல்ஸ் ரூ 35/- வாட்டர் புரூப் குரோம் ஸ்டீல் ரூ. 46/- 17 ஜுவல்ஸ் ஆல் புரூப் ரூ. 50/- ஜெர்மன் 21 ஜுவல்ஸ் ரூ. 64/-

**AJANTA WATCH CO.,**
AGRA ROAD - - BOMBAY-40
Nazirabad, Lucknow (Phone: 5767)



# அக்கொடிய இருமலை நிறுத்த

# பெப்ஸ்

## உபயோகியுங்கள்

இருமல், ஜலதோஷம், தொண்டைப் புண், பிராங்கைடிஸ், இன்ப்ளுயன்ஸா, மற்றும் இதர தொண்டை, மார்பு உபாதைகள், ஹிருதயத்தையும், சுவாசப்பைகளையும் அபாயத்திற்குள்ளாக்குகின்றன. இவற்றிற்கு பெப்ஸ் உட்கொண்டு உடனே நிவாரணம் பெறுங்கள். பெப்ஸிலிருள்ள குணமளிக்கும் மருந்து சத்துகள் இருமலை நிறுத்தி, ரணத்தை ஆற்றுகின்றன. மேலும் இவைகள் எரிச்சலுக்கு ஹிதமளிப்பதுடன், தீங்கிழைக்கும் கிருமிகளை நாசம் செய்கின்றன. குழந்தைகளும் வயோதிகர்களும் உபயோகிக்கலாம். தீங்கு விளைவிக்கும் மருந்துகள் இதில் இல்லை.

# PEPS



பெப்ஸ் தொண்டை, மார்பு உபாதைகளுக்கு சமனமூட்டும் வில்லைகள்.

FPY-39-TAM

சோல் ஏஜன்டுகள்:

**தாதா அண்டு கம்பெனி**

86, கொனியப்ப நாயக் தெரு, சென்னை-3

வந்து நின்று விட்டது. சாமான்கள் காரில் ஏற்றப்பட்டு விட்டன. கல்யாணி, தன் தாயாரிடம் சொல்லிக் கொண்டு பஞ்சு இருக்கும் அறைக்கு விடை பெற வந்தாள்.

வரும்பொழுதே அழுகையைக் கொண்டு வந்தாளோ? அல்லது ஏற்கெனவே பஞ்சு அழுது கொண்டிருந்தானோ? அங்கு இருவரும் ஒருவருக்குத் தெரியாமல் ஒருவர், கண்ணீரை மறைக்கப் பெரும்பாடு பட்டுக் கொண்டிருந்தார்கள்.

"போய் விட்டு. . வருகிறேன். . . அண்ணா!" என்று திக்கித் திக்கிச் சொல்லி முடித்தாள் கல்யாணி. அவளால் அந்த மூன்று வார்த்தைகளையும் சேர்த்துச் சொல்ல முடியவில்லை.

ஆசைக் கணவனுடன் தனிக் குடித்தனம் செய்யப் போகிறோம் என்ற மகிழ்ச்சியைக் கூட மீறி, சகோதர வாஞ்சை, அழுகையைக் கொணர்ந்து விட்டது.

பஞ்சு பதில் கூறவில்லை. "போய்வாம்மா!" என்று ஒரே வார்த்தையில் அவளுக்கு விடை கொடுத்து அனுப்பி விடவேண்டும் என்று அவள் அங்கு வருவதற்கு முன்பே தீர்மானித்து வைத்திருந்தான்: இரண்டு மூன்று தடவை, "போய் வாம்மா! போய் வாம்மா!" என்று கூடத் தனக்குத்தானே சொல்லிப் பழக்கிக் கொண்டிருந்தான்.

ஆனால்! . . அவளை நேரில் கண்டதும் அவனுடைய உறுதி நெகிழ்ந்துவிட்டது.

'அவசரப்பட்டுக் கல்யாணிக்குத் திருமணம் செய்து வைத்து விட்டோமே' என்று அங்கலாய்த்தது அவன் மனம்.

"ஏன் கலியாணம் செய்து கொண்டோம்?" என்று வருந்தியது கல்யாணியின் உள்ளம்.

ஒருவரை யொருவர் பிரிவது எத்தனை வேதனை அளிக்கும் என்பதை அன்றுதான் அவர்கள் உணர்ந்து கொண்டார்கள்.

கடைசியில் சேகர் பி. இ. கல்யாணியுடன் தில்லிக்குப் பயணமானான். மத்திய சர்க்காரில் அவனுக்கு ஒரு நல்ல உத்தியோகம் கிடைத்திருந்தது.

அதன் பிறகு பல நாட்கள் பஞ்சு, சோறும் தண்ணீரும் இல்லாமல் என்னவோ போல் இருந்தான்! தங்கையின் பிரிவு அவனை வெகுவாகப் பாதித்து விட்டதைக் கண்ட அவன் தாயாருக்கும் மனத்தை என்னவோ செய்தது.

ஆனால்? எல்லாம் ஆறு மாதம்தான்.

ரஷ்யாவுக்குத் தொழில் நுட்பப் பயிற்சி பெற்று வர மத்திய சர்க்கார் அனுப்பிய இன்ஜினீயர்கள் கோஷ்டியில் சேகர் பி. இ. யையும் சேர்த்திருந்தார்கள்.



"கல்யாணி! நீ வந்த அதிருஷ்டம்தான்! எனக்கு இந்தமாதிரி ஒரு நல்ல வாய்ப்பும், கௌரவமும், கிடைத்திருக்கின்றன" என்று கூறிச் சென்ற சேகர் திரும்பவேயில்லை.

"அறுபது நாட்களில் திரும்பிவிடுகிறேன்!" என்று விடை பெற்றுக் கொண்டு விமானம் ஏறியவன், என்னவோ அறுபது நிமிடம் கூட உயிரோடு இருக்க முடியவில்லை.

அவன் சென்ற விமானம் இன்ஜின் கோளாறு காரணமாய்த் திடீரென்று தீப் பிடித்து, முப்பது இளம் இன்ஜினீயர்களான பாரத ரத்தினங்களையும் ஒரேயடியாகப் பொசுக்கி விட்டுத் தானும் வெந்து வெடித்து விழுந்து விட்டது.

எழவு ஓலைகளும், அநுதாப ஓலங்களும் சம்பந்தப் பட்டவர்களுக்குத் தந்திகளாய்ப் பறந்தன.

கல்யாணியின் சோக நிலையை வர்ணிப்பதென்பது முடியாத காரியம்: எல்லாம் முடிந்துவிட்டது!

சென்னையில் பழைய படி பஞ்சுவும் கல்யாணியும் சேர்ந்திருந்தார்கள்: மகளின் கதி இப்படியாகி விட்டதே என்ற ஏக்கத்தில் படுத்த தாயார் பிறகு எழுந்திருக்கவே யில்லை.

உயிரை விடுமுன், பஞ்சுவை அழைத்து, "பஞ்சு! என்றைக்கும் கல்யாணியின் கண்கள் கலங்கும்படியாகச் செய்து விடாதே!" என்று வேண்டியபடி தலையைச் சாய்த்தாள்.

"அம்மா! நான் என்றைக்கும் அவள் கண்கலங்கும்படி விடமாட்டேன்; நீதானம்மா எங்கள் இருவர் கண்களையும் கலங்க வைத்து விட்டுப் போகிறாய்!" என்று கதறினான் பஞ்சு.

அழுகையையும், ஆறாத் துயரத்தையும் ஒத்திக் கொண்டு நாட்கள் ஒன்றன் பின் ஒன்றாக மறைந்தன!

எதிர் வீட்டு இந்திராவும், அவளுடைய அண்ணன் சோமுவும், அவர்கள் வாழ்க்கையில் குறுக்கிட்டிருக்கா விட்டால், இந்நேரம் அண்ணனும் தங்கையும் அழுதே மாய்ந்து போயிருப்பார்கள்.

இந்திராவின் நட்பு, கல்யாணிக்கு மருந்தாக இருந்தது. அவளுடைய சிரிப்பும், பேச்சும் கல்யாணியின் இதயத்தை வேதனைக் கொதிப்பிலிருந்து மீட்டு, ஆதரவுடன் நீவி விட்டுக் கொண்டிருந்தன.

அடிக்கடி இந்திரா அவர்கள் வீட்டுக்கு வந்து போய்க் கொண்டிருந்தாள். அவளுடைய வருகையால் படிப்படியாக வீடு களை கட்டத் தொடங்கி விட்டது.

எப்பொழுதும் தலையைக் கவிழ்ந்தபடியே நடந்து கொண்டிருந்த பஞ்சு, சற்று நிமிர்ந்து

நடக்கலானுன். இந்திராவின் அழகும் குறு குறுத்த செய்கைகளும் அவன் கண்களுக்கு இதமாக இருந்தன. அவனுடைய அண்ணன் சோமுவின் உற்சாகமூட்டும் சொற்களும் கபடமற்ற சிரிப்பும், சிறிதுதென்பையூட்டின.

தானுக உயிர் போகும் வரையில் உலகத்தில் வாழ்ந்து வருவது என்று தீர்மானித்துக் கொண்டான் பஞ்சு.

ஆனல்? அழியாத ஏன்? அழிக்கவே முடியாத ஒரு குறையும் அவன் மனத்தில் இருந்து கொண்டுதான் இருந்தது! தன் அருமைத் தங்கையின் வாழ்வு இப்படி அவலமாகி விட்டதே என்று எண்ணும்பொழுதெல்லாம் அப்படியே அவன் இடிந்து போய் விடுவான்.

**மா**தங்கள் மறைந்தன!

சில நாட்களாகப் பஞ்சுவின் மனத்தில் ஒரு புது எண்ணம் தோன்றி வளர்ந்து கொண்டிருந்தது. அதற்கு அநுசரணையாகத்தாலிருந்தது கல்யாணியும், எதிர்வீட்டுச் சோமுவும், நெருங்கிப் பழகியவிதம். இருந்தாலும் எதையும் நிச்சயமாகத் தீர்மானிக்க முடியாத நிலையில் இருந்தான் பஞ்சு. எப்படியாவது கல்யாணிக்கு வாழ்வை மீட்டுத் தந்துவிட வேண்டும் என்ற ஆசை அவனுக்கு!

இப்படியே இன்னும் சில மாதங்கள் கழிந்தன. ஆனல் யாரிடம் தன் எண்ணத்துக்கு எதிர்ப்பை எதிர்பார்த்தானே, அவர்கள் தாங்களே வலியச் சம்மதமளித்து விட்டார்கள். இது அவனுக்கு ஒரு பெரிய வெற்றி தான். சோமுவின் பெற்றேர்கள் உறவினர்கள் எல்லாரும் இசைந்து விட்டார்கள். சோமுவும் தயாராக இருந்தான். ஆனல் கல்யாணிதான் ஏமாற்றி விட்டாள்.

சமூகத்துக்குப் பயந்தோ சாத்திரத்துக்கு அஞ்சியோ மறுமணத்துக்கு அவள் இசைந்து கொடுக்கவில்லை என்பதல்ல.

இந்த நாளில், இதைப் போன்ற செய்கைகளுக்கு நல்ல வரவேற்பு இருக்கிறதே தவிர, எதிர்ப்பவர் அரிதல்லவா?

இப்படி எல்லாரும் அவனுடைய மறு விவாகத்துக்கு ஆதரவு கொடுத்தும் அவள் அதற்கு இணங்காததற்குக் காரணம்?

"சோமுவை உனக்குப் பிடிக்கவில்லையா, கல்யாணி?"

"அவர் தங்கமானவராயிற்றே. எனக்குப் பிடிக்காமலென்ன?"

"பின் ஏன் மறுக்கிருய்?"

"எனக்கு மறுபடியும் கல்யாணம் செய்து கொள்ள வேண்டுமென்று தோன்றவில்லை!"

"நீ யாருக்கோ, எதற்காகவோ பயப்படுகிருய்—அதனல்தான்....!"

"அண்ணு! நீ இருக்கும்பொழுது நான் யாருக்குப் பயப்படப் போகிறேன்?"

"நீ சொல்வது விளங்கவில்லையே?"

"மனச்சாட்சி இடம் தரவில்லை! அதனல் மறுமணம் வேண்டாமென்கிறேன்!"

கல்யாணியின் இந்த வார்த்தைகள் கரீரென்று தைத்தன! பஞ்சுவின் உச்சி மண்டையில் ஓங்கி அடித்தாற்போலிருந்தது தங்கையின் உணர்ச்சிமிக்க இந்த வாதம்! அதன் பிறகு பஞ்சு வாயைத் திறக்கவில்லை.

**இ**ந்தச் சம்பவத்துக்குப் பிறகு, பஞ்சுவின் கண்களுக்கு, கல்யாணி, ஒரு அருமைத் தங்கையாக மட்டும் தோன்ருமல், ஆனும் தெய்வமாகவே காட்சியளித்தாள்.

ஆனல்! கல்யாணியை, இப்படிப் படுக்கையில் கிடத்திய நிகழ்ச்சி வேறு ஒன்று!

பத்து நாட்களுக்கு முன்: ஒரு நாள் இரவு, பஞ்சுவும் சோமுவும் மாடியில் பேசிக் கொண்டிருந்தார்கள். ஏதோ வேலையாக மாடிக்குச் செல்ல விரும்பிய கல்யாணி, பாதிப் படிகளைக் கடந்ததும், மேலே செல்ல முடியாமல் நிற்க வேண்டியதாகி விட்டது. அப்படி அவளை நிற்கவைத்த உரையாடல் இதுதான்:—

"என்ன பஞ்சு! நீ இப்படியே இருந்தால், உன் வாழ்க்கை என்ன ஆவது"?"

"என் வாழ்க்கையையும், என் தங்கையின் வாழ்க்கையையும், தனித்தனியாகப் பிரித்துப் பார்க்க முடியவில்லையே, சோமு!"

"நீ பிரித்துப் பார்க்க விரும்பா விட்டாலும், சிந்தித்துப் பார்த்தால், எத்தனையோ வகைகளில் அது பிரிந்துதானே இருக்கிறது?"

"எது எப்படியிருந்தாலும், இந்த ஜன்மத்தில் எனக்கு அது வேண்டாம், அப்பா!"

"ஏன் அப்படிச் சொல்கிருய்?"

"அதற்கு நான் கொடுத்து வைக்கவில்லை!"

"கல்யாணிக்குப் பிடிக்காது என்கிருயா?"

"அவள் பத்தரை மாற்றுத் தங்கம்! அண்ணன் திருமணத்தை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டுதான் இருக்கிருள்!"

"உன் மறுப்புக்குக் காரணம்?"

"நான் சொல்வது உனக்குப்புரியவில்லையே, சோமு! வாழ்க்கையை நன்ருகச் சுவைக்க வேண்டிய பருவத்தில் கல்யாணி வாடிக் கருகிக் கொண்டிருக்கிருள். நான் அவள் எதிரிலேயே, ஒரு பெண்ணிடம், ஆசை வார்த்தைகள் பேசிக் கொஞ்சிக் குலாவுவதா? என்னல் முடியாதப்பா சோமு! முடியாது!"

"உன் தங்கையின் வாழ்வுக்காக உன் வாழ்வைத் தியாகம் செய்யத் துணிந்து விட்டாய் போலிருக்கிறது?"

"தியாகமோ, எதுவோ? நான் கல்யாணம் செய்து கொள்ள முடியாத நிலையில் இருக்கிறேன். அவ்வளவுதான்!"

"இந்திராவைப் பிடிக்கவில்லையா உனக்கு?"

"நான் குருடனல்ல, அவளை வெறுத்து விடுவதற்கு!"

"அதற்குச் சொல்லவில்லையப்பா! இந்திரா என் தங்கை. உனக்கு உன் சகோதரியின் பேரில் இருக்கும் அத்தனை பாசம் எனக்கு என் தங்கையின்பேரில் இல்லா விட்டாலும், தினமும் அவள் கண்ணீர் விட்டுக் கொண்டிருப்பதை என்னல் பார்த்துக் கொண்டிருக்க முடியவில்லை, பஞ்சு!"

"அதற்கு என்னை என்ன செய்யச் சொல்கிருய், சோமு?"

"இந்திரா உன்னைத் தவிர வேறு எவரையாவது மணப்பதாக இருந்தால் எனக்கு இத்தனை கஷ்டம் இல்லை. இந்த இரண்டு ஆண்டுகளாக உன்னைத்தான் மணப்பேனென்று தவமிருந்து தொலைக்கிருளே, பஞ்சு!"

"நான் மட்டும் வேறு யாரைக்காதலித்து விட்டேன்? என் தங்கை மறுமணத்துக்குச் சம்மதித்திருந்தால் இந்நேரம் இந்திரா உங்கள் வீட்டிலா இருப்பாள்?"

இதற்குமேல் கல்யாணி அந்த இடத்தில் நிற்கவில்லை. இதுவரை தன் துயரத்தையே

பல ஆண்டு காலமாகச் சென்னை ஜில்லா டெலிபோன் இலாகா மானேஜராக இருந்து மிகச்சிறப்புடன் பணியாற்றி வந்தவர் திரு வி. ராஜகோபால். அவர் காலத்தில் சென்னை நகரில் உள்ள டெலிபோன் எக்ஸ்சேஞ்சு பகுதியில் எத்தனையோ சீர்திருத்தங்கள் செய்யப் பட்டன. இந்தியாவிலேயே சென்னை நகர டெலிபோனுக்குச் சிறந்த மதிப்பை ஏற்படுத்திக் கொடுத்தவர். இவ்வாறு தமது உத்தியோக காலத்தில் சென்னை டெலிபோன் அபிவிருத்திக்காகப் பாடுபட்ட திரு ராஜகோபால் சென்ற 2-1-57 அன்று மேற்படி பதவியிலிருந்து ஓய்வு பெற்றுக் கொண்டார். சென்னை டெலிபோன் இலாகா சிப்பந்திகள் ஜனவரி ஐந்தாந் தேதி உட்லண்ட்ஸ் ஹோட்டலில் திரு ராஜகோபால் அவர்களுக்குப் பிரிவுபசார விருந்து நடத்தி, அவரது சேவையைப் பாராட்டினர். புதிய ஜில்லா டெலிபோன் மானேஜர் திரு ரமாகாந்த் இவ் வைபவத்துக்குத் தலைமை வகித்துச் சிறப்பித்தார்.



பெரிதாக நினைத்துக்கொண்டு தன் அண்ணனுக்கு எத்தகைய பெரும் பாதகம் செய்து கொண்டிருக்கிறோம் என்பதை அன்றுதான் முதன் முறையாக உணர்ந்தாள் கல்யாணி.

அந்த உணர்வுதான் அவளை இப்படிக் கிடத்தி விட்டது. 'தான் ஒழிந்தாலன்றி அண்ணனுக்கு வாழ்வு இல்லை!' என்று தன்னைத்தானே மாய்த்துக்கொள்ள முனைந்து விட்டாள் கல்யாணி!

ஆனால்!....அதிலும் அவளுக்கு ஏமாற்றம் தான! தன்னைப் பலி கொடுத்து விட்டு, அண்ணனால் வாழ முடியாது என்பதை இரண்டு நாட்களில் உணர்ந்து கொண்டு விட்டாள். 'இதற்கு என்ன செய்வது? என்ன செய்வது?' இந்த ஏக்கம்தான் அவளை இந்தப் பாடு படுத்தி விட்டது.

இந்த ஏக்கத்துக்கு மாற்று கிடைத்து விட்டால் இப்பொழுதுகூட அவளால் பிழைத்துக் கொண்டு விடமுடியும். ஆமாம்! அவள் உயிர் யார் கையிலும் இல்லை! அவள் கையில் தானிருக்கிறது! இப்பொழுது என்ன செய்யப் போகிறாள்? தானும் பிழைத்து அண்ணனையும் வாழவிடப் போகிறாளா? அல்லது....!

"அண்ணா!" குரல் தொலைதூரத்திலிருந்து கேட்டாற் போலிருந்தது.

பஞ்சு திடுக்கிட்டுக் கண் விழித்தான். கட்டிலில் கவிழ்ந்திருந்த அவன் தலையை யாரோ அன்புடன் கோதுவது போலிருந்தது.

"அண்ணா!"

சந்தேகமில்லை, இது கல்யாணியின் குரல் தான். தலையை நிமிர்த்தினான் பஞ்சு.

சுவர்க் கடிகாரம் ஐந்து மணி அடித்தது!

பயங்கர இரவு கழிந்து விட்டது. டாக்டர் சொன்னபடி 'இன்றைய இரவு தாண்டி விட்டால் கல்யாணி பிழைத்துக் கொள்வாள்' என்றது உண்மை தான் போலிருக்கிறது.

கல்யாணியின் வாய், காய்ந்திருந்த தன் உதடுகளை நனைத்துக் கொண்டது.

"அண்ணா!"

"கல்யாணி!"

"நான் பிழைத்துக் கொண்டு விட்டேன்!"

"என்னை விட்டு, உன்னால் சாக முடியாதே, கல்யாணி!"

"நான் வாழவும் தீர்மானித்து விட்டேன்!"

"என்ன?"

"ஆமாம்! மறுபடியும் கழுத்தில் தாலியைக் கட்டிக் கொள்ளப் போகிறேன்!"

பஞ்சுவின் இதயம் ஒரு நிமிஷம் துடிப்பை மறந்து விட்டது;

அரைத் தூக்கத்திலிருந்து விழித்துக் கொண்ட டாக்டர் வியந்து போனார்.

கல்யாணிக்குத் திடீரென்று ஜுரம் தணிந்தது கூட அவருக்கு அத்தனை ஆச்சரியமாகப் படவில்லை. ஆனால்! அவளுக்கு இத்தனை தெளிவாகப் பேசுவதற்குத் தென்பு பிறந்தது எப்படி என்பதுதான் புதிராக இருந்தது.

**ப**ல மாதங்களுக்குப் பிறகு, சோமுவும்—கல்யாணியும், பஞ்சுவும்—இந்திராவும் சதிபதிகளாய் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள்;

ஆனால்! ஒரே ஒரு விஷயம் இன்னும் ரகசியமாக இருந்து கொண்டிருக்கிறது. அது, சோமுவுக்கும்—கல்யாணிக்கும் மட்டுமே தெரிந்த பவித்திரமான ஒரு உடன்படிக்கை;

திருமணத்தன்று, இரவு!

கட்டழகி கல்யாணியை அடைந்து விட்ட பெருமையில், மட்டற்ற மகிழ்ச்சியுடன், அவளைத் தனியே சந்திக்க வந்த சோமுவின் கால்களில் விழுந்து கல்யாணி சொன்னாள்:

"அண்ணா' உங்களைத் தெய்வமாக நினைத்து வேண்டிக் கொள்கிறேன். என்னை மன்னித்து விடுங்கள். ஊருக்கும், என் அண்ணனுக்கும், நாம் கணவன் மனைவிகள்தான்! ஆனால் அந்தரங்கத்தில் நாமிருவரும் உடன் பிறந்தவர்கள்; சேகருக்குப் பிறகு, வேறு எவரையும் அவருடைய ஸ்தானத்தில்வைத்துக்கொள்ள என்னால் முடியவில்லை. சாக இருந்தவள் மீண்டும் பிழைத்து எழுந்ததற்குக் காரணம் இழந்து விட்ட என் வாழ்க்கை இன்பத்தை மறுபடியும் சுவைக்க நினைத்தல்ல; என்னைப் பிரிந்து வாழத் தெரியாத என் பேதை அண்ணனுக்காகவும் அவனைக் காதலித்துக் கண்ணீரைச் சிந்திக் கொண்டிருந்த உங்கள் அருமைச் சகோதரியின் வாழ்வுக்காகவும்தான்."

இதைக் கேட்டதும் சோமு அடைந்த அதிர்ச்சிக்கு அளவேயில்லை. எதிரில் அன்பே உருவமாக நின்றும் கல்யாணி அவனுக்கும் ஒரு தெய்வமாகவே காட்சி அளித்தாள்.

தேவியின் கடிதம்

# இசையும் நடனமும்

வசுமதி ராமசாமி

அன்புக்குரிய சுஜாதா,

உன் கடிதத்தில் எந்தக் கலை மிகச் சிறந்தது, எதைப் பெண்களுக்குக் கற்பிப்பது சுலபம் என்றெல்லாம் கேட்டிருக்கிறாய்.

நம் நாட்டில் அறுபத்து நான்கு கலைகளிலும் மிகத் தேர்ச்சி பெற்ற மேதைகள் ஒரு காலத்தில் வாழ்ந்திருக்கிறார்கள். குறைந்த சமயத்தில் நவரஸங்களையும் உணர்த்தும் கலைகளைத்தான் நாம் உயர்தரக் கலை என்கிறோம். அவைகளில் மேன்மையானது சங்கீதக் கலைதான். ஆண்டவனின் அருகில் நம்மை இழுத்துச் செல்லும் மகத்தான சக்தி சங்கீதக் கலையில்தான் இருக்கிறது அது மனித இனம் மட்டுமல்ல, சகல ஜீவன்களையும் வசப்படுத்தும் உயர்தரக் கலை. சங்கீதம் மற்ற உணர்ச்சிகளைவிடப் பக்தியைத்தான் தூண்டுகிறது. எனவே, சாரீர வசதி பெற்றிருக்கும் உன் பெண்ணுக்குச் சங்கீதக் கலைச் செல்வத்தைக் கொடுக்கத் தவறாதே. சங்கீதம் என்றென்றும் பாடலாம். ஆத்மார்த்தத்துக்காக, மனம் சாந்தியடைய, துன்பத்தை மறக்க, பிறர் தயவின்றிப் பாடலாம். அவ்வளவுக்கு மேல் நம் நாட்டுச் சங்கீத ரஸிக மகா ஜனங்கள் அபாரமாக இருக்கிறார்கள். எனவே, ஒரு பெண்ணோ, ஆணோ முறையான சங்கீதம் பயின்றால் மற்றவர்கள் சம்பாதிப்பதைவிட அதிகம் சம்பாதிக்கலாம். கலையுலகில் கீர்த்தியுடன் கௌரவமாக வாழலாம் என்பதில் சந்தேகமேயில்லை. அடுத்தபடியாக, சாரீரமின்றி ஞானம் மட்டும் இருந்தால் வாத்தியத்தை நன்றாகச் சொல்லி வைப்பது சிறந்தது. இன்றைய நாட்களில் வாத்தியத்துக்கு வாய்ப்பாட்டுக்குள்ள மதிப்பைவிடச் சற்றுக்குறைவாக இருக்கிறது.

நாட்டியம் உயர்ந்த கலைதான். ஆனால் ராஜசபைகளில் வளர்க்கும் கலைதான் என்பது என்னுடைய தாழ்மையான அபிப்பிராயம். இன்று ஒவ்வொரு குடும்பத்திலும் ஒரு பெண்ணாவது நாட்டியம் கற்றுக் கொள்கிறாள்; குறைந்த சில வருஷங்கள் தான் நாட்டியம் ஆட முடியும். ஆனால் அதற்காக ஆகும் செலவு எல்லோராலும் சமாளிக்கமுடிவதில்லை. ஆடையலங்காரம் நிறைய இருப்பது மட்டுமன்றி, குழந்தைகளும் பார்ப்பதற்கு அழகாக இருந்தால்தான் அக் கலை சோபிக்கிறது. எவ்வளவு தேர்ச்சி பெற்றாலும் நிறைய பக்கவாத்தியங்கள், பிரகாசமான விளக்குகள் இப்படி அநேக உதவிப் பொருள்கள் தேவைப்படுகின்றன. பெற்றோர்களின் உழைப்பும் முக்கியமாக இருக்கிறது. இவ்வளவு வசதி பெற்றவர்கள் தங்கள் குழந்தைகளுக்குச் சொல்லிக் கொடுத்திருந்தால் நம்மைப் போன்ற ரஸிகர்களுக்கு அரிய விருந்துதான். பார்க்கவும் கண்கொள்ளாக் காட்சி. இந்தக் கலைக்குக் குழந்தைகளுடைய ஆரோக்கிய நிலையைப் பற்றிக் கவனிக்கத் தவறக் கூடாது.



சமையல் செய்வதுகூடக் கலைதான். நாம் சமைப்பதைப் பிறர் பார்க்கும் பொழுதே சாப்பிட வேண்டும் என்று நினைக்கும்படி இருக்க வேண்டுமல்லவா? பிறர் கண்ணுக்கு நாம் வேலை செய்வது புஷ்பம் பறிப்பதுபோல் இருக்க வேண்டும். மேலும் ருசியாகவும் சுத்தமாகவும் சமைக்கத் தெரிய வேண்டும்.

அன்று ஒரு சிநேகிதி வீட்டுக்குப் போயிருந்தேன். பாவம், அவளுக்குச் சமையல் வேலை செய்து பழக்கமில்லை. அன்று அவள் சமையல் செய்யும்படி நேர்ந்து விட்டது. ஒரே கறிகாய் நறுக்கின குப்பைகள். பாத்திரங்களை உருட்டிக் கிடக்கும் நிலை. அடுப்பு எரியாமல் ஒரே புகைச்சல். என் சிநேகிதிக்கு அடுப்பை ஊதி ஊதிக் கண்கள் சிவந்திருந்தன. முகத்தில் ஆங்காங்கு கரியைப் பூசிக் கொண்டிருந்தாள். என்னைக் கண்டதும் அவளுக்கு அழுகையே வந்து விட்டது. அநுபவக் குறைவு என்றுதான் சொல்ல வேண்டும். நான் மிகவும் மதிக்கும் ஒரு பெரிய அம்மாள் தம் சமையலறையை மிகவும் நேர்த்தியாக வைத்திருப்பார். இவ்வளவுக்கும் அந்த அம்மாள் கொஞ்சம் வயதானவர். தளர்ந்த உடல் நிலை. ஒருதடவை எங்களில் நான்கு பேர்களைச் சாப்பிட அழைத்திருந்தார். எங்களோடு பேசிக் கொண்டே சமைத்து விட்டார். பரிமாறும் போது விதம் விதமான சாப்பாட்டு வகையறாக்களைப் பார்க்கும் பொழுது நாங்கள் பிரமித்து விட்டோம்.

கலைகளோடு பின்னி வாழ்கிறோம். அப்படியே சிறந்த கலைஞானத்தை நம் குழந்தைகளுக்கும் கற்பிக்க முயற்சி செய்வோம். ஆனால் சுஜாதா, ஒரு எச்சரிக்கை. நாட்டியம் கற்றுக் கொண்ட சில பெண்கள் சாதாரணமாக நடக்கும் பொழுதே ஒரு மாதிரி குதித்துக் குதித்து நடக்கிறார்கள். நாடகம், படக் காட்சி இவைகளில் பேசுவது போல் இயற்கைக் குரலை மாற்றிக் கொண்டு போலிக் குரலுடன் பேசுகிறார்கள். விரும்பத்தகாத இந்த வழக்கம் வராமல் பார்த்துக் கொள்ள வேண்டும்.

இப்படிக்கு,

பூமாதேவி

# கடல் கொண்ட கனவு

## அத்தியாயம் 27

## வலம்புரி வேந்தன்

கடலுக்கு மேலே சூரியன் உதித்து வந்து கொண்டிருந்தான். ஒளியினால் செய்யப்பட்ட இரதம் அசைந்து கொண்டே வான வீதியில் உருள ஆரம்பித்தது. அப்பொழுது சித்திராங்க பூபதி அவனுடைய சிந்தனைக் கனவுகளிலிருந்து எழுந்தான்.

உதயசந்திரனும் துறவிகளும் சித்திராங்க பூபதியின் முடிவான மறுமொழியை எதிர்பார்த்துக் காத்திருந்தார்கள் அல்லவா? சித்திராங்கன் அவர்களை நோக்கி நடந்து வந்தவன் ஒரே மோன லயத்தில் இருந்தான். அவனுடைய முகத்தில் இதுவரை இல்லாத ஒரு பெரிய நிதானமும், சலனமற்ற உறுதியும் பிரகாசித்தன. இதைக் கவனித்த இசைத் துறவி சித்திராங்க பூபதியைப் பார்த்துக் கேட்டார்: "வலம்புரித் தீவின் அரசே! உங்களுடைய ஆழ்ந்த சிந்தனையின் முடிவு என்ன என்பதை நாங்கள் அறிந்து கொள்ளலாமா?"

இந்தக் கேள்வி பூபதியின் செவிகளில் நன்றாக விழுந்தது. ஆனாலும் அவனுடைய முகத்தில் எந்தவிதமான மாறுதலும் உண்டாகவில்லை. நிதானத்தோடு நடந்தான் அவன்!

சித்தன்னவாசல் குகையின் பெரிய துறவி பூபதிக்கு அருகிலே வந்து நின்று கொண்டார். பிறகு கேட்டார்:

"சித்திராங்கா! நாங்களும் உன் அன்னையும் எந்த முடிவுக்காகக் காத்திருக்கிறோமோ, அந்த முடிவை எப்படித் தீர்மானித்திருக்கிறாய் என்று எங்களிடம் சொல்லக் கூடாதா?"



சோமு

இந்தக் கேள்விக்கும் மறுமொழி சொல்லவில்லை சித்திராங்கன். நிலவுப் பாறையிலே மேலும் நிதானத்தோடு நடந்து சென்றான் அவன்! இதைப் பார்த்த உதயசந்திரன் சித்திராங்க பூபதியை வழிமறித்தார் :

''வலம்புரித் தீவின் வேந்தே! சூரியன் உதித்து விட்டான். எனவே இனிமேல் நீங்கள் இளவரசர் இல்லை. இந்தத் தீவின் வேந்தர் நீங்கள்! ஆகையினால் இப்பொழுதே உங்களுடைய முடிவை அறிவித்து விடுங்கள். பிறகு உங்களுடன் அந்தரங்கமாக இம்மாதிரி யெல்லாம் நாங்கள் பேசுவதே முடியாத காரியம்!''

உதயசந்திரன் இப்படிச் சொன்னதும், மறுமொழி சொல்வதற்கு ஆயத்தமானான் பூபதி.

''உதயசந்திரரே! நீங்கள் சொன்னது உண்மையான பேச்சு. இன்று காலையிலிருந்து நான் இந்தத் தீவின் வேந்தன் என்றீர்கள். அப்படியானால் வேந்தன் தன்னுடைய முடிவைத் தெரிவிப்பது கடற்கரையிலே யில்லை. அரச மன்றத்திலேதான்!''

இப்படிச் சொன்னபோது பூபதியின் சொற்களில் ஒரு பெருமிதம், ஒரு தன்னம்பிக்கை, உள்ளத்தின் சலனங்களைக் கடந்த ஓர் உறுதி, இத்தனையும் ஒலித்தன! இதைக் கவனித்த உதயசந்திரன் மேலே பேசவில்லை.

''துறவிகளே! இனி மன்னரோடு வாதாடுவது நமக்கு அழகில்லை. வேந்தரை மாளிகையிலே சேர்க்க வேண்டியதுதான் நமது கடமை!''

இப்படிக் கூறிவிட்டு உதயசந்திரன் பூபதியோடு சேர்ந்து நடந்தார். துறவிகளும் பின்தொடர்ந்தார்கள்.

சித்திராங்க பூபதியும் துறவிகளும் வலம்புரி அரண்மனையிலே நுழைந்ததும், இவர்களுக்காகச் செய்யப்பட்ட வரவேற்புகளைப் பார்த்தால் மற்றவர்களுக்கு வியப்பு உண்டாகி யிருக்கும். ஆனால் பூபதி வியப்படையவில்லை. உதயசந்திரனுடைய சாமர்த்தியமான முன்னேற்பாடுகளைப் பற்றி நன்கு அறிந்த பூபதி, வலம்புரி அரச மாளிகை தன் வரவை முன்னதாகவே அறிந்து அந்த வரவுக்காகக் காத்திருந்தது குறித்து வியப்படையவில்லை.

வலம்புரி அரண்மனையில், கடல் கடந்து சென்று பல எதிர்பாராத சம்பவங்களுக்கு உள்ளாகி மீண்டும் திரும்பி வந்திருக்கிற அரசகுமாரனுக்கு என்னென்ன கோலாகலங்களுடன் வரவேற்பு நடக்க வேண்டுமோ அத்தனையும் நடைபெற்றன! நிமித்திகரும், குருக்களும், பெரியோர்களும் ஆசி நல்கினார்கள். மங்கள வாத்தியங்கள் முழங்கின. மாதர்கள் வாழ்த்துப் பாடல்கள் பாடித் தங்கள் அன்புக்கு உரிய அரசகுமாரனை வரவேற்றார்கள்.

இத்தனை ஆர்ப்பாட்டங்களுக்கு பத்தியிலும் சித்திராங்க பூபதி சலனமின்றிக் காணப்பட்டான். வரவேற்புச் சம்பிரதாயச் சடங்குகள் முடிந்ததும் நேரே அரச மாளிகையின் மேல் மாடிக்குச் சென்றான் அவன்.



தந்தப் பேடகத்தை அன்னையின் பாதங்களிலே வைத்து வணங்கும் போது மட்டும் பூபதியின் கண்கள் சற்றுக் கலங்கின. ஆனால் அந்தக் கலக்கத்தின் பொருளை அறிந்தவர்கள் வேறு யார் அங்கு உண்டு?

''அன்னையே! தந்தப்பேடகம் எனக்கு வழித்துணையாக உதவிற்று. அதை மறந்தபோது இடரில் சிக்கினேன். அதை நினைத்தபோது இடர்களை வென்றேன். மொத்தத்தில் என்னுடைய யாத்திரை வெற்றி யாத்திரைதான்! உதயசந்திரனுடைய சாமர்த்தியமான ஏற்பாடுகளினால் யாழும், யாழை வாசிக்க வேண்டிய நங்கையும் இந்தத் தீவுக்கு வந்து சேர்ந்தாயிற்று. இனிமேல் எனக்கு என்ன கட்டளையிடப் போகிறீர்கள் என்பதையும் நான் அறிவேன்! மகாராணியாரே! இனி நான் இந்தத் தீவின் அரசன்! வலம்புரித் தீவிலே பரம்பரைபரம்பரையாகவாழ்ந்துவரும் தமிழ்க் குலத்துக்குத் தலைவன் நான்! அந்தப் பொறுப்பை நன்றாக உணர்கிறேன்! என்றாலும் ஒன்றே ஒன்றுதான் எனக்குப் பெரிய அதிசயமாக இருக்கிறது! ஒரு நாட்டை ஆளவேண்டிய பொறுப்பு என்றால் அதை ஏதோ சாமானியமாகத்தான் நினைத்தேன். தங்கத்தினால் செய்த மகுடத்தைத் தலையிலே தாங்குவதில் இத்தனை பாரம்

இருப்பதாக எனக்கு நேற்றுவரை தெரியவில்லை. இப்பொழுதுதான் தெரிகிறது!'' என்றான் பூபதி.

மகாராணி தம்முடைய அருமை மகனின் முகத்தையே கூர்ந்து பார்த்தார். சொன்னார் :

''மகனே! நேற்றுவரை இல்லாதபடி இன்று அப்படி என்ன உண்மையைக் கண்டுபிடித்தாய்?''

''அம்மா! இந்த உலகில் வாழ்வைத் துறந்த துறவிகளைக் கையெடுத்துக் கும்பிடுகிறோம். அதுநியாயம். துறவிகள் எல்லாரும் தெய்வத்துக்குச் சமானமானவர்கள். ஒப்புக் கொள்கிறேன். ஆனால் வேந்தர்களை யெல்லாம் நம்முடைய தமிழ் மக்கள் தெய்வத்துக்குச் சமானமாக எண்ணி ஏன் வழிபட்டார்கள் என்று நேற்றுவரை எனக்குப் புரியாமல் இருந்தது! இன்றுதான் அதைப் புரிந்து கொண்டேன்!'' என்றான் சித்திராங்க பூபதி.

''நீ என்ன சொல்கிறாய்?'' என்று ஆவலோடு கேட்டாள் மகாராணி.

''அம்மா! அரசவாழ்வு என்றால் சுக போகங்கள் என்று நேற்றுவரை நினைத்தேன். இன்றுதான் உண்மை புலனாயிற்று. அரச வாழ்வுக்கும் ஒரு துறவியின் வாழ்க்கைக்கும் வித்தியாசமே இல்லை. இதயத்தையும் அதன் சொந்த விருப்பு வெறுப்புக்களையும் கடந்து நின்று, தனது நாடு தனது மக்கள் என்ற உணர்ச்சியிலேயே ஒவ்வொரு காரியத்தையும் செய்யவேண்டும் என்ற நிலை ஏற்பட்டுவிட்டால், அதை விடப் பெரிய துறவு என்ன இருக்கிறது, இந்த உலகத்தில்! யோசித்துப் பார்த்தால் ஒரு வேந்தனுக்கு இன்னும் அதிகப்படியான ஒரு கஷ்டங்கூட இருக்கிறது! தனக்குப் பிடிக்காத விஷயங்களை மறந்து விட்டு ஒரு துறவி வாழ முடியும். ஆனால் வேந்தன் அப்படி யில்லை. தனக்குப் பிடிக்காத விஷயங்களோடும், தன் மனத்துக்கு ஒவ்வாத மனிதர்களோடும் சூழ்நிலைகளோடும் பழகித் தீரவேண்டியிருக்கிறது. அதுமட்டுமில்லை. கடமை என்று ஒன்று ஏற்பட்டுவிட்டால், அதற்காக ஒரு வேந்தன் அவனுக்குப் பிடிக்காத பொருள்களைக்கூட அன்போடு ஏற்றுக் கொண்டு, உண்மையிலேயே அன்பு செலுத்த வேண்டியதிருக்கிறது. இதுதான் வேந்தன் செய்கிற தவம்!''

இவ்வாறு கூறினான் பூபதி. மகாராணிக்குக் கண் கலங்கியது. அந்தக் கலக்கத்தில் மகிழ்ச்சி ஒரு பக்கமும், அநுதாபம் ஒரு பக்கமும் ஒன்றையொன்று மோதின! அன்னையின் இந்த உணர்ச்சி மோதலைக் கவனித்த பூபதி மன உறுதியோடு சொன்னான் :

''அம்மா! நீங்கள் கவலைப்பட வேண்டாம். நீங்கள் என்னிடம் அநுதாபப் படவேண்டிய அவசியமும் இல்லை. இத்தீவின் அரசனாகிய சித்திராங்கன் தியாகசீலர்களான தமிழ் அரசர்களின் பரம்பரையிலே வந்தவன். தனது முன்னோர்களின் பண்பாட்டைப் பூரணமாக இப்போது உணர்ந்துவிட்டவன்! அவன் தன்னுடைய தாய்நாட்டுக்காகத் தனது காதலைத் தியாகம் செய்வான். அவனுக்காக நீங்கள் அநுதாபப்பட வேண்டாம். அநுதாபப் படவேண்டியவள் அவனுடைய காதலுக்குப் பாத்திரமான நங்கைதான்! ஆனால் அவளுக்கும் உங்களுடைய அநுதாபமோ அல்லது என்னுடைய அநுதாபமோ அல்லது இந்த நாட்டு மக்களின் அநுதாபமோ அவசியமே இல்லை. தன்னுடைய தாய் நாட்டுக்காகத் தனது உயிரையே தியாகம் செய்த மகா உத்தமியான சாருகேசியின் குலக்கொழுந்து அவள்! தன் தாயின் பண்புகளைப் பிறவியிலேயே உரிமையாக உடையவள், உங்கள் மகனுடைய அன்புக்குப் பாத்திரமான யாழ் நங்கை! அவளுடைய அன்னை இந்தப் புண்ணிய பூமியான வலம்புரித் தீவுக்காகத் தனது உயிரையே தியாகம் செய்தாள். மகளோ இந்தப் புண்ணியத் திரு நாட்டுக்காகத் தனது காதலைத் தியாகம் செய்வாள்! உயிரைத் தியாகம் செய்வது எளிது. ஏனென்றால் இந்த உடலின் பாரம் மரணத்தோடு தீர்ந்துவிடுகிறது! ஆனால் உணர்ச்சிகளைத்



தியாகம் செய்து விட்டு உயிரோடு இந்தப் பூமியிலே வாழ்வது அத்தனை எளிதில்லை. ஆனால் அதற்கும் ஒரு அற்புதமான சாதனம் அந்த நங்கையின் கையில் இருக்கிறது! தேவதைகளை ஆவாகனம் செய்து தெய்வ அருளைப் பொழிகிற புனிதமான பேரியாழ் அந்த நங்கையின் கையிலே தவழ்கிறவரை அவளுக்கு உடலின் பாரத்தைப் பற்றிக் கவலையே இல்லை!''

இப்படிச் சொல்லும்போது சித்திராங்க பூபதியின் குரல் கம்மிற்று. அந்தக் குரலை உறுதியோடு சரிப்படுத்திக் கொண்டான் பூபதி.

## இருபத்தெட்டாம் அத்தியாயம்

# நந்திபுரம் கோட்டை

வலம்புரித் தீவில் பூபதியையும் அவனுடைய வாழ்வையும் சுற்றி இத்தனை சம்பவங்களும் வாயு வேகத்தில் சுழன்று கொண்டிருந்த தருணத்தில், தமிழ் நாட்டிலே வீரவிக்கிரமனுடைய சதியாலோசனைகளும் மும்முரமாகச் சுழன்று கொண்டிருந்தன.

வலம்புரித் தீவை நோக்கிச் சென்ற கடற்படை உதயசந்திரனுடைய எதிர்பாராத பிரவேசத்தினால் தோல்விக்கு உள்ளாகித் தமிழ்நாடு திரும்பியது. பாண்டியர்களின் தலைநகரான மதுரையை நோக்கி வீரவிக்கிரமனும் அவனோடு சென்ற பாண்டிய வீரர்களும் சோகத்தோடு திரும்பினார்கள்!

பாண்டியர்களுக்கு மிகவும் நெருங்கிய உறவினனான சித்திரமாயனிடத்தில் பாண்டிய மன்னனைப் போலவே பாண்டிமா தேவிக்கும் பூரணமான அநுதாபம் இருந்தது. பாண்டியர்களின் குடும்பத்தில் திருமணம் செய்து கொள்ளக் கூடிய உறவு முறைகூடச் சித்திரமாயனுக்கு இருந்தது. எனவே அந்த அரண்மனை முழுதும் சித்திரமாயனுடைய கட்சிக்கு அளவு கடந்த ஒரு அநுதாபம் இருந்தது.

இப்படிப்பட்ட பல காரணங்களும் ஒன்று சேர்ந்து பாண்டிய அரசனுடைய பிரதானிகளின் சூழ்ச்சியை ஊக்கி வந்தன. ஏற்கனவே பல்லவர்களின் வீழ்ச்சிக்கு உரிய சரியான தருணத்தை ஒவ்வொரு நாளும் எதிர்பார்த்து வந்த பாண்டியர்களுக்கு, சித்திரமாயனுடைய துயரக் கனல் நெருப்பாகப் படர்ந்தது! இப்பொழுது உதயசந்திரனும் காஞ்சிமா நகரை விட்டுக் கடற்படையோடு வலம்புரித் தீவை நோக்கிச் சென்றிருக்கிறான் என்ற செய்தி கிடைத்ததும், மதுரை அரச மாளிகையிலே எல்லாப் பிரதானிகளும் கூடினார்கள்.

''காஞ்சிமா நகரில் இப்பொழுது நந்திவர்மனுக்குச் சரியானபடி பக்கபலம் இல்லை. இரணிய வர்மர் திறமைசாலிதானென்றாலும், உதயசந்திரன் அங்கு இல்லாதது அவருக்கு வலது கை ஒடிந்தது போலத்தான்! எனவே இந்தச் சரியான தருணத்தில் காஞ்சிமா நகரைப்படையெடுத்துத் தாக்கினால், நந்திவர்மனும் இரணிய வர்மரும் திகைத்துப் போய் விடுவார்கள். அவர்களை முறியடித்துக் கோட்டையைக் கைப்பற்றுவதற்கு இதைவிடச் சிறந்த சமயம் வாய்க்காது!''

இவ்வாறு பேசினார்கள் பாண்டியர்களின் அமைச்சர்கள். இந்த யோசனை பலருக்கும் பிடித்திருந்தது. இதோடு இன்னொரு சூழ்நிலையும் சேர்ந்து அவர்களுக்கு அதிக ஊக்கத்தைக் கொடுத்தது. அதாவது வடக்கிலிருந்து எதிரிகள் காஞ்சிமா நகரைத் தாக்குவதற்குச் சரியான சமயத்தை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள் என்றும், இந்தத் தருணத்தில் உதயசந்திரன் காஞ்சிமா நகரில் இல்லை என்ற செய்தி அவர்களுக்கே கிடைக்குமானால் அவர்களும் காஞ்சிமா நகரை வடக்கிலிருந்து தாக்குவார்கள் என்றும் பாண்டிய அமைச்சர்கள் எதிர்பார்த்தார்கள்!

''இந்த விஷயத்தில் நிதானமாக யோசித்து ஒரு முடிவுக்கு வருவோம் என்று நினைப்பது தவறு. காலம் தாழ்த்தினோமானால் எதிரி நம் கையில் சிக்காமல் தப்பி விடுவான்! எனவே வடக்குப் பிராந்தியங்களுக்கு இரகசியச் செய்தி அனுப்புவது ஒருபுறம் நடைபெற வேண்டும். அதே சமயம் நாம் நமது ஆட்சிக்கும் செல்வாக்குக்கும் உட்பட்ட தெற்கு மண்டலாதிபதிகள் அனைவரையும் ஒன்று சேர்த்துக் கொண்டு பல்லவர்களைத் தாக்க வேண்டும்.''

இவ்வாறு கூறினார் பாண்டியப் பிரதானிகளின் முக்கியமான ஏனாதி.

இதன் பிறகு இந்த யோசனையை மற்றப் பிரதானிகளும் தங்களுக்குள் கலந்து விவாதித்தார்கள். கடைசியில் எல்லாரும் இதை அங்கீகரித்தார்கள்.

பாண்டிய நாட்டிலிருந்தும் தெற்கு மண்டலங்களாகிய சிறுசிறு அரச வட்டங்களிலிருந்தும் பல்லவர்களை ஒரே ஆவேசத்தோடு எதிர்ப்பதற்குப் பெரும் படை திரண்டது. காஞ்சிமா நகரின் காவலைச் சின்னாபின்னம் செய்வது

# மக்ளீன்ஸ் இப்போது

## பற்களை முன்னைவிட அதி வெண்மையாக சுத்தம் செய்கிறது !

மகத்தான ஓர் செய்தி! மக்ளீன்ஸ் தயாரிப்பில் இப்போது வியக்கத் தக்கதோர் புதிய பொருள் சேர்க்கப்படுவதால் அதை உபயோகித்து பற்களைச் சுத்தம் செய்யும் பொழுது பற்கள் முன்னைவிட அதி வெண்மையாகவும் சுத்தமாகவும் விளங்குவதுடன் நல்ல ஆரோக்கியத்தைக் குறிக்கின்றது. நீங்களும் மக்ளீன்ஸ் பற்பசையை உபயோகித்து உங்கள் பற்கள் எவ்வளவு வெண்மையாக விளங்குகின்றன என்று கவனியுங்கள்.




## மக்ளீனல் வெண்மையாக்கப்பட்ட பற்கள்

### ஆரோக்கியமானதுமட்டுமல்லாமல் பற் சிதைவினின்றும் காப்பாற்றப்படுகின்றன.

மக்ளீன்ஸ் பற்பசையினால் பற்களை சுத்தம் செய்யுங்கள். முதலில் குளுமையும் புதுமை மணம் கமழுவதையும் உணர்வீர்கள். பின்பு பற்கள் முன்னைவிட அதி வெண்மையாக சுத்தம் செய்யப்பட்டிருப்பதை குறிக்கின்றது.

உங்களுடைய பற்களின்மேல் படர்ந்திருக்கும் வழுவழுப்பான அசுத்தத்தில் 'ஃபைபாலிட்ஸ்' என்று கூறப்படும் அசுத்தம் கலந்திருக்கிறது. இந்த 'ஃபைபாலிட்ஸ்' முறையே சரிவர அகற்றப்படாவிட்டால் அமிலங்கள் பற்களின் இனாமலை அரித்து, பற்கள் சிதைவடைகின்றன. 'ஃபைபாலிட்ஸ்'லை அறவே அகற்ற, இதை கரையச் செய்வதுதான் சரியான வழி. மக்ளீன்ஸ் பற்பசை ஒன்றில் மட்டுமே 'ஃபைபாலிட்'லை கரைக்கக்கூடிய விசேஷ பொருள் சேர்க்கப்பட்டிருக்கிறது. இது 'ஃபைபாலிட்'லை மிருதுவாக, அபாயமின்றி, சீக்கிரத்தில் கரைத்து அப்புறப்படுத்துகிறது. இதுவே பற்சிதைவினின்றும் பற்களைத் தவிர்ப்பதற்கான சிறந்த மார்க்கம்.

சுத்தமான, வெண்ணிற, ஆரோக்கிய பற்களை அடைய தினந்தோறும் காலையிலும் இரவிலும் மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசையை உபயோகித்து பற்களைச் சுத்தம் செய்யுங்கள்.




மக்ளீன்ஸ் பற்களை அதிவெண்மையாக சுத்தம் செய்கிறது.

MTY 43 TAM.

**மக்ளீன்ஸ் பிக்சர் க்ளப்—சினிமா உலகத்தின் சம்பந்தமுடைய செய்திகளும் சங்கீதமும் சேர்ந்த இந்நிகழ்ச்சியைப் பிரதி திங்கட்கிழமைதோறும் இரவு 8-30 முதல் 9 மணி வரை ரேடியோ சிலோன் 41 மீட்டர்களில் கேளுங்கள்**

என்றும், அத் தோகை மயில் போன்ற கோட்டையைத் தகர்த்துப் பொடிப் பொடியாக்குவது என்றும், பல்லவ மன்னனை இளைஞன் நந்திவர்மனைச் சிறை பிடிப்பது என்றும், அவன் வீற்றிருந்த அரச பீடத்தில் சித்திரமாயனை அமர்த்துவது என்றும் உறுதி யெடுத்தார்கள் படைத் தலைவர்கள்.

வலம்புரித் தீவிலே தனது தாய் நாட்டுக்காக அந்தத் தீவின் அரசன் தனது காதலைத் தியாகம் செய்யத் துணிந்து நின்ற சமயம் அது! வலம்புரித் தீவிலே தனது தாய்நாட்டுக்காகத் தனது உயிரைத் தியாகம் செய்த வீராங்கனையின் புதல்வி, தனது தாய்நாட்டின் எதிர்கால அரச உறவுக்காகத் தனது காதலைத் துறந்து கையிலே பேரியாழைத் தாங்க வேண்டும் என்ற முடிவு உருவாகிக் கொண்டிருந்த சமயம் அது!



இத்தனை சம்பவங்களையும் சாமர்த்தியமாக இயக்கிக் கொண்டிருந்த அரசியல் மேதையான உதயசந்திரன் தமிழ் நாட்டில் இல்லாத சமயம் அது! அந்த அரிய சமயத்தில்தான் நந்திவர்மனுடைய பகைவர்கள் நந்தி வர்மனை எதிர்த்து முறியடிப்பதற்காக ஒன்று சேர்ந்துபுறப்பட்டார்கள்!

தான் காஞ்சிமா நகரில் இல்லை என்பதை அறிந்து, எதிரிகள் இந்தக் கோட்டையைத் தாக்கக் கூடும் என்பதை இரணிய வர்மரிடம் ஏற்கனவே முன்னறிவிப்புச் செய்தவர் அல்லவா உதயசந்திரன்? அவர் கூறிய விஷயங்கள் அத்தனையும் அப்படியே உண்மையாக நடந்தன!

எந்த நந்திவர்மனுக்காக இத்தனை பெரிய போர் முயற்சிகள் நடந்தனவோ, எந்த நந்திவர்மனுக்காக உதயசந்திரன் இத்தனை தூரம் அல்லும் பகலும் பாடுபட்டாரோ, அதே நந்திவர்மனைக் கவிழ்ப்பதற்கான ஏற்பாடுகள் இப்பொழுது மிக்க வேகமாக நடைபெற்றன!

பாண்டியர்கள் இப்படித் திடீரென்று நந்திவர்மனைத் தாக்குவார்கள் என்று இரணிய வர்மர் எதிர்பார்க்கவில்லை. காஞ்சிமா நகரின் கோட்டைக்கு அப்படிப்பட்ட கேடு ஒன்று ஏற்படக் கூடும் என்று இரணிய வர்மர் சிந்திக்கவே இல்லை. உதய சந்திரன் காஞ்சிமா நகரின் கோட்டையிலே அரச மாளிகையின் சயன அறையிலேயிருந்த நந்தா விளக்குக்கு அருகில் இரணிய வர்மரை அழைத்துச் சென்று அவருக்கு அந்த இரகசியப் பாதையைக் காட்டியபோது கூட இரணிய வர்மர் அந்தப் பாதையை உபயோகிக்க வேண்டிய அவசியம் தமக்கு நேரும் என்று நினைக்கவில்லை! ஆனால் நடந்தது என்ன?

உதயசந்திரன் தமிழ் நாட்டு அரசியல் அரங்கிலிருந்து மறைந்திருந்த அந்தச் சமயத்தில், பாண்டியர்களும் அவர்களுக்குத் துணையாக மற்ற மண்டலாதிபதிகளும் சேர்ந்து நந்திவர்மனை எதிர்த்துப் போரிட்டார்கள் என்பது தமிழ் நாட்டின் சரித்திரத்தில் மிகவும் முக்கியமானதோர் நிகழ்ச்சி. வடக்கிலிருந்தும் தெற்கிலிருந்தும் எதிரிகள் பல்லவர்களைத் தாக்க ஆரம்பித்தபோது, நந்திவர்மனும் அவனுடைய தந்தையும் உண்மையிலேயே திகைத்தார்கள். வாழ்வில் முதன் முதலாக நந்திவர்மன் அப்பொழுதுதான் போர் என்பதன் தன்மையை உணர்ந்தான்! இரணியவர்மர் தம் அருமை மகனை நந்திவர்மனை அவர் ஒரு கோழையாகச் செய்து விடவிரும்பவில்லை. பல்லவ பீடத்தை ஏற்று வகிக்கக்கூடிய ஆற்றல் நிரம்பிய ஒரு பேரரசனாக அவனை உருவாக்க வேண்டும் என்பதே அவருடைய இலட்சியம். ஆனால் எதிரிகளின் படை பலமும், படையெடுப்பும் அவரைக் கதி கலங்கச் செய்தன.

தமிழ் நாட்டுப் பல்லவர்களின் ஆட்சியை வரலாற்று முறையில் வகைப்படுத்திக் கூறும் அறிஞர்கள் எல்லாரும் நந்திவர்மனுடைய வாழ்வில் ஏற்பட்ட இந்த அநுபவத்தை வண்ண வண்ணச் சொற்களிலே வர்ணித்துக் கூறியிருக்கிறார்கள். எதிரிகளுடைய ஆவேசமான தாக்குதலின் காரணமாக நந்திவர்ம பல்லவன் காஞ்சிமா நகரத்துக் கோட்டையிலிருந்து தப்பி நந்திபுரம் கோட்டைக்குள்ளே போய்த் தங்கிய சம்பவத்தைத் தமிழன் வெட்டிய கல் பேசுகிறது! தமிழன் கட்டிய கோவில் கூறுகிறது! நந்திபுரம் கோட்டையிலே போய் நந்திவர்மன் தங்கிக் கொண்டிருந்த போது தான், அரசியல் நிகழ்ச்சிகளையே யாரும் எதிர்பாராத வண்ணம் அடியோடு மாற்றிவிட்ட ஒரு முக்கிய சம்பவம் நடந்தது! அந்தச் சம்பவத்துக்குக் காரண புருஷராக விளங்கியவர் உதயசந்திரன்தான்! (அடுத்த இதழில் முடியும்)

Printed and Published by T. Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10
for the Proprietors Messrs Bharathan Publications Private Limited
Managing Editor: T. Sadasivam.

Registered No. M. 4392
Registered as a Newspaper in Ceylon